# மக்ஸீம் கார்க்கி

# 1

# தேர்ந்தெடுத்த கதைகள்



ராதுகா பதிப்பகம்

# மக்ஸீம் கார்க்கி

## தேர்ந்தெடுத்த கதைகள்

மூன்று தொகுதிகளில்

முதல் தொகுதி



ராதுகா பதிப்பகம்
மாஸ்கோ



விற்பனையாளர்கள்
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்
பிரைவேட் லிமிடெட்
சென்னை

மொழிபெயர்ப்பாளர்: **பூ. சோமசுந்தரம்**
திருத்திய வடிவமைப்பாளர்: **நா. முகம்மது செரீபு**
வடிவமைப்பாளர்: **கெ. குபானவ்**

**Максим Горький**

ИЗБРАННЫЕ РАССКАЗЫ
В 3х ВЫПУСКАХ

**Выпуск 1**

*На тамильском языке*

**Maxim Gorky**

SELECTED STORIES
IN THREE PARTS

Part 1

*In Tamil*


சோவியத் நாட்டில் அச்சிடப்பட்டது

ISBN 5-05-002327-0

## பொருளடக்கம்

# ஜிப்ஸி

கடலிலிருந்து வீசிய ஈரித்த குளிர் காற்று கரையில் மோதிய அலைகளது ஓசையின் சிந்தனை நிறைந்த இசையையும் கரையோரப் புதர்களின் சலசலப்பையும் ஸ்தெப்பி வெளியில் பரப்பியது. சில வேளைகளில் காற்றின் வீச்சுக்கள் சுருக்கம் விழுந்த மஞ்சள் இலைகளை வாரி வந்து நெருப்பில் போட்டுத் தழலை மூண்டெரியச் செய்தன. அப்போது எங்களைச் சூழ்ந்திருந்த இலையுதிர் கால இரவின் இருட்டு திடுக்கிட்டு, மிரட்சியுடன் நகர்ந்தது. இடப்புறம் எல்லையற்ற ஸ்தெப்பி வெளியும் வலப்புறம் எல்லையற்ற கடலும் எனக்கு நேர் எதிரே ஜிப்ஸிக் கிழவன் மகார் சுத்ராவின் உருவமும் கணப்போது தோற்றம் அளித்தன. எங்களுக்கு ஓர் ஐம்பது அடி தூரத்தில் இருந்த தன் ஜிப்ஸி முகாமின் குதிரைகளை அவன் காவல் காத்துக் கொண்டிருந்தான்.

சில்லிடும் காற்று அலைகள் சட்டையை விரித்து அவனுடைய மயிரடர்ந்த மார்பை வெளிக்காட்டி இரக்கமின்றி அடித்தன. அவனோ,

அதைப் பொருட்படுத்தாமல் என் பக்கம் முகத்தைத் திருப்பியவாறு அழகும் வலிமையும் மிளிரும் பாங்கில் பாதி படுத்து, தன் பிரமாண்டமான சுங்கானிலிருந்து புகையை ஒரு சீராக இழுத்து அடர்ந்த புகைப் படலங்களை வாயாலும் மூக்காலும் விட்டுக் கொண்டிருந்தான். அவனது விழிகள் என் தலைக்கு மேலாக ஸ்தெப்பியின் உயிரற்ற மௌன இருட்டில் எங்கோ அசைவின்றி நிலைத்திருந்தன. காற்றின் கடும் தாக்குதல்களிலிருந்து தப்பும் பொருட்டு ஓர் அங்க அசைவுகூடச் செய்யாமல் அவன் வாய் ஓயாமல் என்னோடு பேசிக்கொண்டு போனான்.

''அப்படியானால், நீ சுற்றுப் பயணம் செய்கிறாயா? இது நல்லது! நீ தெரிந்தெடுத்தது அருமையான வேலை, தம்பி. அப்படித்தான் செய்ய வேண்டும்: எங்கும் சுற்றிப் பார், திருப்தி ஆகிவிட்டதும் படுத்து உயிரை விடு. அவ்வளவு தான்!''

'அப்படித்தான் செய்ய வேண்டும்' என்று அவன் சொன்னதை நான் மறுத்தேன். என் சொற்களை இகழ்ச்சியுடன் முடிவு வரை கேட்டுவிட்டு அவன் தொடர்ந்தான்: ''வாழ்க்கையா? வேறு மக்களா? கெக்கே! உனக்கு எதற்கு இதெல்லாம்? நீ யார், வாழ்க்கை இல்லையோ? மற்றவர்கள் நீ இல்லாமலே வாழ்கிறார்கள், மேற்கொண்டும் நீ இல்லாமலே வாழ்வார்கள். நீ யாருக்கேனும் வேண்டும் என்று எண்ணுகிறாயோ? நீ ரொட்டி அல்ல, ஊன்றுகோல்

அல்ல. உன்னுடைய தேவை ஒருவருக்கும் கிடை யாது.

"கற்கவும் கற்பிக்கவும் வேண்டும் என்கிறா யா? மக்கள் இன்பம் பெறச் செய்யும் வித்தை யைக் கற்க உன்னால் முடியமா? ஊகும். முடி யாது உன்னால். கொஞ்சம் தலை நரைக்கும் வரை பொறுத்திரு முதலில். அப்புறம் சொல்லு, என்ன கற்பிக்க வேண்டும் என்று. எதற் குக் கற்பிக்க வேண்டும்? தனக்கு வேண்டியது என்ன என்பது ஒவ்வொருவனுக்கும் தெரியும். புத்திசாலிகளோ, இருப்பதை எடுத்துக்கொள் கிறார்கள். அசடர்களுக்கோ, ஒன்றுமே கிடைப்ப தில்லை. தவிர, அவனவன் தானே கற்றுக் கொள்கிறான்...

"வேடிக்கையானவர்கள், உன்னுடைய இந்த மனிதர்கள். ஒரே கும்பலாகக் குமைந்து ஒருவரை ஒருவர் நசுக்குகிறார்கள். உலகத்தி லே, பார், இடங்கள் எவ்வளவு நிறைய," என்று ஸ்தெப்பியின் பக்கம் கையை அகல வீசினான். "அப்புறம், ஓயாமல் வேலை செய்கிறார்கள். எதற்காக? யாருக்காக? ஒருவனுக்கும் தெரி யாது. மனிதன் உழுவதைப் பார்க்கும்போது, அவன் வியர்வைத் துளியோடு தன் சக்தியையும் நிலத்தில் பெருக்குகிறான் என்று எண்ணத் தோன்றுகிறது. பின்னால் அதிலேயே கிடந்து அதிலேயே மக்கிப் போகிறான். அவனைச் சேர்ந் தது எதுவும் மிஞ்சுவதில்லை. தனது வயலிலி ருந்து எதையும் அவன் பார்க்கவில்லை. எப் படிப் பிறந்தானோ அப்படியே—முட்டாளாக —இறந்து போகிறான்.

“அவன் என்ன, தரையை நோண்டவும் தனக்குச் சவக்குழி கூடத் தோண்டிக்கொள்ள நேரம் இல்லாமல் மடியவுமா பிறந்தான்? அவனுக்குத் தெரியுமா விடுதலை என்ன என் பது? ஸ்தெப்பி வெளியின் பரப்பு புரியுமா? கடல் அலையின் பேச்சு அவன் நெஞ்சுக்குக் களிப்பூட்டுமா? அவன் அடிமை—பிறந்ததுமே அடிமை ஆகி விட்டான், வாழ்நாள் முழுவதற் கும். அதுதான் விஷயம்! அவனால் என்ன செய்ய முடியும்? கொஞ்சம் புத்தி வந்தால் சுருக்குப் போட்டுக் கொள்ள முடியும், அவ் வளவுதான்.

“நானே, இந்த ஐம்பத்தெட்டு வயதுக்குள் ளே எவ்வளவோ பார்த்து விட்டேன். நான் கண்டதை எல்லாம் காகிதத்தில் எழுதினால் உன்னிடம் இருக்கிறதே பை, இது மாதிரி ஆயிரம் பைகளில் கூடக் கொள்ளாது, தெரியுமா? எங் கே, சொல்லு பார்க்கலாம், எந்த இடங்களுக்கு நான் போகவில்லை என்று! உன்னால் சொல்ல முடியாது. நான் போயிருக்கிற இடங்கள் உனக் குத் தெரியக் கூடச் செய்யாது. எப்படி வாழ வேண்டும் என்றால் போய்க்கொண்டே இருக்க வேண்டும், அவ்வளவுதான். ஓரே இடத்தில் நிரம்ப நேரம் நிற்கக் கூடாது—அதிலே என்ன இருக்கிறது? பகலும் இரவும் ஒன்றை ஒன்று துரத்திக்கொண்டு பூமியைச் சுற்றி ஓடுகின்ற னவே, அதே மாதிரி வாழ்க்கையைப் பற்றிய சிந்தனையிலிருந்து ஓட வேண்டும்—அதன் மேல் கசப்பு ஏற்படாமல் இருப்பதற்காக. ஆழ்ந்து யோசனை செய்தோமோ, வாழ்க்கை

கசந்து விடும். எப்போதும் இப்படி நடக்கும். எனக்கும் இப்படி நேர்ந்தது. கெக்கே! நேர்ந் தது, தம்பி.

''நான் சிறையில் இருந்தேன், கலீத்ஸியா பிரதேசத்தில். 'நான் உலகத்தில் எதற்காக வாழ்கிறேன்?' என்று சலிப்போடு எண்ணமிட் டேன். சிறையில் சலிப்பாய் இருந்தது, தம்பி. அட, எவ்வளவு சலிப்பாய் இருந்தது, தெரி யுமா? பலகணி வழியாகத் திடல் மேல் கண் ணோட்டிய போது ஏக்கம் என் நெஞ்சைக் கவ் விக்கொண்டு கிட்டிபோட்டு நெருக்கிற்று. எதற் காக வாழ்கிறான் என்று எவன் சொல்லுவான்? ஒருவனும் சொல்ல மாட்டான், தம்பி! நம்மிடம் இந்தக் கேள்வியைக் கேட்கவும் தேவையில்லை. வாழ்ந்து கொண்டிரு, அவ்வளவுதான். அதோடு நடந்து கொண்டே இரு, சுற்றிலும் பார்வை யைச் செலுத்து, ஒருபோதும் ஏக்கமே உண்டா காது. சிறைச்சாலையில் நான் இடுப்புக் கயிற் றால் தூக்குப் போட்டுக்கொள்ள இருந்தேன், அவ்வளவு ஏக்கம்!

''ஏதோ! ஓர் ஆளிடம் பேசினேன். கண் டிப்பான மனிதன், உங்களவன், ருஷ்யன். நாம் விரும்புகிற மாதிரி வாழக் கூடாது, வேதா கமத்தில் சொல்லி இருக்கிறபடி வாழ வேண் டும் என்றான். கடவுளைப் பணி, நீ கேட்பதை எல்லாம் அவர் தருவார் என்று சொன்னான். அவன் போட்டிருந்ததோ, ஒரே கந்தல், கிழிசல். கடவுளிடம் புத்தாடை கேட்டு வாங்கிக்கொள் ளேன் என்று சொன்னேன். அவனுக்குக் கோ பம் வந்துவிட்டது. என்னைத் திட்டி விரட்டி

விட்டான். அது வரையிலோ, மனிதர்களை மன்னிக்க வேண்டும், நேசிக்க வேண்டும் என்று சொல்லிக்கொண்டிருந்தான். என் பேச்சு துரை மகனாருக்கு உறைத்தது என்றால் என்னை யும் மன்னித்திருக்கலாமே அவன். உபதேசம் பண்ண வந்துவிட்டான், பெரிதாக! உண்டியைச் சுருக்கு என்று உபதேசிப்பார்கள், தாங்களோ, நாளுக்குப் பத்து வேளை தின்பார்கள்.''

மகார் நெருப்பில் துப்பி விட்டு, சுங்கானில் புகையிலையை மறுபடி திணித்தவாறு பேசா திருந்தான். காற்று முறையிடுவது போன்று மெல்லெனச் சீழ்க்கை அடித்தது. இருட்டில் குதிரைகள் கனைத்தன. ஆர்வம் பொங்கும், கனிவுள்ள பாட்டு ஜிப்ஸி முகாமிலிருந்து காற் றில் மிதந்து வந்தது. பாடியவள் அழகி நோன் கா, மகாரின் மகள். உள்ளத்திலிருந்து ஆழ்ந்து ஒலித்த அவளுடைய குரல் எனக்குப் பழக்க மானது. அவள் பாட்டுப் பாடினாலும் சரி, 'வணக்கம்' என்று சொன்னாலும் சரி, அவளு டைய குரல் அதிருப்தியுடனும் பிடிவாதத்து டனும் எப்போதும் விந்தையாக ஒலித்தது. அவளுடைய பழுப்பேறிய மங்கலான முகத்தில் அரசிக்குரிய இறுமாப்பு குடிகொண்டிருந்தது. தனது அழகின் எதிர்க்க முடியாத கவர்ச்சி பற்றிய உணர்வும் தன்னைத் தவிர மற்ற எல் லாரது மேலும் இகழ்ச்சியும் ஒருவகை நிழல் படிந்து சுரித்த அவளுடைய கரும் பழுப்புக் கண்களில் சுடர்ந்தன.

மகார் சுங்கானை என்னிடம் கொடுத்தான்.

''புகை! குட்டி நன்றாகப் பாடுகிறாள், இல்

லையா? அப்படிச் சொல்லு! இந்த மாதிரிப் பெண் உன்னைக் காதலிக்க வேண்டும் என்று ஆசைப்படுகிறாயா? இல்லையா? நல்லது! அது தான் சரி. பெண்களை நம்பாதே, அவர்களிட மிருந்து ஒதுங்கிப் பிழை. பெண்ணுக்கு முத்தம் கொஞ்சுவது எனக்குச் சுங்கான் புகைப்பதை விட இன்பமானது. ஆனால் பெண்ணை முத் தம் இட்டதுமே உன்னுடைய நெஞ்சில் விடுத லை மடிந்து விடும். கண்ணுக்குத் தெரியாத ஒன்றால் அவள் உன்னைத் தன்னோடு கட்டிப் போட்டு விடுவாள். ஆனால் அதை அறுக்க முடியாது. உன் உள்ளம் முழுவதையும் நீ அவளுக்கு வழங்கிவிடுவாய். மெய்யாக! பெண் களைக் கண்டால் தூர விலகு! எப்போதும் பொய் பேசுவார்கள்! உலகத்தில் எல்லாவற் றையும் விட அதிகமாக உன்னைக் காதலிக் கிறேன் என்பாள் ஒருத்தி. எங்கே, அவளைக் குண்டூசியால் கொஞ்சம் குத்திப்பார், அவள் உன் நெஞ்சை வகிர்ந்து விடுவாள். எனக்குத் தெரியும்! ஏகே, எனக்கு எவ்வளவோ தெரி யும்! இந்தா, தம்பி, நடந்த கதை ஒன்றைச் சொல்லுகிறேன், கேட்கிறாயா? இதை நினை வில் வைத்துக்கொள். வைத்துக் கொண்டாயா னால் வாழ்நாள் பூராவும் கட்டில்லாத பறவை யாக இருப்பாய்.

‘‘ஜொபார் என்று இருந்தான் ஒரு ஜிப்ஸி இளைஞன், லோய்க்கோ ஜொபார் என்று. ஹங் கேரி பூராவும், சேக்கியாவும் ஸ்லவோனியாவும், கடலைச் சுற்றி உள்ள எல்லாத் தேசங்களும் அவனை அறிந்திருந்தன. துணிச்சல்காரப் பை

யன்! ஜொபாரைக் கொல்லுவதாக ஐந்து, பத்துப் பேர் சபதம் செய்யாத கிராமம் ஒன்று கூட அந்த வட்டாரங்களில் இருக்கவில்லை. ஆனாலும் அவன் தன் போக்கில் வாழ்ந்து வந்தான். அவனுக்கு ஏதோ ஒரு குதிரை பிடித்து விட்டால் அந்தக் குதிரைக்குக் காவலாக ஒரு முழுப் பட்டாளத்தை நிறுத்தினாலும் சரி, அவன் அதன் மேல் சவாரி செய்தே தீருவான்! ஏகே! அவன் யாருக்காவது பயந்தான் என்று நினைக்கிறாயா? கிடையாது. சாத்தான் தன் பேய்க் கூட்டம் முழுவதையும் திரட்டிக்கொண்டு ஜொபாரிடம் வந்தால் அவன் சாத்தானைக் கத்தியால் குத்தாவிட்டாலும் கடுமையாகத் திட்டி நொறுக்கியிருப்பான். பேய்கள், ஒவ்வொன்றின் மூஞ்சியிலும் ஓர் உதை கட்டாயம் கொடுத்திருப்பான்—இதில் சந்தேகமே கிடையாது!

''எல்லா ஜிப்ஸி முகாம்களும் அவனை அறிந்திருந்தன, அல்லது அவனைப் பற்றிக் கேள்விப்பட்டிருந்தன. அவனுக்குப் பிடித்தவை குதிரைகள் மட்டுந்தான், வேறு எதுவும் இல்லை, குதிரைகளும் கூட வெகு நேரத்திற்கு அல்ல. கொஞ்சம் சவாரி செய்வான், பின்பு விற்று விடுவான். பணத்தை யார் வேண்டுமானாலும் எடுத்துக்கொள்ளலாம். அவனுக்கு எதிலுமே ஆழ்ந்த பற்று கிடையாது: உனக்கு அவனுடைய நெஞ்சு வேண்டும் என்று வைத்துக்கொள். அவனே மார்பைப் பிளந்து நெஞ்சைப் பறித்து உன்னிடம் கொடுத்து விடுவான், அதனால் உனக்கு நன்மை ஏற்பட்டால் போதும். அப்படிப்பட்டவனாக்கும் அவன், தம்பி!

“அந்தக் காலத்தில் எங்கள் முகாம் புக்கோவினா பிரதேசத்தில் சுற்றிக்கொண்டிருந்தது. இது ஒரு பத்து ஆண்டுகளுக்கு முன்பு நடந்தது. ஒரு நாள்—வசந்தகால இரவில்—நாங்கள் சில பேர் உட்கார்ந்திருந்தோம்: நான், படைவீரன் தனீலோ—இவன் கோஷுத்தோடு சேர்ந்து போரில் ஈடுபட்டவன், கிழவன் நூர், மற்றவர்கள், தனீலோவின் மகள் ராத்தா எல்லாரும் இருந்தோம்.

“என் மகள் நோன்காவை அறிவாய் அல்லவா? பெண்ணரசி அவள்! ஊம், ஆனால் ராத்தாவை இவளோடு ஒப்பிடக் கூடாது, அது நோன்காவுக்கு நிரம்பப் பெருமை தருவதாகும். அவளை, இந்த ராத்தாவை, வார்த்தைகளால் வருணிக்கவே முடியாது. அவளுடைய அழகைப் பிடிலில் வேண்டுமானால் இசைக்கலாம். அதுவும் பிடிலைத் தன் சொந்த உள்ளம் போல அறிந்தவன்தான் இசைக்க முடியும்.

“எத்தனையோ வாலிபர்களுடைய நெஞ்சுகளைக் கருக்கிவிட்டாள் அவள். அடேயப்பா, நிறைய நெஞ்சுகளை! மொராவாவில் ஒரு பிரபு, கிழவன், முன்குடுமிக்கார உக்ரேனியன், அவளைக் கண்டு பிரமித்துப் போனான். குதிரையில் உட்கார்ந்து, காய்ச்சல் வந்தவன் போல நடுங்கியபடி அவளைப் பார்த்துக்கொண்டிருந்தான். அழகன் அவன், திருநாளில் சாத்தான் போல. கோட்டில் தங்கச் சரிகைப் பூத்தையல். குதிரை காலை லேசாக அடித்தபோது இடையில் வாள் மின்னல் போலப் பளிச்சிட்டது.

வாள் முழுவதும் நன் மணிகளால் இழைக்கப் பட்டிருந்தது. தொப்பியில் இளநீல மகமல் ஆகா யத்தின் துண்டு போல இருந்தது. கிழப் பிரபு பெரிய மிடுக்கன்! பார்த்துக்கொண்டே இருந் தவன், ராத்தாவிடம், 'ஏய்! இந்தா, முத்தமிடு, பை நிறையப் பணம் தருகிறேன்,' என்றான். அவளோ, மறு பக்கம் திரும்பிக்கொண்டாள், அவ்வளவுதான்! 'நான் உன் மனத்தைப் புண் படுத்தி விட்டேன் என்றால் மன்னித்துவிடு, கொஞ்சம் அன்போடு பார்க்கவாவது செய்,' என்று கிழப் பிரபு பணிவாய்க் கெஞ்சி, பணப் பையை அவளுடைய காலருகே எறிந்தான். பெ ரிய பணப்பை, தம்பி! ஆனால் அவளோ, தற் செயலாகப் போல அதைச் சேற்றில் உதைத் துத் தள்ளினாள், அவ்வளவுதான்.

"'அடி பெண்ணே!' என்று பெருமூச் செறிந்து குதிரையைச் சவுக்கால் விளாறினான் அவன். புழுதிதான் படலங்களாகக் கிளம்பியது.

"அடுத்த நாள் அவன் மறுபடி வந்தான். 'அவளுடைய தகப்பன் யார்?' என்று முகாமில் இடிபோல முழங்கினான். தனீலோ வெளியே வந்தான். 'உன் மகளை விலைக்குக் கொடு. என்ன வேண்டுமானாலும் வாங்கிக்கொள்!' தனீலோ அவனிடம் சொன்னான்: 'பிரபு வம் சத்தவர்கள் மட்டுமே தங்கள் பன்றிகள் முதல் மனச்சாட்சி வரை எல்லாவற்றையும் விலைக்குக் கொடுப்பார்கள். நான் கோஷுத்தோடு சேர்ந்து போரில் ஈடுபட்டவன். எதையும் நான் விற்பனை செய்வதில்லை!' பிரபு இரைவதற்கு வாயெடுத் தான். அவன் கை வாளை உருவப் போயிற்று.

ஆனால் எங்களில் ஒருவன் தீப் பிடித்த கற்றையைக் குதிரையின் காதில் நுழைத்து விடவே அது சவாரிக்காரனோடு பாய்ந்தோடிற்று. நாங்களும் முகாமைப் பெயர்த்துக்கொண்டு கிளம்பி விட்டோம். ஒரு நாள், இரண்டு நாள் நடந்தோம். பார்க்கிறோமோ, பிரபு எங்களை எட்டிப் பிடித்துவிட்டான்! 'ஏய், ஆட்களே, ஆண்டவனுக்கும் உங்களுக்கும் முன் என் மனச்சாட்சி கறைபடவில்லை. பெண்ணை எனக்கு மணம் செய்து வையுங்கள். என் சொத்தை எல்லாம் உங்களோடு பகிர்ந்து கொள்கிறேன். நான் பெரும் பணக்காரன்!' என்றான். அவன் அனலாய்ச் சிவந்திருந்தான். காற்றில் ஆடும் இறகுப் புல் போலச் சேணத்தின் மேல் ஆடினான். நாங்கள் யோசனை செய்தோம்.

"'இந்தா, மகளே, பேசு!' என்று மீசைக்குள் சொன்னான் தனீலோ.

"'பெண் கழுகு தானாக விரும்பிக் காக்கைக் கூட்டுக்குப் போனால் என்ன ஆகும்?' என்று ராத்தா எங்களிடம் கேட்டாள்.

"தனீலோ வாய்விட்டுச் சிரித்தான். நாங்களும் அவனோடு சேர்ந்து சிரித்தோம்.

"'நன்றாய்ச் சொன்னாய் மகளே! கேட்டாயா, சீமானே? காரியம் பலிக்கவில்லை. நீ புறாக்களைத் தேடு. அவை இணங்கி வரக் கூடியவை,' என்றான் தனீலோ. நாங்கள் மேலே நடந்தோம்.

"அந்தச் சீமானோ, தொப்பியைக் கழற்றித் தரையில் எறிந்துவிட்டுப் பூமி அதிரக் குதிரையை விரட்டிக்கொண்டு போய்விட்டான். அப்

பேர்ப்பட்டவளாக்கும் ராத்தா, தெரிந்துகொள், தம்பி!

‘‘ஆயிற்றா! ஒரு நாள் இரவில் நாங்கள் உட்கார்ந்திருந்த போது ஸ்தெப்பி வெளியில் இசை பெருகுவதைக் கேட்டோம். அருமையான இசை! அதைக் கேட்டு நாளங்களில் இரத்தம் சூடேறியது. அந்த இசை எங்கோ அழைத்தது. ஏதாவது பெரிய காரியம் செய்ய வேண்டும் என்ற ஆசை அந்த சங்கீதத்தால் எங்கள் எல் லாருக்கும் உண்டாயிற்று. எதைச் செய்த பிறகு வாழ்வது அவசியம் இல்லையோ, அல்லது வாழ வேண்டும் என்றால் உலகம் பூராவையும் ஆள்பவர்களாக வாழ வேண்டுமோ அப்பேர்ப் பட்ட காரியத்தைச் செய்யும் ஆசை! இதை நாங் கள் உணர்ந்தோம்.

‘‘கொஞ்ச நேரத்தில் ஒரு குதிரையின் உரு வம் இருட்டில் கண்ணுக்குத் தென்பட்டது. அதன் மேல் ஒருவன் உட்கார்ந்து எங்கள் பக்க மாக வந்து கொண்டே பிடில் வாசித்துக்கொண் டிருந்தான். நெருப்பின் பக்கத்தில் குதிரையை நிறுத்தி, பிடில் வாசிப்பதை விட்டு விட்டுப் புன் னகையுடன் எங்களைப் பார்த்தான்.

‘‘ ‘ஏகே, ஜொபார், நீயா அது!’ என்று மகிழ்ச்சி பொங்க அவனைப் பார்த்துக் கூவி னான் தனீலோ. ‘இவன்தான் லோய்க்கோ ஜொபார்!’

‘‘அவனுடைய மீசை தோள்கள் மேல் படிந்து தலைமுடியோடு சேர்ந்திருந்தது. விழி கள் பளிச்சிடும் நட்சத்திரங்கள் போலச் சுடர்ந் தன. புன்னகையோ, முழுச் சூரியன் போல

ஒளி வீசிற்று, கடவுள் ஆணை! குதிரையோடு சேர்ந்து ஒரே இரும்பு வார்ப்பில் வடித்தவன் போல் இருந்தான். நெகிடி நெருப்பின் வெளிச் சத்தில் குருதி படிந்தவன் போல நின்று பற் கள் மின்னும்படிச் சிரித்தான். அவன் என் னிடம் ஒரு வார்த்தை சொல்லவோ, இந்த உலகத்தில் நானும் வாழ்கிறேன் என்பதை வெ றுமனே கவனிக்கவோ செய்வதற்கு முன்பே என்னையே நேசிக்கிற அளவு அவன் மேல் அன்பு கொள்ளத் தொடங்கி விட்டேன்! இது உண்மை அல்ல என்றால் நான் கடைத் தேறாமல் போவேனாக!

''பார்த்தாயா, தம்பி, எப்பேர்ப்பட்ட ஆட்கள் இருக்கிறார்கள் என்று! இப்படிப்பட்டவன் நம் விழிகளைக் கூர்ந்து பார்த்ததுமே நம் உள் ளத்தை ஆட்கொண்டு விடுகிறான். இதனால் நமக்குக் கொஞ்சங்கூட வெட்கம் உண்டாவதில் லை. தவிரப் பெருமையும் ஏற்படுகிறது. இந்த மாதிரி ஆளோடு சேர்ந்து நாமும் மேலானவர் களாக மாறி விடுகிறோம். இந்த மாதிரி மனிதர் கள் கொஞ்சம் பேர்தான், நண்பா! அவர்கள் கொஞ்சம் பேர் என்றால் அதுவும் சரிதான். உலகத்தில் நல்லது நிறைய இருந்தால் அதை யாரும் நல்லதாக மதிக்க மாட்டார்கள். அப் படித் தான்! மேலே கேளு.

''ராத்தா சொன்னாள்: 'ஜொபார், நீ நன் றாக வாசிக்கிறாய்! இவ்வளவு நாதம் உள்ள, நுட்பமான பிடிலை உனக்கு யார் செய்து தந் தார்கள்?' அவனோ சிரித்தான்: 'நானே தான் செய்தேன்! மரத்தால் செய்யவில்லை. நெஞ்

சாரக் காதலித்த இளம் பெண்ணின் மார் பிலிருந்து செய்தேன். அவளுடைய இதயத் திலிருந்து நரம்புகள் முறுக்கிக் கொண்டேன். பிடில் இப்போதும் கொஞ்சம் அபஸ்வரம் பேசு கிறது, ஆனால் வில்லைச் சரியாகக் கையாள என்னால் முடியும்,' என்றான்.

''பெண்ணினுடைய விழிகள் தன் உள்ளத் தில் காதல் நெருப்பை மூட்டிவிடக் கூடாது, ஆனால் தனக்காக ஏக்கத்தால் கலங்க வேண் டும் என்பதற்காக அவற்றை மங்கடிக்க முயல் வது நம்மவர்களின் வழக்கம் என்பது தெரிந் தது தான். ஜொபாரும் இப்படியே செய்தான். ஆனால் அவன் முயற்சி பலிக்கவில்லை. ராத்தா ஒரு பக்கம் திரும்பி, கொட்டாவி விட்டு, 'ஜொ பார் புத்திசாலி, சாமர்த்தியசாலி என்றெல்லாம் கேள்விப்பட்டிருந்தேனே. ஆட்கள் எப்படிப் பொய் சொல்லுகிறார்கள், பார்!' என்று கூறி விட்டு அப்பால் போய்விட்டாள்.

''ஜொபார் குதிரையிலிருந்து இறங்கி, 'ஏகே, அழகியே, உனக்குப் பற்கள் கூர்மை!' என் றான். அவன் கண்கள் பளிச்சிட்டன. 'வணக் கம், அண்ணன்மாரே! நான் உங்களிடம் வந் திருக்கிறேன்!' என்று சொன்னான்.

'' 'விருந்தாளியை வரவேற்கிறோம்!' என்று அவனுக்குப் பதில் கூறினான் தனீலோ. முத்த மிட்டுக் கொண்டோம். கொஞ்ச நேரம் பேசிக் கொண்டிருந்தபின் படுத்தோம்... அயர்ந்து தூங்கினோம். காலையில் பார்க்கிறோமோ ஜொ பாரின் தலையில் துணியால் கட்டு போட்டிருந்

தது. என்ன ஆயிற்று? தூங்கிக் கொண்டிருந்த போது குதிரை குளம்பு காயப்படுத்தி விட்டதாம்.

''ஏ, ஏ, ஏ! அந்தக் குதிரை யார் என்று புரிந்துகொண்டு நாங்கள் மீசைக்குள் குறுநகை செய்தோம். தனீலோவும் புன்சிரிப்பு சிரித் தான். என்ன விஷயம்? ஜொபார் ராத்தாவுக்கு ஏற்றவன் அல்லவோ? அல்லவாம்! அட, பெண் என்ன தான் அழகி ஆனாலும் அவள் மனது குறுகலானது, சின்னது. அவள் கழுத்தில் நூறு பவுன் தங்க நகைகள் பூட்டினாலும் இருப்பதை விட மேலானவள் ஆக அவளால் முடியாது. இது கிடக்கட்டும்!

''அந்த இடத்திலே நாங்கள் நெடுங்காலம் வசித்தோம். அந்தச் சமயத்தில் எங்கள் காரி யங்கள் நன்றாக நடந்தன. ஜொபார் எங்க ளோடு இருந்தான். அருமையான தோழன் அவன்! விவேகம் உள்ளவன், கிழவன் போல. எல்லாக் காரியத்திலும் தேர்ந்தவன். ருஷ்ய எழுத்தும் ஹங்கேரிய எழுத்தும் படித்துப் புரிந்துகொண்டான். சில வேளைகளில் அவன் பேசத் தொடங்கினால் ஆயுள் பூராவும் உறங்கா மல் அவனுடைய பேச்சைக் கேட்டுக் கொண்டிருக் கத் தோன்றும்! பிடில் வாசித்தான் என்றால், உலகத்தில் வேறு எவனாலும் அப்படி வாசிக்க முடியாது! இது பொய்யானால் என் தலையில் இடி விழட்டும்! பிடில் நரம்புகள் மேல் அவன் வில் போடுவதைக் கேட்டதும் நம் இருதயம் திடுக்கிடும். இன்னொரு இழுப்பு இழுப்பான், கேட்டு நெஞ்சுத் துடிப்பு நின்றுவிடும். அவ னோ, பிடில் வாசித்துக் கொண்டே புன்னகை

செய்வான். அவன் வாசிப்பதைக் கேட்டு ஒரே நேரத்தில் அழவும் சிரிக்கவும் ஆசை உண்டா கும். ஒரு சமயம் யாரோ கசப்புடன் முனகுவது போலவும் உதவி கேட்பது போலவும் கத்தியால் அறுக்கிற மாதிரி நெஞ்சை வகிர்வது போலவும் இருக்கும். மறு சமயம், ஸ்தெப்பி வெளி ஆகா யத்துக்குக் கதைகள் சொல்லும், துயரக் கதை கள். அருமைக் காதலனுக்கு விடைகொடுத்து அனுப்பும் பெண் அழுவாள்! அருமைக் காத லன் ஸ்தெப்பி வெளியில் காதலியைக் கூவி அழைப்பான். திடீரென்று—ஹேய்! கட்டில் லாத, உயிர்த் துடிப்புள்ள பாட்டு இடி போல முழங்கும். இந்தப் பாட்டுக்கு இசைய வானத் தில் சூரியனே நடனம் ஆடுவது போல இருக் கும்! அப்படி அவன் வாசிப்பான், தம்பி!

''கேட்பவனுடைய உடம்பின் ஒவ்வொரு தசை நாரும் அந்தப் பாட்டைப் புரிந்துகொள்ளும். அவன் அதற்கு அடிமை ஆகி விடுவான். ஜொ பார் மட்டும் அப்போது, 'கத்திகளை எடுத்துக் கொண்டு கிளம்புங்கள், தோழர்களே!' என்று கூவி இருந்தால் நாங்கள் எல்லாரும் அவன் காட்டிய ஆளுடன் கத்திச் சண்டைக்குக் கிளம்பி இருப்போம். ஒருவனை என்ன வேண்டுமானா லும் செய்ய அவனால் முடிந்தது. எல்லாரும் அவனை நேசித்தோம், மனமார நேசித்தோம். ராத்தா ஒருத்திதான் அவனை மதிக்கவில்லை. அவ்வளவோடு விட்டிருந்தாலும் போகிறது என லாம். அவளோ, ஜொபாரை நையாண்டி வேறு செய்து வந்தாள். அவனுடைய நெஞ்சைக் கடு மையாகப் புண்படுத்தினாள், நிரம்பக் கடுமை

யாக! ஜொபார் பற்களை நெறுநெறுப்பான், மீசையைப் பிடித்து இழுப்பான். அவன் கண்கள் அடியற்ற பள்ளத்தைவிடக் கருமையாகத் தெரியும். சில வேளைகளில் அவற்றில் பளிச்சிடும் ஒளியைக் கண்டு உள்ளம் திகில் அடையும். ராத்திரி வேளையில் ஜொபார் ஸ்தெப்பியில் வெகு தூரம் போவான். அவனுடைய பிடில் காலை வரை அழுது கொண்டிருக்கும். அழுது கொண்டே ஜொபாரின் விடுதலையைப் புதைக்கும். நாங்கள் படுத்துக்கொண்டு இசையைக் கேட்டபடி என்ன செய்வது என்று யோசிப்போம். இரண்டு பாறைகள் ஒன்றின் பக்கம் மற்றது உருளும் போது அவற்றுக்கு நடுவே நிற்கக் கூடாது, காயப்படுத்திவிடும் என்று அறிந்திருந்தோம். இப்படிக் காலம் கழிந்தது.

“ஒரு நாள் நாங்கள் எல்லாரும் கூடி உட்கார்ந்து காரியங்களைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தோம். அலுப்பு தட்டி விட்டது. ‘ஜொபார், பாட்டுப் பாடு, நெஞ்சைக் குதூகலப்படுத்து!’ என்று கேட்டுக் கொண்டான் தனீலோ. தனக்குக் கொஞ்ச தூரத்தில் வானத்தை நோக்கியவாறு படுத்திருந்த ராத்தாவின் மேல் கண்ணோட்டி விட்டு, நரம்புகளை மீட்டினான் ஜொபார். மெய்யாகவே இளம் பெண்ணின் இருதயத்தால் ஆனது போலப் பிடில் இசை மொழி பேசத் தொடங்கிற்று. ஜொபார் பாடினான்:

‘நெஞ்சிலே எரியுது நெருப்பு
நெடுகிலும் நீண்டது ஸ்தெப்பி!
விஞ்சிடும் எந்தன் உறுதி
விரைந்து பாயுமே என்புரவி!’

“ராத்தா தலையைத் திருப்பி, பாடியவனின் விழிகளை உற்றுப்பார்த்துச் சிரித்துக் கொண்டாள். அவனுடைய முகம் காலை வானம் போலக் குப்பென்று சிவந்தது.

‘அடேய், என்னருந் தோழா
விடாது பாயடா முன்னே!
மையிருள் ஸ்தெப்பி தாண்டிட
மகிழ்வுடன் காணலாம் பகலே!
ஓட்டிடு விரைந்து புரவியை
சாட்டிடு கடிதே சாட்டையை!
கட்டழகி இவளையும் நீதான்
காணாது உரசாதே பிடரியால்!’

“அவன் தான் எப்படிப் பாடினான்! இப்போது யாரும் அந்த மாதிரிப் பாடுவதில்லை! ஆனால் ராத்தாவோ நீரை வடி கட்டுபவள் போல வார்த்தைகளைச் சொட்டினாள்:

“ ‘நீ அவ்வளவு உயரே பறக்காதே, ஜொபார், நீ கீழே விழுந்தாயோ, உன் மீசை மண்ணாகிப் போகும். ஜாக்கிரதை.’ ஜொபார் அவளை வன விலங்கு போல முறைத்துப் பார்த்தான், ஆனால் ஒன்றும் பேசவில்லை. பொறுத்துக் கொண்டு மேலே பாடினான்:

‘சேர்ந்து உறங்கிட இன்பம்
சேருமே, அன்பும் கூடுமே!
பார்த்திட நாணமும் பொசுங்கிப்
போகுமே காமத் தீயினில்!’

“ ‘இதுதான் பாட்டு!’ என்றான் தனீலோ.

'இந்த மாதிரிப் பாட்டை நான் ஒருபோதும் கேட்ட தில்லை. நான் பொய் சொன்னால் சாத்தான் என்னை அவனுக்குச் சுங்கான் ஆக்கிக் கொள் ளட்டும்!'

''கிழவன் நூர் மீசையைச் சிலுப்பினான், தோள்களைக் குலுக்கினான். ஜொபாரின் துணிச் சல் நிறைந்த பாட்டு எங்கள் எல்லாருக்கும் பிடித்திருந்தது! ராத்தா ஒருத்திக்குத் தான் அது பிடிக்கவில்லை.

'' 'குயிலைப் பார்த்து வக்கனை காட்டிய தாம் காக்கை,' என்றாள் அவள், எங்கள் மேல் வெண்பனி உருண்டையை எறிவது போல.

'' 'ராத்தா, ஒருவேளை உனக்குச் சவுக்கடி கேட்கிறதோ?' என்று அவளை நெருங்கினான் தனீலோ. ஜொபாரோ, தொப்பியைத் தரையில் வீசினான். அவன் முகமெல்லாம் மண் போலக் கறுத்தது.

'' 'பொறு, தனீலோ! முரட்டுக் குதிரைக்கு எஃகுக் கடிவாளம் போட வேண்டும்! உன் மகளை எனக்குக் கட்டிக் கொடு!' என்றான்.

'' 'இது முறையான பேச்சு!' என்று நகைத் தான் தனீலோ. 'முடியுமானால் தாராளமாகக் கட்டிக் கொள்!'

'' 'நல்லது!' என்றான் ஜொபார். பின்பு ராத் தாவிடம் சொன்னான்: 'இந்தா, பெண்ணே, நான் சொல்லுவதைக் கொஞ்சம் கேள், பிகு பண்ணிக் கொள்ளாதே! உன் மாதிரிப் பெண் கள் நிறையப் பேரை நான் கண்டிருக்கிறேன், ரொம்ப நிறையப் பேரை! ஒருத்தி கூட என்

உள்ளத்தை உன்போல வசீகரிக்கவில்லை. ஆ, ராத்தா, என் இதயத்தை ஆட்கொண்டு விட்டாய் நீ! நல்லது, அதனால் என்ன? நடப்பது நடந்தே தீரும். தவிர... ஒருவன் தன்னையே விட்டு விலகியோட உதவும் குதிரை எங்கும் கிடையாது! கடவுளும் என் மானமும் உன் தகப்பனும் இந்த எல்லா ஆட்களும் சாட்சிகளாக உன்னை மனைவியாக ஏற்றுக்கொள்கிறேன். ஆனால் என் விடுதலைக்கு மட்டும் குறுக்கே வராதே. நான் கட்டற்ற மனிதன், என் விருப்பம் போல வாழ்வேன்!' இப்படிச் சொல்லி, பற்களைக் கடித்துக்கொண்டு கண்கள் பளிச்சிட அவளிடம் போனான். அவள் பக்கம் அவன் கையை நீட்டியதை நாங்கள் கண்டோம். ராத்தா இந்த ஸ்தெப்பி வெளிக் குதிரைக்குக் கடிவாளம் போட்டுவிட்டாள் என்று நினைத்தோம்! திடீரென்று பார்க்கிறோமோ, ஜொபார் கைகளை ஆட்டித் தடாலென்று தரையில் மல்லாக்க விழுந்தான்! அவன் பின் மண்டைத் தரையில் மோதிற்று...

''என்ன விந்தை? அவன் மார்பில் துப்பாக்கிக் குண்டு தாக்கியது போல் இருந்தது. உண்மையில் ராத்தா தான் சவுக்கு வாரை அவன் காலில் வீசி மாட்டி, அவனைத் தன் பக்கம் இழுத்தாள். அதனால்தான் ஜொபார் விழுந்தான்.

''ராத்தா அதற்குள் மறுபடி படுத்து அசைவின்றி ஏளனமாக வாய்க்குள் சிரித்தாள். என்ன நடக்கும் என்று நாங்கள் பார்த்துக் கொண்டிருந்தோம். ஜொபார் தரையில் உட்

கார்ந்து தலை வெடித்துவிடும் என்று அஞ்சுப வன் போல அதைக் கைகளால் அழுத்திப் பிடித்துக் கொண்டிருந்தான். அப்புறம் எழுந் திருந்து ஒருவரையும் பார்க்காமல் ஸ்தெப்பி வெளியில் நடந்தான். ‘அவனைக் கவனித்துக் கொள்!’ என்று நூர் என்னிடம் கிசுகிசுத்தான். இரவின் இருட்டில் நான் ஜொபாரின் பின்னே ஸ்தெப்பியில் ஊர்ந்தேன். அப்படியாக்கும் சேதி, தம்பி!’’

மகார் சுங்கானிலிருந்து சாம்பலைத் தட்டிக் கொட்டி விட்டு அதில் மறுபடி புகையிலை திணிக் கலானான். நான் மேல் கோட்டை இன்னும் நன்றாகப் போர்த்துக்கொண்டு படுத்தவாறே அவனுடைய முதிய வதனத்தை நோட்டம் இட் டேன். வெயிலாலும் காற்றாலும் அது கறுத் திருந்தது. அவன் கடுமையும் கண்டிப்பும் தோன்றத் தலையை அசைத்து வாய்க்குள்ளாக ஏதோ கிசுகிசுத்தான். அவனுடைய நரைத்த மீசை ஆடியது. காற்று அவன் தலைமயிரைப் பரத்தியது. மின்னல் தாக்கியதால் கரிந்து விட்ட போலும் இன்னமும் விறலும் உறுதியும் தன் வலிமையில் பெருமையும் கொண்ட முதிர்ந்த ஓக் மரத்துக்கு நிகராகக் காணப்பட்டான் அவன். கடல் முன்போலவே கரையோடு இரகசி யம் பேசிக் கொண்டிருந்தது. காற்று அதன் கிசுகிசுப்பை அதே போல ஸ்தெப்பி வெளியில் பரப்பிக் கொண்டிருந்தது. நோன்கா பாடுவதை நிறுத்தி விட்டாள். வானில் அடர்ந்திருந்த மேகங்கள் இலையுதிர் கால இரவை இன்னும் இருண்டது ஆக்கிக் கொண்டிருந்தன.

“குனிந்த தலையும் சாட்டை வார்கள் போலத் தொங்கிய கைகளுமாக ஜொபார் கால் போன திக்கில் நடந்தான். ஓடைப் பள்ளத்தை அடைந்ததும் கல்லின் மேல் உட்கார்ந்து பெரு மூச்செறிந்தான். அதைக் கேட்டு இரக்கத்தால் என் நெஞ்சில் உதிரம் பெருகிற்று. ஆனாலும் நான் அவனை நெருங்கவில்லை. துயரத்தை வார்த்தைகளால் துடைக்க முடியாது அல்லவா? அதனால் தான்! ஒரு மணி, இரண்டு மணி, மூன்று மணி ஆகியும் அவன் அசையாமல் உட்கார்ந்திருந்தான்.

“நானும் கொஞ்ச தூரத்தில் படுத்திருந் தேன். நிலாக் கால இரவு. சந்திரன் ஸ்தெப்பி முழுவதிலும் வெள்ளியாக ஒளி பரப்பிற்று. தூரத்திலும் எல்லாம் கண்ணுக்குத் தெரிந் தன.

“ராத்தா முகாமிலிருந்து வேகமாக வந் ததைத் திடீரென்று கண்டேன்.

“எனக்கு மகிழ்ச்சி உண்டாயிற்று! ‘அடே யப்பா, என்ன மிடுக்கு! துணிந்தவள் இந்த ராத்தா!’ என்று எண்ணிக்கொண்டேன். அவள் அவனை நெருங்கினாள். அவன் காதில் ஒன் றும் படவில்லை. அவள் அவனுடைய தோள் மேல் கையை வைத்தாள். ஜொபார் திடுக் கிட்டான். முட்டி பிடித்த கைகளை விரித்துத் தலையை நிமிர்த்தினான். அக்கணமே குதித் தெழுந்து கட்டாரியை உருவினான்! இதோ பெண்ணை வெட்டிப் போட்டு விடுவான் என்ப தைக் கண்டேன். முகாமுக்குக் கேட்கும் படிக்

கூச்சலிட்டு அவர்களிடம் ஓடிப்போக நினைத் தேன்.

"'எறிந்து விடு! தலையைச் சுக்கல் ஆக்கி விடு வேன்!' என்ற சொற்கள் அதற்குள் காதில் பட் டன. பார்க்கிறேனோ, ராத்தாவின் கையில் ரிவால்வர், அவள் ஜொபாரின் நெற்றியைக் குறி வைத்து ரிவால்வரைப் பிடித்திருந்தாள். பேய் மகள்! 'இப்போது இரண்டு பேரும் பலத்தில் சமம், மேலே என்ன நடக்கும்?' என்று எண் ணமிட்டேன்.

"ராத்தா ரிவால்வரை இடைவாரில் செருகிக் கொண்டு ஜொபாரிடம் சொன்னாள்: 'கேள். நான் உன்னைக் கொல்ல வரவில்லை, சமா தானம் செய்து கொள்ள வந்தேன். கட்டாரியை எறிந்து விடு!' அவன் கட்டாரியை எறிந்து விட்டு அவளை முறைத்துப் பார்த்தான். அந்தக் காட்சி அதிசயமாய் இருந்தது, தம்பி! இரண்டு பேர் நின்று ஒருவரை ஒருவர் காட்டு விலங்குகள் போலப் பார்த்துக் கொண்டிருந்தார்கள். இவ் வளவிற்கும் இரண்டு பேரும் நிரம்ப நல்லவர் கள், துணிவு உள்ளவர்கள். தெளிந்த நிலா அவர்களைப் பார்த்தது, நானும் பார்த்தேன் அவ்வளவுதான்.

"'நான் சொல்வதைக் கேள், ஜொபார். நான் உன்னைக் காதலிக்கிறேன்!' என்றாள் ராத்தா. அவனோ கைகளும் கால்களும் கட் டப்பட்டவன் போல வெறுமே தோள்களை மட்டும் அசைத்தான்.

"'நான் வீரர்களைப் பார்த்திருக்கிறேன்: நீ அவர்களை விட அதிகத் துணிச்சல் உள்ளவன்,

அகத்திலும் முகத்திலும் அழகன். நான் கண் சாடை செய்தாலே போதும், அவர்களில் ஒவ் வொருவனும் தன் மீசையைச் சிரைத்துக் கொண்டிருப்பான். நான் விரும்பினால் அவர் கள் எல்லாரும் என் காலில் விழுந்திருப்பார் கள். ஆனால் பயன் என்ன? அவர்கள் ஏற்கென வே பெரிய துணிச்சல்காரர்கள் அல்ல. நான் அவர்கள் எல்லாரையும் பெட்டைகள் ஆக்கி இருப்பேன். துணிந்த ஜிப்ஸிகள் உலகில் கொஞ் சம் பேர்தான் மீதி இருக்கிறார்கள், ஜொபார், கொஞ்சம் பேர்தான். நான் ஒருபோதும் எவ னையும் காதலிக்கவில்லை, ஜொபார், ஆனால் உன்னைக் காதலிக்கிறேன். அதோடு விடுதலை யையும் நான் விரும்புகிறேன்! ஜொபார், உன் னைக் காட்டிலும் அதிகமாக விடுதலை மேல் அன்பு கொண்டிருக்கிறேன். நீ இல்லாமல் எனக்கு வாழ முடியாது, அப்படியே நான் இல் லாமல் உன்னாலும் வாழ முடியாது. ஆகையால் தான் நீ உள்ளத்தாலும் உடலாலும் என்னுடை யவன் ஆக வேண்டும் என்று ஆசைப்படுகிறேன், கேட்டாயா?' அவன் ஏளனச் சிரிப்பு சிரித்தான்.

"'கேட்டேன்! உன் பேச்சைக் கேட்க உள் ளத்துக்கு மகிழ்ச்சியாய் இருக்கிறது. எங்கே, இன்னும் சொல்லு!'

"'இன்னும் நான் சொல்வது இது தான். ஜொபார், நீ எவ்வளவுதான் போக்கு காட்டி னாலும் நான் உன்னை வசக்கி விடுவேன், நீ என்னவன் ஆகி விடுவாய். ஆகவே நேரத்தை வீண் போக்காதே. என் முத்தங்களும் கொஞ் சல்களும் உனக்காகக் காத்திருக்கின்றன...

நான் உன்னை ஆரத் தழுவி முத்தமிடுவேன், ஜொபார்! என் முத்தங்களின் மோகத்தில் உன் துணிச்சல் நிறைந்த வாழ்வை மறந்து விடு வாய்... ஜிப்ஸி வீரர்களுக்கு மகிழ்ச்சி ஊட்டும் உன் ஆவேசப் பாட்டுக்கள் அப்புறம் ஸ்தெப்பி வெளியில் முழங்க மாட்டா. கனிவுள்ள காதல் பாட்டுக்களை எனக்காக, ராத்தாவுக்காக, நீ பாடு வாய்... ஆகையால் நேரத்தை வீணாக்காதே. நான் இப்படிச் சொன்னேன். இதற்கு அர்த்தம் என்ன என்றால் நாளைக்கு நீ மூத்த தோழ ருக்குப் பணிவது போல எனக்கும் பணிவாய். முகாம் முழுவதற்கும் முன்பாக என் காலைத் தொட்டு வணங்குவாய், என் வலது கையை முத்தமிடுவாய். அப்போதுதான் நான் உன் மனைவி ஆவேன்.'

''பேய் மகளுடைய ஆசையைப் பாரேன்! இது ஒருபோதும் கேள்விப்படாத சேதி. பழங் காலத் தில் கருமலை வாசிகளிடம் இந்த மாதிரி வழக் கம் இருந்ததாம், கிழவர்கள் சொல்லுவார்கள். ஆனால் ஜிப்ஸிகளிடம் ஒருபோதும் கிடையாது! நீ, எங்கே, இதை விட வேடிக்கையானது எதை யேனும் இட்டுக் கட்டிச் சொல்லு பார்க்கலாம்! ஓராண்டு பூராவும் மண்டையைப் போட்டு உடைத் துக்கொண்டாலும் உன்னால் சொல்ல முடி யாது!

''ஜொபார் ஒரு பக்கம் நகர்ந்து, நெஞ்சில் காயம் பட்டவன் போல ஸ்தெப்பி எங்கும் கேட்கும்படி வீரிட்டான். ராத்தா திடுக்கிட்டாள், ஆனால் பதைப்பை வெளியே காட்டிக்கொள்ள வில்லை.

"'நல்லது, நாளைக்குச் சந்திப்போம். நான் சொன்னபடி அப்போது நீ செய்ய வேண்டும், கேட்டாயா, ஜொபார்!'

"'கேட்டேன்! செய்வேன்,' என்று முனகி அவள் பக்கம் கையை நீட்டினான் ஜொபார். அவளோ, அவனைத் திரும்பிக் கூடப் பார்க்க வில்லை. ஜொபார் காற்றில் முறிந்த மரம் போலத் தள்ளாடி, பொருமி அழுது கொண்டும் சிரித்துக்கொண்டும் தரையில் விழுந்தான்.

"இப்படி அவனை வதைத்து எடுத்தாள் பாழும் ராத்தா. நான் சிரமப்பட்டு அவனுக்கு மயக்கம் தெளிவித்தேன்.

"ஏகே! மனிதர்கள் துன்பத்தில் உழல்வது எந்தச் சாத்தானுக்கு விருப்பம்? மனிதனுடைய நெஞ்சு துயரத்தால் பிளந்து தேம்புவதைக் கேட்க யாருக்கு விருப்பம்? நீயே யோசித்துப் பார்!..

"நான் முகாம் திரும்பி எல்லாவற்றையும் பெரியவர்களுக்கு விவரித்தேன். அவர்கள் ஆலோசனை செய்து இதன் முடிவு என்ன ஆகிறது என்று பொறுத்திருந்து பார்க்கத் தீர் மானித்தார்கள். நடந்தது இதுதான். மாலை யில் நாங்கள் எல்லாரும் நெருப்பைச் சுற்றிக் குழுமிய போது ஜொபாரும் வந்தான். அவன் கலங்கி, ராத்திரிக்குள் பயங்கரமாக மெலிந்து போயிருந்தான். அவனுடைய கண்கள் குழி விழுந்திருந்தன. விழிகளைத் தாழ்த்திக் கொண்டு, தலையை நிமிர்த்தாமலே எங்களி டம் சொன்னான்:

"'சேதி இதுதான், தோழர்களே. நேற்று

இரவு நான் என் நெஞ்சைத் துருவிப் பார்த் தேன். பழைய கட்டற்ற வாழ்க்கைக்கு அதில் இடம் இல்லை என்பதைக் கண்டேன். அதில் ராத்தா ஒருத்தி மட்டுமே வாழ்கிறாள்—அவ் வளவு தான்! இதோ பாருங்கள், அழகி ராத்தா புன்னகை செய்கிறாள், ராணி போல! என் னைவிட அதிகமாகத் தன் விடுதலையை அவள் நேசிக்கிறாள். நானோ, என் விடுதலையைக் காட்டிலும் மேலாக அவளைக் காதலிக்கிறேன். நான், துணிவுள்ள லோய்க்கோ ஜொபார், இவ ளைச் சந்திக்கும் வரை வாத்துகளோடு வேட் டைப் பருந்து விளையாடுவது போலப் பெண் களோடு சரசமாடிக் கொண்டிருந்தேன். இவளு டைய அழகு என்னை எப்படிப் பணிய வைத்து விட்டது என்பதை எலலாரும் பார்க்கும் விதத் தில் இவள் ஆணையிட்டபடி இவளுடைய காலைத் தொட்டு வணங்குவது என்று முடிவு செய்து விட்டேன். பிறகு இவள் என் மனைவி ஆவாள், என்னைக் கொஞ்சி முத்தம் இடு வாள். ஆகவே, உங்களுக்குப் பாட்டுக்கள் பாட வும் இப்போது எனக்கு விருப்பம் இல்லை. என் விடுதலை போய்விட்டதிலும் வருத்தம் இல்லை! அப்படித்தானே, ராத்தா?'—அவன் விழிகளை உயர்த்தி ராத்தாவைக் கூர்ந்து பார்த்தான். அவள் பேசாமல் கண்டிப்புடன் தலையசைத்துக் கையினால் தன் காலைச் சுட்டிக் காட்டினாள். நாங்கள் பார்த்துக் கொண்டிருந்தோம், ஆனால் ஒன்றையும் புரிந்து கொள்ளவில்லை. ஒரு பெண்ணின்—அவள் ராத்தா என்றாலும் கூட —காலில் லோய்க்கோ ஜொபார் விழுவதைப்

பார்க்காதிருப்பதற்காக எங்கேனும் போய்விட லாமா என்று கூட நினைத்தோம். எங்களுக்கு எதனாலோ வெட்கமாக இருந்தது, வருத்த மும் ஏக்கமும் கூட ஏற்பட்டன.

'''ஊம்!' என்று ஜொபாரை அதட்டினாள் ராத்தா.

'''ஏகே, அவசரப்படாதே. நேரம் இருக் கிறது. அப்புறம் உனக்கு அலுத்துக் கூடப் போய் விடும்...' என்று நகைத்தான் ஜொபார். எஃகு கணகணப்பது போலக் கெக்கலித்தான்.

'''ஆக, விஷயம் எல்லாம் இவ்வளவுதான், தோழர்களே! என்ன பாக்கி இருக்கிறது? ஆமாம், என் ராத்தாவின் இருதயம் அவள் எனக்குக் காட்டிய மாதிரி அவ்வளவு கடினமா னதா என்று சோதித்துப் பார்ப்பது பாக்கி இருக் கிறது. சோதித்துத் தான் பார்த்து விடுகிறேனே, என்னை மன்னியுங்கள், சகோதரர்களே!'

''ஜொபார் என்ன செய்ய விரும்புகிறான் என்று ஊகிக்கக்கூட எங்களுக்கு நேரம் கிடைக்க வில்லை, அதற்குள் ராத்தா தரையில் கிடந் தாள். அவளுடைய நெஞ்சில் பிடிவரை பாய்ந் திருந்தது ஜொபாரின் வளை கத்தி. நாங்கள் மலைத்துப் போனோம்.

''ராத்தா கத்தியை உருவி ஒரு பக்கத்தில் எறிந்தாள். தன் கருங் கூந்தல் கற்றையால் காயத்தை அழுத்திக் கொண்டு புன்னகையுடன் கணீரென்று தெளிவாகச் சொன்னாள்:

'''விடை கொடு, ஜொபார்! நீ இப்படிச் செய்வாய் என்பது எனக்குத் தெரியும்!..'

—அப்புறம் அவளுடைய உயிர் பிரிந்துவிட்டது...

"புரிந்து கொண்டாயா அவளை, தம்பி? அப்படிப்பட்ட வளாக்கும்—நான் என்றும் கடைத்தேற வகை இன்றிப் பாழாய்ப் போவேனாக—அந்தப் பேய் மகள்!

" 'ஆ! நானும் உன் காலில் விழுந்து வணங்குகிறேன், செருக்குள்ள அரசி!' என்று ஸ்தெப்பி வெளி அதிர முழங்கினான் ஜொபார். பின்பு தரையில் விழுந்து, உயிரற்ற ராத்தாவின் கால்களோடு உதடுகளைப் பொருத்திக் கொண்டு அசையாது கிடந்தான். நாங்கள் இறந்தவளுக்கு வணக்கம் தெரிவிப்பதற்காகத் தொப்பிகளைக் கழற்றிக் கைகளில் வைத்துக்கொண்டு பேசாமல் நின்றோம்.

"இந்த மாதிரி விவகாரத்தில் ஒருவன் என்ன சொல்ல முடியும், தம்பி? ஒன்றும் முடியாது! 'இவனைக் கட்டிப்போட வேண்டும்!..' என்று அரை மனதாகச் சொன்னான் நூர். லோய்க்கோ ஜொபாரைக் கட்டிப்போட ஒருவனுக்கும் கை வந்திருக்காது. யாருக்குமே கை வந்திருக்காது, நூர் இதை அறிந்திருந்தான். அவன் கையை உதறி விட்டு அப்பால் போய் விட்டான். தனீலோ வோ, ராத்தா ஒரு பக்கம் விட்டெறிந்த கத்தியை எடுத்து, நரை மீசையைச் சிலுப்பிய வண்ணம் நீண்ட நேரம் அதைப் பார்த்துக் கொண்டிருந்தான். அந்தக் கத்தியில் ராத்தாவின் இரத்தம் இன்னும் சூடு ஆறவில்லை. கத்தி வளைவாகவும் கூர்மையாகவும் இருந்தது. பின்பு தனீலோ ஜொபாரை நெருங்கி அவன் முதுகில் இருதயத்

துக்கு நேராகக் கத்தியைச் செருகினான். ராத்தா வின் தகப்பன் ஆயிற்றே, கிழப் படைவீரன் தனீலோ!

''ஜொபார் தனீலோ பக்கம் திரும்பி, 'இது தான் வேண்டும்!' என்று தெளிவாகச் சொல்லி விட்டு ராத்தாவை எட்டிப் பிடிக்கப் போய்விட் டான்.

''நாங்களோ பார்த்தோம். மயிர்க் கற்றை யுடன் கையை மார்பில் அழுத்தியபடிக் கிடந்தாள் ராத்தா. அவளுடைய திறந்த விழிகள் நீல வானத்தில் நிலைத்திருந்தன. அவள் காலருகே விழுந்து கிடந்தான் வீரன் லோய்க்கோ ஜொ பார். தலைமயிர்ச் சுருள்கள் அவன் முகத்தில் விழுந்திருந்தன. முகம் தெரியவில்லை.

''நாங்கள் நின்றபடி யோசனை செய்தோம். கிழவன் தனீலோவின் மீசை துடித்தது. அடர்ந்த புருவங்கள் நெரிந்தன. வானத்தை நோக்கிய வாறு பேசாதிருந்தான். நிலவு போல நரைத் திருந்த நூர் முகம் குப்புறத் தரையில் படுத்து விம்மி அழுதான். அவனுடைய முதிய தோள் கள் நடுநடுங்கின.

''அழுவதற்குக் காரணம் இருந்ததே, தம்பி!

''...நீ போகிறாய். நல்லது, உன் வழியில் போ, அக்கம் பக்கம் திரும்பாதே. நேராகவே போ. ஒருவேளை நீ வீணாக மட்கிப் போகாமல் தப்பி விட லாம். அவ்வளவு தான், தம்பி!''

மகார் பேச்சை நிறுத்தி, புகையிலைப் பையில் சுங்கானை வைத்து விட்டு மேல் சட்டையை மார் பில் சேர்த்து இறுக்கிக்கொண்டான். மழை தூறி யது, காற்று வலுத்தது, கடல் சீற்றத்துடன்

ஆழ்ந்து முழங்கியது. குதிரைகள் அணையும் தறுவாயில் இருந்த நெருப்பின் அருகே ஒன்றன் பின் ஒன்றாக வந்து அறிவு சுடர்ந்த பெரிய விழிகளால் எங்களைப் பார்வையிட்டு, கெட்டி யான வளையமாக எங்களைச் சூழ்ந்து அசை யாமல் நின்றன.

''ப்பப் பா, ஹை!'' என்று அவற்றை நோக்கிக் கொஞ்சலாகக் கத்தி, தன் அன்புக்குரிய கரும் புரவியின் கழுத்தை உள்ளங்கையால் தட்டிக் கொடுத்தான் மகார். பின்பு என்னைப் பார்த்து, ''உறங்க நேரம் வந்து விட்டது!'' என்று சொல்லி, மேல் சட்டையால் தலைக்கு முக்காடிட்டுக்கொண்டு வலிய மேனியைத் தரையில் கிடத்தி மௌனமா னான்.

எனக்குத் தூங்க விருப்பம் இல்லை. நான் ஸ்தெப்பியின் இருளில் பார்வையைச் செலுத்தி னேன். அரசிக்குரிய எழிலும் பெருமிதமும் வாய்ந்த ராத்தாவின் உருவம் என் கண்களுக்கு முன் காற்றில் நீந்தியது. கருங் கூந்தல் கற்றை யுடன் கையை மார்புக் காயத்தில் அழுத்திக் கொண்டிருந்தாள். அவளுடைய பழுப்பேறிய மெல்லிய விரல்களின் இடுக்கு வழியாக இரத்தம் துளித்துளியாகப் பெருகி நெருப்பாய்ச் சிவந்த நட்சத்திரங்களாகத் தரையில் சொட்டியது.

அவளை அடியொற்றிப் பின்தொடர்ந்து நீந் தினான் துணிவுள்ள வீரன் லோய்க்கோ ஜொபார். அடர்ந்த கரு மயிர்ச் சுருள்கள் அவனுடைய முகத் துக்குத் திரையிட்டிருந்தன. குளிர்ந்த பெரிய கண்ணீர்த் துளிகள் அவற்றுக்கு அடியிலிருந்து சொரிந்தன...

மழை வலுத்தது. லோய்க்கோ ஜொபார், முதிய படை வீரன் தனீலோவின் மகள் ராத்தா என்னும் ஜிப்ஸி அழகர்களின் பெருமிதம் வாய்ந்த இணையைப் போற்றி ஏக்கம் ததும்பிய ஆழ்ந்த பாட்டைப் பாடியது கடல்.

அவர்கள் இருவருமோ, இரவின் இருளில் ஓசையின்றி நீந்தியவாறு சுற்றிச் சுற்றி வந்தார்கள். செருக்குள்ள ராத்தாவுக்கு இணையாக வர அழகன் ஜொபாரால் முடியவே இல்லை.

**1892**

# இஸெர்கீல் கிழவி

## 1

பெஸ்ஸராபியாவில், அக்கெர்மான் என்னும் நக ரத்தின் அருகேயுள்ள கடற்கரையில் இந்தக் கதைகளை நான் கேட்டேன்.

மல்தாவியர்களின் ஒரு குழுவுடன் முந் திரிக் குலைகளை நறுக்கிச் சேகரிக்கும் வேலை செய்து வந்தேன். ஒரு நாள் மாலை, வேலை முடிந்ததும் குழுவினர் கடற்கரைக்குப் போய் விட்டார்கள். நானும் இஸெர்கீல் கிழவியும் அடர்ந்த முந்திரிக்கொடியின் அடியில் தரை மீது படுத்தபடியே, கடற் புறம் செல்பவர் களின் நிழலுருக்கள் படரும் மங்குலில் ஒன்றிப் போவதை மௌனமாகக் கவனித்துக் கொண் டிருந்தோம்.

பாட்டும் சிரிப்புமாக அவர்கள் நடந்தார் கள். கருகருவென்று அடர்ந்த மீசையும் தோள்வரை தொங்கிய அடர்த்தியான சுருட் டைக் கேசமும் வாய்ந்த வெண்கல நிற ஆட வர்கள், குட்டைச் சட்டைகளும் அகன்ற சராய் களும் அணிந்திருந்தார்கள். குதூகலமும் ஒயி லும் கருநீல விழிகளும் கொண்ட மாதரும்

மகளிரும் ஆண்களைப் போலவே வெண் கல நிறத்தில் ஒளிர்ந்தார்கள். அவர்களது கரும் பட்டுக் கூந்தல்கள் அவிழ்ந்து தொங்கின. அவற்றுடன் விளையாடிய கதகதப்பான மென் காற்று, அவற்றில் பின்னியிருந்த அலங்கார நாணயங்களைக் இலுக்கியது. அகன்ற, ஒரு சீரான அலையாக வீசிய காற்று, இருந்தாற் போலிருந்து ஏதோ கண்ணுக்குப் புலப்படாத தடையைத் தாண்டுவது போன்று குதித்தெ ழும். காற்றின் அந்தக் கொந்தளிப்பினால் பெண்களின் சுரிகுழல் விசித்திரமான பிடரிகள் போலச் சிலிர்த்து எழுந்து அவர்கள் தலைகளைச் சுற்றிப் பறக்கும். இதனால் அம்மகளிர் ஏதோ கதைகளில் வரும் பாத் திரங்கள் போன்று விந்தையான தோற்றம் அளித்தார்கள். அவர்கள் எங்களை விட்டு விலகி அப்பால் செல்லச் செல்ல, இரவும் என் கற்பனையும் சேர்ந்து அவர்களை மேன்மே லும் அழகிகளாகக் காட்டின.

யாரோ பிடில் வாசித்தான்... ஒரு பெண் தணிந்த மென் குரலில் பாடினாள்... நகைப்பு ஒலி காதில் பட்டது...

கடலின் சுள்ளென்ற நெடியும், அந்திக்கு முன்பு சற்று நேரம் கொட்டிய மழையால் சொத சொதவென்று ஊறியிருந்த தரை யிலிருந்து எழுந்த ஈர ஆவி வாடையும் காற் றில் நிறைந்திருந்தன. விந்தை விந்தையான வடிவங்களும் வண்ணங்களுங் கொண்ட பஞ்சு மேகத் துணுக்குகள், ஓரிடத்தில் புகைச் சுருள் கள் போன்று மென்மையும் சாம்பல் நிற

மும் தண் நீலமும் கொண்டும், மற்றோரிடத்தில் பாறைத் துண்டுகள் போலக் கூர்மையாகவும் மங்கிய கருமை அல்லது பழுப்பு நிறத்துடனும் இப்போதுங்கூட வானில் மிதந்து கொண்டிருந்தன. அவற்றின் இடையிடையே கொஞ்சலாக எட்டிப் பார்த்தன வானத்தின் ஆழ்நீல ஒட்டுக்கள், விண்மீன்களின் தங்க ஜிகினாக்கள் அவற்றிற்கு அணி செய்தன. இந்த ஒலிகளும் மணங்களும், முகில்களும் மாந்தரும் — இந்த எல்லா விஷயங்களுமே — அற்புதக் கதை ஒன்றின் தொடக்கம் போல விசித்திர அழகும் ஏக்கமும் பொலிந்து இலகின. எல்லாமே வளர்ச்சி தடைப்பட்டு மடிந்து விட்டன போன்று தோன்றின. குரல் ஒலிகள் மேன் மேலும் தொலைவில் சென்று தணிந்து கொண்டே போய், சோகப் பெருமூச்சுகள் ஆகி விட்டன.

இஸெர்கீல் கிழவி மற்றவர்கள் சென்ற திக்கைத் தலையசைப்பால் சுட்டி, ''நீ ஏன் அவர்களோடு போகவில்லை?'' என்று கேட்டாள்.

காலம் அவளை ஒரேயடியாகக் கூனவைத்து விட்டது. ஒரு காலத்தில் பளிச்சிட்ட கருங்கண்கள் இப்போது ஒளி இழந்து நீர் மல்கி இருந்தன. அவளது வறண்ட குரல் விசித்திரமாக ஒலித்தது; எலும்பு நொறுங்குவது போன்று கறு முறுத்தது.

''எனக்கு இஷ்டமில்லை,'' என்று பதிலளித்தேன்.

''ஐயோ!.. நீங்கள் இருக்கிறீர்களே, ருஷ்

யர்கள், கிழடுகளாகவே பிறந்தவர்கள். ஒரேயடியாக உம் என்று, அரக்கர்கள் போல... எங்கள் பெண்கள் பயப்படுகிறார்கள் உன்னிடம்... இவ்வளவிற்கும் நீ வாலிபன், பலசாலி...''

நிலவு எழுந்தது. மதி வட்டம் மிகப் பெரிதாக, இரத்தச் செம்மை படர்ந்து தகதகத்தது. ஒரு காலத்தில் எத்தனையோ மாந்தர்களின் இறைச்சியை விழுங்கி, உதிரத்தைக் குடித்து, அதன் காரணமாகவே போலும் ஈரிப்பும் செழுமையும் நிறைந்திருந்த இந்த ஸ்தெப்பி வெளியின் உதரத்திலிருந்து உதித்தது போலத் தோன்றியது திங்கள். முந்திரி இலைகளின் நாடாப் பின்னல் போன்ற நிழல் எங்கள் மீது விழுந்தது. அவற்றால் மூடப்பட்ட நானும் கிழவியும் வலையில் அகப்பட்டவர்கள் போலத் தோற்றமளித்தோம். எங்களுக்கு இடப்புறம் ஸ்தெப்பி வெளி மீது மிதந்து சென்றன முகில் நிழல்கள். சந்திரனின் நீல நிலவால் ஒளியுறுத்தப்பட்ட மேகங்கள் ஒளி ஊடுருவக் கூடியவையாகவும் அதிகப் பிரகாசமாகவும் காணப்பட்டன.

''அதோ பார்! லாரா வருகிறான்!''

வளைந்த விரல்கள் கொண்ட நடுங்கும் கையால் கிழவி சுட்டிக்காட்டிய திக்கில் பார்வையைச் செலுத்தினேன். அங்கே எனக்குத் தென்பட்டன மிதக்கும் நிழல்கள். எத்தனையோ நிழல்கள் தெரிந்தன. ஆனால் அவற்றில் ஒன்று மற்றவற்றை விடக் கருமையாகவும் அடர்த்தியாகவும் இருந்தது; தனது சோ

தரிகளைக் காட்டிலும் அதிக விரைவாகவும் தாழ்வாகவும் நீந்திச் சென்றது அது. மற்ற மேகங்களை விடத் தரைக்கு அருகாமையி லும் மிகுந்த வேகத்துடனும் மிதந்து சென்ற முகில் கந்தல் ஒன்றின் நிழல் அது.

''அங்கே யாரையும் காணோமே!'' என் றேன்.

''கிழவியான என்னை விட உனக்குப் பார் வை மந்தம். அதோ பார், பளிச்சென்று, ஸ்தெப்பி வெளி மீது ஓடுகிறானே!''

நான் மறுபடியும் பார்த்தேன், எனினும் நிழல்களைத் தவிர வேறு எதுவும் எனக்குப் புலப்படவில்லை.

''அது நிழல் அல்லவா? அதை ஏன் லா ரா என்கிறாய்?''

''ஏன் என்றால் அது அவன்தான். இப்போது அவன் வெறும் நிழல் ஆகி விட்டான். காலம் அப்படி ஆக்கிவிட்டது அவனை! ஆயிரம் ஆயிரம் ஆண்டுகளாக அவன் வாழ்ந்து வருகிறான். அவன் உடலையும் உதிரத்தையும் எலும்புகளை யும் வெயில் வறட்டி விட்டது. காற்றோ, அவற் றைப் புழுதி போலப் பறக்கடித்து விட்டது. ஆண வம் உள்ளவனை ஆண்டவன் என்ன பாடு படுத்த முடியும் என்பதை இதிலிருந்தே கண்டுகொள்!''

''இது எப்படி நிகழ்ந்தது, சொல்லேன்!'' என்று கிழவியைக் கேட்டுக் கொண்டேன். ஸ்தெப்பி வெளியில் உருவான புகழ்பெற்ற கதை ஒன்று வரப் போகிறது என்பது என் உணர்வில் பட்டு விட்டது.

அவள் இந்தக் கதையை எனக்குச் சொன்னாள்.

''இது நடந்து எத்தனையோ ஆயிரம் ஆண்டுகள் ஆகிவிட்டன. கடலுக்கு அப்பால் நெடுந்தொலைவிலே, சூரியன் எழும் திக்கிலே, பெரிய ஆறு பாயும் தேசம் ஒன்று உண்டு. அங்கே மரங்களின் ஒவ்வோர் இலையும், புல்லின் ஒவ்வொரு தாளும், நெருப்பாய்ப் பொசுக்கும் வெயிலிலிருந்து மனிதன் தன்னை மறைத்துக் கொள்வதற்கு வேண்டிய அளவு நிழல் தரும்.

''அந்த நாட்டின் மண் வளம் அப்பேர்ப்பட்டது!

''அங்கே வலிமை மிக்க இனத்தவர் வாழ்ந்தார்கள். அவர்கள் ஆடு மாடுகளை மேய்த்தார்கள், காட்டு விலங்குகளை வேட்டையாடுவதில் சக்தியையும் ஆண்மையையும் செலவிட்டார்கள். வேட்டைக்குப் பிறகு விருந்து உண்டு களித்தார்கள், பாட்டுக்கள் பாடினார்கள், பெண்களோடு விளையாடினார்கள்.

''ஒரு தடவை விருந்தின் போது, கழுகு ஒன்று வானத்திலிருந்து சரேலென்று பாய்ந்து, கருங் குழலும் இரவு போன்ற மென்மையும் கொண்ட ஒரு கன்னியைத் தூக்கிப் போய்விட்டது. அதன்மீது ஆண்கள் எய்த ஆற்றமாட்டாத அம்புகள், மறுபடி தரையில் விழுந்தன. அப்புறம் ஆடவர்கள் அந்தப் பெண்ணை எங்கும் தேடினார்கள். ஆனால் அவளைக் கண்டுபிடிக்க முடியவில்லை. பிறகு அவளைப் பற்றி மறந்து விட்டார்கள், உலகில் எல்லாவற்றையும் பற்றி மறந்து விடுவது போல.''

இழவி பெருமூச்சு விட்டு மௌனமாயிருந்தாள். அவளது நெஞ்சில் நினைவுகளாக உயிர்த்தெழுந்த மறந்த யுகங்கள் எல்லாம் முணுமுணுத்து முறையிடுவது போல ஒலித்தது இழவியின் கரகரத்த குரல். கடல், தனது கரையில் ஒருவேளை படைக்கப்பட்ட கதைகளில் ஒன்றின் தொடக்கத்தை மெல்லென எதிரொலித்தது.

''இருபது ஆண்டுகளுக்குப் பின் அந்தப் பெண் தளர்ந்து சுருங்கிய மேனியுடன் திரும்பி வந்தாள். இருபது ஆண்டுகளுக்கு முன் அவள் திகழ்ந்தது போலவே வனப்பும் வலிவும் இலங்கிய ஒரு வாலிபன் அவளோடு வந்தான். எங்கே போயிருந்தாய் என்று கேட்டதற்கு அவள், கழுகு தன்னை மலை மேல் தூக்கிச் சென்றதாகவும், அங்கே மனைவியோடு வாழ்வது போலத் தன்னுடன் வாழ்ந்ததாகவும் சொன்னாள். உடனிருந்தவன்தான் அவளுடைய மகனாம். தகப்பன் உயிரோடு இல்லையாம். உடல் தளரத் தொடங்கியதுமே கழுகு கடைசித் தடவையாக வானத்தில் வெகு உயரே பறந்து போய், சிறகுகளை மடித்துக்கொண்டு, மலையின் கூர்மையான குத்துப் பாறைகள் மேல் பொத்தென்று விழுந்து உயிரை மாய்த்துக்கொண்டதாம்...

''எல்லாரும் கழுகின் மகனை வியப்போடு பார்த்தார்கள். தங்களை விட அவன் எவ்விதத்திலும் உயர்ந்தவனில்லை என்பதைக் கண்டார்கள். அவன் கண்கள் மட்டுந்தான் புள்ளரசனின் விழிகளைப் போலவே கடூரமும் கர்வமும் கொண்டிருந்தன. அவனிடம் பேச்சுக் கொடுத்தார்கள். அவனோ, இஷ்டப்பட்ட போது பதில் சொன்

னான், இல்லாவிட்டால் பேசாதிருந்தான். இள முதியவர்கள் வந்ததும் அவன் தனக்குச் சம மானவர்களுடன் பேசுவது போல அவர்களுடன் உரையாடினான். இதை அவர்கள் அவமதிப் பாகக் கருதினார்கள். தீட்டிக் கூராக்கப்படாத, இறகு செருகாத அம்பு என்று அவனை அவர் கள் கடிந்து கொண்டார்கள். அவனைப் போன்ற ஆயிரக் கணக்கானவர்களும் அவனிலும் இரு மடங்கு வயதில் மூத்த ஆயிரமாயிரம் பேரும் தங்களை வணங்கி, தங்களுக்குக் கீழ்ப்படி வதாகக் கூறினார்கள். அவனோ, துணிவுடன் அவர்களை முறைத்துப் பார்த்து, தனக்கு ஈடானவர்கள் எவருமே இல்லை என்றும், மற்ற வர்கள் எல்லாரும் அவர்களுக்குப் பணிந்தாலும் தான் பணிய விரும்பவில்லை என்றும் பதில் சொன்னான். அடேயப்பா!.. அப்போது அவர் களுக்கு ஒரேயடியாகக் கோபம் வந்து விட்டது.

"'நமக்கிடையே இவனுக்கு இடம் இல்லை! எங்கு வேண்டுமோ போய்க் கொள்ளட்டும்!' என்று ஆத்திரம் பொங்கக் கூறினார்கள்.

"அவன் கடகடவென்று நகைத்து, தனக்கு விருப்பமான திக்கில்—தன்மீது பதித்த பார் வையை அகற்றாமல் நோக்கிக் கொண்டிருந்த அழகிய பெண் ஒருத்தியிடம்—போனான். போய் அவளைத் தழுவிக்கொண்டான். அவ ளோ, அவனைக் கடிந்து கொண்ட முதியவர் களில் ஒருவனுடைய மகள். அவன் மிக அழகன் ஆன போதிலும், தகப்பனாரிடம் பயம் காரண மாக அவள் அவனை நெட்டித்தள்ளி விட்டு, அப் பால் நகர்ந்தாள். அவனோ அவளை அறைந்

தான். அவள் தரையில் விழுந்தாள். அவன் அவள் மார்பின் மேல் கால் வைத்து நின்று கொண்டான். அவளுடைய வாய் வழியாக இரத்தம் ஆகாயத்தை நோக்கிப் பீச்சியடித்தது. அவளுக்கு மூச்சு முட்டியது. பாம்பு நெளிவது போலத் துடித்து, பின்பு இறந்து போனாள்.

''இதைப் பார்த்த எல்லாருக்கும் அச்சத் தினால் உடல் மரத்துப் போயிற்று. அவர்கள் முன்னிலையில் ஒரு பெண் இம்மாதிரிக் கொல் லப்பட்டது இதுதான் முதல் தடவை. வெகு நேரம் அவர்கள் பேச்சின்றி நின்று, திறந்த கண்களும் இரத்தக் கறை படிந்த வாயுமாகக் கிடந்த பெண்ணையும், தங்கள் எல்லாரையும் செருக்குடன் எதிர்த்து அவளருகே நின்ற இளைஞனையும் மாறி மாறிப் பார்த்தார்கள். தண்டனை கோரித் தலை வணங்கவில்லை அவன். திகைப்பிலிருந்து விடுபட்டதும் அவர்கள் அவனைப் பிடித்துக் கட்டிப்போட்டு, அப்படியே விட்டுவிட்டார்கள். அவனை உடனேயே கொன்று விடுவது மிக எளிய தண்டனையாகும், அதனால் தங்களுக்குத் திருப்தி ஏற்படாது என்று அவர் களுக்குப் பட்டது.''

இரவு அடர்ந்து கறுத்தது. விந்தையான மெல்லொலிகள் அதில் நிறைந்தன. வயலெலி கள் ஸ்தெப்பி வெளியில் ஏக்கத்துடன் சீழ்க்கை அடித்தன. முந்திரி இலைகளில் வெட்டுக் கிளி களின் கண்ணாடிக் கிறீச்சொலி கேட்டது. இலை கள் பெருமூச்சுவிட்டு இரகசியம் பேசின. முன்பு இரத்தச் சிவப்பாக இருந்த முழு மதி, தரைக்கு மேலே எழுந்ததும் வெளிறியது. மேலே போகப்

போக அதிக வெளிறடைந்த திங்கள் ஸ்தெப்பி வெளி எங்கும் நீலம் படிந்த ஒளியைப் பொழிந்தது...

''ஆயிற்றா அவனுக்கு உரிய தண்டனை எது என்று யோசிப்பதற்காக எல்லாரும் கூடினார்கள்... குதிரைகளைக் கொண்டு அவன் உடலை இரு கூராகக் கிழித்து விடலாம் என்று சிலர் சொன்னார்கள். ஆனால் அவன் செய்த குற்றத்துக்கு இது போதாது என்று பட்டது. எல்லாருமாக அவன் மேல் அம்பு எய்வது என்று நினைத்தார்கள். ஆனால் இந்த யோசனையும் நிராகரிக்கப்பட்டு விட்டது. அவனை எரிக்கலாம் என்று சிலர் கூறினார்கள். ஆனால் நெருப்பிலிருந்து எழும் புகை அவன் படும் துன்பம் கண்ணுக்குத் தெரியாதபடி மறைத்து விடும் ஆகையால் இதுவும் கைவிடப்பட்டது. இப்படி எத்தனையோ யோசனைகள் முன்வைக்கப்பட்ட போதிலும் ஒன்றாவது எல்லாருக்கும் பிடித்ததாக இல்லை. அவர்கள் இப்படி விவாதித்துக் கொண்டிருக்கையில் இளைஞனுடைய தாய் அவர்களுக்கு முன்னே முழந்தாளிட்டு மௌனமாயிருந்தாள். கருணை காட்டும்படி அவர்களை இறைஞ்சுவதற்கு வேண்டிய கண்ணீரோ சொற்களோ அவளிடம் இல்லை. அவர்கள் வெகு நேரம் விவாதித்தார்கள். பின்பு ஒரு மூதறிஞன் நீண்ட சிந்தனைக்குப் பிறகு, 'எதற்காக இப்படிச் செய்தான் என்று இவனையே கேட்போமே!' என்றான்.

''அவனிடம் கேட்டார்கள்.

'''என்னைக் கட்டவிழ்த்து விடுங்கள்! கட்டுக்

கள் இருக்கும் வரையில் நான் பேச மாட்டேன்!' என்று அவன் சொல்லி விட்டான்.

''கட்டுக்கள் அவிழ்க்கப்பட்டதும் அவன், 'உங்களுக்கு என்ன வேண்டும்?' என்று, ஏதோ அடிமைகளிடம் கேட்பது போன்ற தோரணையில் வினாவினான்...

'''முன்னமே சொல்லி விட்டோமே...' என்றான் மூதறிஞன்.

'''எனது நடத்தைக்கு நான் உங்களுக்கு விளக்கம் கூறத் தேவை என்ன?'

'''நாங்கள் புரிந்து கொள்வதற்காகத்தான். கேள், கர்வம் பிடித்தவனே! நீயே சாகத்தான் போகிறாய்... நீ செய்ததை நாங்கள் புரிந்து கொள்ளும்படி விளக்கு. நாங்கள் வாழ்ந்திருப்போம். ஆகவே இப்போது நாங்கள் அறிவதைக் காட்டிலும் அதிகமாக அறிந்து கொள்வது எங்களுக்கு நல்லது...'

'''சரி, சொல்கிறேன்—நடந்தது எனக்கே சரியாக விளங்காவிட்டாலும். அவள் என்னை நெட்டித் தள்ளினதனால் நான் தான் அவளைக் கொன்றேன் போலிருக்கிறது... எனக்கோ, அவள் தேவையாயிருந்தாள்.'

'''ஆனால் அவள் உனக்குச் சொந்தமானவள் அல்லவே!' என்றார்கள் மூதறிஞர்கள்.

'''நீங்கள் உங்களுக்குச் சொந்தமானவற்றை மட்டுந்தான் உபயோகிக்கிறீர்களா? ஒவ்வொரு மனிதனுக்கும் பேச்சு, கைகள், கால்கள் ஆகியவை மாத்திரமே சொந்தம் என்பதை நான் காண்கிறேன்... ஆனால் அவனோ

ஆடு மாடுகள், பெண்கள், நிலம், இன்னும் எத்தனையோ பொருள்களைச் சொந்தமாகக் கொள்கிறான்...'

''மனிதன் எடுத்துக்கொள்ளும் ஒவ்வொன்றுக்கும் அவன் தன்னைத்தானே, அறிவினாலும் பலத்தினாலும், சில வேளைகளில் உயிராலுமேகூட விலை செலுத்துகிறான் என்று இதற்குச் சமாதானம் கூறினார்கள் பெரியவர்கள். தான் தன்னை முழுமையாக வைத்துக் கொள்ள விரும்புவதாக அவன் பதில் சொன்னான்.

''வெகு நேரம் அவனோடு வார்த்தையாடினார்கள். உலகிலே தான்தான் முதல் என்று அவன் எண்ணுவதையும், தன்னைத் தவிர வேறு எதையும் பொருட்படுத்தவில்லை என்பதையும் கடைசியில் கண்டு கொண்டார்கள். அவன் எத்தகைய தனிமைக்குத் தன்னை ஆளாக்கிக் கொண்டிருக்கிறான் என்பதை அறிய அவர்கள் எல்லாருக்கும் பயங்கரமாக இருந்தது. அவனுக்கு இனத்தாரோ, தாயோ, ஆடு மாடுகளோ, மனைவியோ இல்லை. இவற்றில் எதுவும் வேண்டுமென்று அவன் விரும்பவுமில்லை.

''இதைப் புரிந்து கொண்டதும் அவனுக்கு என்ன தண்டனை விதிக்கலாம் என்று அவர்கள் மறுபடி யோசனை செய்யலானார்கள். ஆனால் இம்முறை அவர்கள் வெகு நேரம் விவாதிக்கவில்லை. அது வரை மௌனமாயிருந்த மூதறிஞன் இப்போது பேசினான்.

'''பொறுங்கள்! தக்க தண்டனை இருக்

கிறது. ஆயிரம் ஆண்டுகள் யோசித்தாலும் இம் மாதிரித் தண்டனையை நீங்கள் நினைத்துப் பார்த்திருக்க முடியாது! இவனுக்கு உரிய தண் டனை இவனிடமே இருக்கிறது! விட்டு விடுங்கள் இவனை. சுதந்திரமாக நடமாடட்டும். அதுதான் இவனுக்குத் தண்டனை!' என்றான்.

''அப்போது ஓர் அற்புதம் நிகழ்ந்தது. வா னில் மேகம் இல்லாவிடினும் இடி அதிர்ச்சி உண்டாயிற்று. தெய்விகச் சக்திகள் மூதறி ஞனின் சொற்களை இவ்வாறு ஆமோதித்தன. எல்லாரும் வணங்கிவிட்டுக் கலைந்து சென் றார்கள். விலக்கப் பட்டவன் என்று பொருள் படும் லாரா என்னும் பெயர் சூட்டப்பட்டு விட்டு விடப்பட்ட வாலிபனோ, தன்னை விட்டுச் செல் பவர்களை நோக்கி உரக்க நகைத்தான். தன் னந்தனியனாய், தனது தகப்பனைப் போலவே கட்டற்றவனாய் இருந்து கொண்டு நகைத்தான். ஆனால் அவன் தந்தை மனிதனல்ல... இவ னோ மானிடன். ஆயினும் பறவை போலச் சுதந் திரமாக வாழலானான். இனத்தாரின் குடி யிருப்புக்குள் வந்து ஆடு மாடுகளையும் பெண் களையும் விரும்பியவை எல்லாவற்றையும் அப கரித்துச் சென்றான். மக்கள் அவன் மேல் அம்பு களை எய்தனர். ஆனால், பெருந்தண்டனை என்ற புலப்படாக் கவசத்தினால் காக்கப்பட் டிருந்த அவனது உடலைக் கணைகளால் துளைக்க முடியவில்லை. தண்டனைப்படி அவ னால் சாக முடியாது. அவன் லாகவமுள்ள வன், கொள்ளை வெறி கொண்டவன், பலசாலி, கொடியவன். மனிதர்களை அவன் நேருக்கு

நேர் சந்திப்பது கிடையாது. தூரத்திலிருந்து தான் மக்கள் அவனைக் கண்டார்கள். இப்படி யாக அவன் நெடுங்காலம், எத்தனையோ பத் தாண்டுகள் இனத்தாரின் குடியிருப்புக்களைச் சுற்றித் திரிந்து கொண்டிருந்தான். ஒரு நாள் அவன் மக்களுக்கு வெகு அருகே நெருங்கினான். மக்கள் அவன் மீது பாய்ந்தார்கள். அவனோ இடத்தை விட்டு நகரவுமில்லை, தன்னைத் தற் காத்துக் கொள்வதற்கான அறிகுறி எதையும் காட்டவுமில்லை. அப்போது ஒரு மனிதன் விஷ யத்தை ஊகித்துக்கொண்டான்.

"'இவனைத் தொடாதீர்கள்! இவன் சாகப் பார்க்கிறான்!' என்று உரக்கக் கத்தினான்.

"ஆகவே எல்லாரும் நின்று விட்டார்கள். தங்களுக்குத் தீமை செய்தவனின் விதியை எளி தாக்க, அவனைக் கொல்ல, அவர்கள் விரும்ப வில்லை, நின்று, அவனை எள்ளி நகையாடி னார்கள். அவனோ இந்தக் கேலிப் பேச்சைக் கேட்டுக் கொண்டு, நடுநடுங்கியவாறு நின்று, தனது மார்பைக் கைகளால் இறுகப் பற்றி அங்கே எதையோ தேடினான். திடீரென்று அவன் ஒரு கல்லை எடுத்துக்கொண்டு மக்கள் மேல் பாய்ந்தான். அவர்களோ, அவனிடம் அடி படாமல் தப்பித்துக்கொண்டார்களே தவிர, அவ னைத் தாக்கவே இல்லை. முடிவில் அவன் களைத்துப் போய், புகலற்ற தீனக் கூச்சலுடன் தரையில் விழுந்தான். அப்போது அவர்கள் விலகி நின்று அவனைப் பார்த்தார்கள். அவன் எழுந்தான், போராட்டத்தின் போது எவனோ நழுவவிட்டிருந்த கத்தியை எடுத்தான், அதைத்

தன் மார்பில் பாய்ச்சிக்கொண்டான். ஆனால் கத்தியின் அலகு கல்லில் தாக்குண்டது போல முறிந்து விட்டது. அவன் மறுபடி விழுந்து நீண்ட நேரம் தலையைத் தரையில் மோதிக் கொண்டிருந்தான். ஆனால் தரை அவனது மோதலுக்கு விலகிக் கொடுத்தது. அதில் பிளவு கள் உண்டாயின.

" 'இவனால் சாக முடியாது!' என்று மகிழ்ச்சி பொங்கக் கூறினார்கள் மக்கள்.

"அவர்கள் அவனை விட்டுவிட்டு அப்பால் போய்விட்டார்கள். அண்ணாந்து பார்த்தவாறு விழுந்து கிடந்த அவன், வானில் வெகு உயரே கரும் புள்ளிகள் போலப் பறந்து கொண்டிருந்த விறல் மிக்க கழுகுகளைக் கண்டான். உலக மக் கள் எல்லாருக்கும் நஞ்சூட்டப் போதுமானது போல அவ்வளவு கொடுந்துயர் அவன் கண் களில் காணப்பட்டது. அப்போது முதல் அவன் தனியனாய், கட்டற்றவனாய், இறப்பை எதிர் பார்த்துக் கொண்டிருக்கிறான். சுற்றி அலைந்த வண்ணமாயிருக்கிறான். எங்கும் திரிந்து கொண்டிருக்கிறான்... பார்த்தாயா, இப்போதே அவன் வெறும் நிழல் ஆகி விட்டான். என் றென்றும் இப்படியே இருந்து வருவான்! மனி தர்களுடைய மொழியோ அவர்களது செயல் களோ, எதுவுமே அவனுக்குப் புரிவதில்லை. எப்போதும் எதையோ தேடி அலைகிறான், திரி கிறான்... அவனுக்கு வாழ்வு இல்லை. சாவும் அவனுக்கு அருள் புரிய மாட்டேன் என்கிறது. மக்களுக்கிடையே அவனுக்கு இடமில்லை...

செருக்குக்கு மனிதன் அடைந்த தண்டனை இப்படிப்பட்டது!''

கிழவி பெருமூச்செறிந்து பேச்சை நிறுத்தினாள். அவளது தலை மார்பில் படிந்து, சில தடவை விசித்திரமாக ஆடியது.

நான் அவளை நோக்கினேன். அவளுக்கு உறக்கம் வந்து விட்டது என்று எனக்குப் பட்டது. எதனாலோ அவள் மேல் எனக்கு விந்தையான இரக்கம் உண்டாயிற்று. கதை முடிவில் அவள் பெருமிதம் வாய்ந்த, அச்சுறுத்தும் தோரணையைக் கடைப்பிடித்தாளாயினும் அவளுடைய குரலில் பயபக்தியுள்ள அடிமைத் தனம் தொனித்தது.

கடற்கரையில் இருந்தவர்கள் பாடினார்கள், விசித்திரமாகப் பாடினார்கள். முதலில் பெண்ணின் தணிந்த மென் குரல் ஒலித்தது. அது இரண்டு மூன்று ஸ்வரங்களைப் பாடியதும் இன்னொரு குரல் ஆரம்பத்திலிருந்து பாட்டை மறுபடி பாடியது. அதே சமயம் முதல் குரல் தொடர்ந்து இசைத்தது... அப்புறம் மூன்றாவது, நான்காவது, ஐந்தாவது குரல்கள் ஒன்றன் பின் ஒன்றாகத் தொடக்கத்திலிருந்து அதே பாட்டை ஆரம்பித்தன. திடீரெனப் பல ஆண் குரல்கள் அந்தப் பாட்டையே முதலிலிருந்து சேர்ந்து பாடின.

ஒவ்வொரு பெண் குரலும் முற்றிலும் தனித்தனியே ஒலித்தது. அவை எல்லாம் பலநிற மலையோடைகள் போலப் புலப்பட்டன. அவை எங்கோ உயரத்திலிருந்து சரிவு வழியே தத்திப் பாய்ந்து, அவற்றை நோக்கி மேலே மேலே

நீந்திவந்த ஆழ்ந்த ஆண் குரல்களின் அலையுடன் கலகலவொலியுடன் கலந்து ஒன்றாகி, அதிலிருந்து வேறாகப் பிரிந்து, அதை அமிழ்த்தி எழுந்து, பின்பு ஒன்றன் பின் ஒன்றாக, தூய, வலிய தொனியுடன் மேல் ஸ்தாயிக்கு எழுந்தன.

குரல்களின் காரணமாக, அலை யோசை காதில் படவில்லை...

## 2

இஸெர்கீல் கிழவி தலையை நிமிர்த்தி, பற்களற்ற ஈறுகள் தெரியும்படி புன்னகை செய்து, ‘‘இந்த மாதிரிப் பாடுவதை வேறு எங்காவது கேட்டிருக்கிறாயா?’’ என்று வினவினாள்.

‘‘இல்லை. ஒருபோதுமே கேட்டது கிடையாது...’’

‘‘நீ கேட்கப் போவதுமில்லை. பாடுவதில் எங்களுக்கு ஒரே மோகம். அழகர்கள் தான் நன்றாகப் பாட முடியும்—வாழ்வில் பற்று உள்ள அழகர்கள். நாங்கள் வாழ்வில் பற்று உள்ளவர்கள். நீயே பாரேன். அங்கே பாடுகிறவர்கள் நாள் முழுதும் வேலை செய்து களைத்துப் போகவில்லையா? பொழுது புலர்ந்தது முதல் சாயும் வரை உழைத்தார்கள். ஆனபோதிலும் சந்திரன் உதித்ததுமே பாடத் தொடங்கி விட்டார்கள்! வாழத் தெரியாதவர்கள் படுத்து உறங்கியிருப்பார்கள். வாழ்வில் இன்பம் காண்பவர்களோ, பாடுகிறார்கள்.’’

''ஆனால் உடல் நலம்...'' என்று நான் ஆரம்பித்தேன்.

''வாழ்வதற்கு வேண்டிய ஆரோக்கியம் எப் போதுந்தான் இருக்கும். உடல் நலமாம்! உன் னிடம் பணம் இருந்தால் செலவழிக்க மாட்டாயா என்ன? உடல் நலமும் தங்கம் தானே. நான் இளவட்டமாக இருந்த போது என்ன செய்தேன் தெரியுமா? உதயம் முதல் அஸ்தமனம் வரை, நடுவில் அநேகமாக எழுந்திருக்காமல் கம்பளம் நெய்து கொண்டிருப்பேன். சூரிய கிரணம் போல உயிர்த் துடிப்புடன் இருந்த நான், நாள் பூராவும் கல் மாதிரி அசையாமல் உட்கார்ந் திருக்க வேண்டியதாயிற்று. எலும்பெல்லாம் நோவெடுக்கும் வரையில் உட்கார்ந்திருப்பேன். ஆனாலும் இரவு ஆனதுமே எனது காதலனிடம் பாய்ந்து போவேன். கொஞ்சிக் குலாவுவதற் காக. காதல் நீடித்த வரையில், அதாவது மூன்று மாதங்கள், நான் இப்படியே செய்து வந் தேன். அந்தக் காலத்தில் எல்லா இரவுகளை யும் அவனுடனேயே கழித்தேன். எவ்வளவு காலம் வரை வாழ்ந்திருக்கிறேன் பார்—இத் தனைக்கும் இரத்தம் போதுமானதாய் இருந் திருக்கிறதே! அதிலும் நான் எவ்வளவு காத லித்தேன்! எத்தனை முத்தங்கள் வாங்கிக் கொண்டேன், கொடுத்தேன்!..''

நான் அவளுடைய முகத்தைக் கூர்ந்து நோக் கினேன். அவளது கரு விழிகள் மங்கலாகவே இருந்தன. நினைவுகள் அவற்றைப் பளிச்சிடப் பண்ணவில்லை. அவளுடைய வறண்டு வெடித்த உதடுகள், நரை ரோமங்கள் வளர்ந்திருந்த கூர்

மோவாய், ஆந்தை அலகு போல வளைந்து சுருக்கம் விழுந்த மூக்கு ஆகியவற்றின் மீது நிலவு ஒளி வீசியது. கன்னங்களுக்குப் பதிலாகக் கருங் குழிகள் தாம் இருந்தன. அவற்றின் ஒன்றில் சாம்பல் நிற மயிர்க் குச்சம், அவள் தலையைச் சுற்றிக் கட்டியிருந்த சிவப்புக் கந்தல் துணிக்கு வெளியே துருத்திக்கொண்டிருந்தது. அவளது முகம், கழுத்து, கைகள், எல்லா வற்றிலும் தோல் மீது வலைவலையாகச் சுருக் கம் விழுந்திருந்தது. இஸெர்கீல் கிழவியின் ஒவ்வோர் அங்க அசைவின் போதும், அந்த வறண்ட தோல் எல்லாம் வெடித்து அடல் அடலாகப் பெயர்ந்து விழுந்து விடும் என்றும், மங்கிய கரு விழிகள் கொண்ட வெற்று எலும்புக் கூடு மட்டுமே என் எதிரே மிஞ்சியிருக்கும் என் றும் நான் எதிர்பார்த்தேன்.

அவள் தனது கரகரத்த குரலில் மீண்டும் பேசத் தொடங்கினாள்:

"ஃபால்சீ என்னும் இடத்துக்கு அருகே, பிர்லாத் ஆற்றின் கரையில் நான் என் தாயா ரோடு வசித்து வந்தேன். எங்கள் பண்ணைக்கு அவன் வந்த போது எனக்குப் பதினைந்து வயது. உயரமும் லாகவமும், கரு மீசையும் குதூகலமுமாக இருந்தான் அவன். படகிலே உட்கார்ந்தபடியே, 'ஏய்! உங்களிடம் சாராய மும்... எனக்குத் தின்பதற்கு ஏதாவதும் இருக் கின்றனவா?' என்று கணீரென்ற குரலில் அவன் கேட்டது சன்னல் வழியாக எங்கள் கா தில் விழுந்தது. நான் சன்னலுக்கு வெளியே, ஆஷ்மரக் கிளைகளின் ஊடாகப் பார்வையைச்

செலுத்தினேன். நிலவு ஒளியில் ஆறு ஒரே நீல மாகப் பளிச்சிட்டது. அவன், வெள்ளைச் சட் டையும் முனைகள் இரு புறமும் தொங்கும் படி இடுப்பைச் சுற்றிக் கட்டிய அகன்ற கச் சையுமாக, படகில் ஒரு காலும் கரையில் ஒரு கா லும் ஊன்றி நின்றவாறு, ஒய்யாரமாக அசைந் தாடியபடியே ஏதோ பாடிக்கொண்டிருந்தான். என்னைக் கண்டதும், 'ஆகா, எப்பேர்ப்பட்ட அழகி இங்கே இருக்கிறாள்!.. எனக்கு இது தெரியாமல் போயிற்றே!' என்றான்— என்னைத் தவிர மற்ற எல்லா அழகிகளையும் அறிந்தவன் போல! நான் அவனுக்குச் சாரா யமும் வெந்த பன்றி இறைச்சியும் கொடுத் தேன்... நான்கு நாள்களுக்குள் என்னையே முழுவதும் அவனுக்குக் கொடுத்து விட்டேன்... நாங்கள் இருவரும் இரவெல்லாம் படகில் சுற்றுவோம். அவன் வந்து வயலெலி போல மெதுவாகச் சீழ்க்கை அடிப்பான். நான் மீன் போலத் துள்ளி சன்னல் வழியாக வெளியே குதிப்பேன். அப்புறம் இருவரும் படகில் புறப் பட்டு விடுவோம்... அவன் ப்ரூத் என்ற ஆற்றுப் பகுதியைச் சேர்ந்த மீனவன். பின்னால் என் தாயார் எல்லா விஷயத்தையும் தெரிந்து கொண்டு என்னை அடித்த போது, தன்னுடன் டானூப் நதிக்கும் அதற்கும் அப்பால் தூனாய் ஆற்றின் கிளை நதிக்கு வந்துவிடும்படி என் னை இணங்கச் செய்ய முயன்றான். ஆனால் அதற்குள் எனக்கு அவன் மேல் இருந்த ஆசை போய் விட்டது— எப்போது பார்த்தாலும் பாடு வதும் முத்தமிடுவதும் தவிர மேற்கொண்டு ஒன்

றுமே செய்யவில்லை அவன்! எனக்கு இது சலித்துப் போயிற்று. அந்தச் சமயத்தில் குத்ஸௌலியர்கள் அந்த வட்டாரங்களில் கூட்டமாக வருவதுண்டு. அங்கே அவர்களுக்குக் காதலிகள் இருந்தார்கள்... இந்தப் பெண்கள் பாடு ஒரே கொண்டாட்டந்தான். ஒரு காதலி காத்திருப்பாள், தனது கார்ப்பேத்தியக் காதலன் வரவை எதிர்நோக்கி—அவன் சிறையிலிருக்கிறானோ அல்லது ஏதேனும் அடிதடியில் எங்காவது கொல்லப்பட்டு விட்டானோ என்று தெரியாமல். திடீரென்று அவன் தனியாகவோ, இரண்டு மூன்று நண்பர்களுடனோ ஆகாயத்திலிருந்து குதித்தவன் போல வந்து சேருவான். காதலிக்கு விலைமிக்க பரிசுகள் கொண்டுவருவான்—அவனுக்குத்தான் எல்லாம் இலகுவாகக் கிடைத்தனவே! அவளுடைய வீட்டில் விருந்துண்பான், நண்பர்கள் முன்னிலையில் அவளைப் புகழ்வான். இதனால் அவளுக்கு இன்பமாயிருக்கும். என்னுடைய தோழி ஒருத்திக்கு குத்ஸௌலியக் காதலன் இருந்தான். குத்ஸௌலியர்களை எனக்குக் காட்டும்படி நான் அவளைக் கேட்டுக் கொண்டேன்... அவள் பெயர் என்னவோ? எனக்கு மறந்து போய் விட்டது... எல்லாமே மறக்க ஆரம்பித்து விட்டன இப்போது. இதெல்லாம் நடந்து வெகு காலம் ஆகிவிட்டது அல்லவா, அத்தனையும் மறந்து போவது இயல்புதானே! இந்தப் பெண் என்னை ஒரு வாலிபனுக்கு அறிமுகப்படுத்தினாள். அழகன்... செம்பட்டையன், மீசை, சுருட்டை முடி, எல்லாமே செம்பட்டை! நெருப்பு

ரிவது போன்ற தலை. எப்போதும் ஒரே ஏக்க ாய் இருப்பான். சில வேளைகளில் கொஞ்சிக் லாவுவான், மற்ற வேளைகளிலோ காட்டு லங்கு போலக் கர்ஜிப்பான், சண்டையிடுவான். ருதரம் அவன் என் முகத்தில் அறைந்தான்... ான் பூனை போல அவன் மேல் பாய்ந்து அவன் கன்னத்தை வெடுக்கென்று கடித்து ட்டேன்... அதன் பிறகு அவன் கன்னத்தில் ழிவு ஏற்பட்டு விட்டது... அதில் நான் முத்தமி ட போது அவனுக்கு உவப்பாய் இருக்கும்...''

''மீனவன் என்ன ஆனான்?'' என்று கேட் டன்.

''மீனவனா? அவன் வந்து... குத்ஸௌலியர் ளின் கூட்டத்தில் சேர்ந்து கொண்டான். ஆரம் த்தில் என்னைத் தன்னுடன் வரும்படிக் கஞ்சினான், வராவிட்டால் ஆற்றில் தள்ளி விடு தாகப் பயமுறுத்தினான். ஆனால் கொஞ்ச ாலத்துக்கு அப்புறம் அப்படிச் சொல்வதை டுவிட்டான். கூட்டத்தோடு சேர்ந்து, வே றாரு பெண்ணைப் பிடித்துக்கொண்டான்... ரண்டு பேரையுமே ஒரே சமயத்தில் தூக்கிலிட்டு டார்கள் — மீனவனையும் குத்ஸௌலியனை ட. அவர்களைத் தூக்குப் போடுவதைப் பார்ப் தற்காக நான் போனேன். இது நடந்தது தப்ரூ வில். மீனவன் ஒரேயடியாக வெளிறிப் போய், பூது கொண்டே தூக்கு மேடைக்குப் போனான். த்ஸௌலியனோ, சுங்கான் புகைத்துக் கொண் ருந்தான். சுங்கான் புகைத்துக் கொண்டு, ககளைப் பைக்குள் நுழைத்தபடி நடந்தான். வனுடைய ஒரு பக்கமீசை தோள்மேல் கிடந்

தது, மற்றப் பக்கமீசை மார்புக்கு மேல் தொங்கிற்று. என்னைப் பார்த்ததும் அவன் சுங்கானை வாயிலிருந்து எடுத்து, 'விடை கொடு!..' என்று கூவினான்... ஓர் ஆண்டு பூராவும் நான் அவனுக்காகத் துக்கம் காத்தேன். ஹ்ம்!.. அவர்கள் கார்ப்பேதியாவில் தங்கள் ஊர்களுக்குத் திரும்ப நினைத்த சமயத்தில் இது நிகழ்ந்தது. ஒரு ருமேனியனின் வீட்டில் அவர்களுக்குப் பிரிவு உபசார விருந்து நடந்தது. அங்கே அவர்கள் பிடிபட்டார்கள். இரண்டு பேர் மாத்திரமே கைது செய்யப்பட்டார்கள். சிலர் கொல்லப்பட்டார்கள், மற்றவர்கள் ஓடி விட்டார்கள்... அப்புறம் ருமேனியனுக்குச் சரியான பாடம் கற்பித்தார்கள்... அவனுடைய வீட்டையும் மாவுமில்லையும் தானிய வயல்களையும் களஞ்சியத்தையும் சுட்டுப் பொசுக்கி விட்டார்கள். அதன் பிறகு அவன் பிச்சைக்காரன் ஆகி விட்டான்.''

''இதைச் செய்தது யார், நீயா?'' என்று கேட்டு வைத்தேன்.

''குத்ஸூலியர்களுக்கு எத்தனையோ நண்பர்கள் இருந்தார்கள். நான் மட்டுமே அல்ல... அவர்களுக்கு எல்லாரையும் விட நல்ல நண்பராக இருந்தவர் இறந்தவர்களின் ஆன்ம சாந்திக்காகப் பிரார்த்தனை செய்தார்...''

கடற்கரையில் பாடுவது இப்போது நின்று விட்டது. கிழவியின் குரலுடன் சேர்ந்து ஒலித்தது கடல் அலைகளின் ஓசை மட்டுமே. சிந்தனை நிறைந்த, ஓய்வற்ற அவ்வோசை, ஓய்வற்ற வாழ்வு பற்றிய இக்கதைக்கு அருமையான பக்கவாத்தியமாக அமைந்தது. இரவின் மென்

மை வரவர அதிகரித்தது. நிலவின் நீல ஒளி மேன் மேலும் மிகுந்து கொண்டு போயிற்று. கண் ணுக்குப் புலப்படாத இரவுவாழ் உயிர்களின் ஓட்ட சாட்டம் நிறைந்த வாழ்வின் சந்தடி கொஞ்சங் கொஞ்சமாகத் தணிந்து அடங்கியது. காற்றின் வேகம் அதிகரித்து விட்டபடியால் மேன்மேலும் ஓங்கி எழுந்த அலையோசை இந்த அரவங்களை அமுக்கி விட்டது.

"ஒரு துருக்கியனையும் நான் காதலித் தேன். ஸ்குடாரி என்னும் இடத்தில் அவனு டைய அந்தப்புரத்தில் இருந்தேன். ஒரு வாரம் வரையும் அங்கே வசித்தேன். மோசமில்லை... ஆனால் எனக்கு அலுப்புத் தட்டி விட்டது... அவர் பெண்கள், பெண்கள்தான்... எட்டு பேர் இருந்தார்கள் அவனுடைய அந்தப்புரத்திலே... தின்பதும் தூங்குவதும் வம்பு அளப்பதுந்தான் நாள் முழுவதும் அவர்கள் செய்த வேலை... இல்லாவிட்டால் சச்சரவிடுவதும் பெட்டைக் கோழி கள் போலக் கொக்கரிப்பதும்... அந்தத் துருக் கனுக்கு வாலிபம் கடந்து விட்டது. அவன் தலைமயிர் அநேகமாக நரைத்திருந்தது. பிர பலத மிடுக்குள்ளவன், பணக்காரன். அதிகார தோரணையுடன் பேசுவான்... அவன் கண்கள் கருமையானவை... நேராகப் பார்க்கும்... இதயத் தைத் உள்ள ஊடுருவி நோக்கும். தொழுகை செய்வதில் அவனுக்கு ரொம்பப் பிரியம். நான் அவனைச் சந்தித்தது புகாரெஸ்டில்... சந்தை யில் ஏதோ பேரரசன் போல நடந்தான். அபாரப் பெருமிதம் ததும்ப, கன கம்பீரமாகப் பார்த் தான். நான் அவனை நோக்கிப் புன்னகை

செய்தேன். அன்று மாலையே என்னை நடுத் தெருவில் பிடித்து அவனிடம் கொண்டு போனார்கள் அவன் ஆட்கள். அவன் சந்தனமும் பேரீச்சையும் வியாபாரம் செய்யும் வர்த்தகன். ஏதோ வாங்குவதற்காக புகாரெஸ்டுக்கு வந்திருந்தான். 'என்னோடு வருகிறாயா?' என்று கேட்டான். 'தாராளமாக வருகிறேன்!' 'நல்லது!' ஆக நான் அவனோடு போனேன். பெரிய சீமான், இந்தத் துருக்கியன். அவனுக்கு ஒரு மகன் இருந்தான். கரு முடியும் ஒரே லாகவமான மேனியும் கொண்ட சிறுவன்... பதினாறு வயதிருக்கும். அவனோடுதான் நான் துருக்கியனிடமிருந்து ஓடினேன்... பல்காரியாவுக்கு, லோம்-பலான்கா என்னும் இடத்துக்கு ஓடினேன்... அங்கே ஒரு பல்காரியப் பெண் தனது மணமகன் விஷயமாகவோ, கணவன் விஷயமாகவோ என் மார்பில் கத்தியால் குத்திவிட்டாள்.

"கன்னிமடம் ஒன்றில் ரொம்ப காலம் நோயாய்க் கிடந்தேன். போலந்துப் பெண் ஒருத்தி எனக்குப் பணிவிடை செய்தாள். அவளுடைய சகோதரன் அவளைப் பார்க்க வருவான். ஆர்ஸெர்-பலான்காவுக்குப் பக்கத்திலிருந்த கிறிஸ்தவ மடம் ஒன்றில் பாதிரி அவன்... என் முன்னே புழு நெளிவது போல நெளிவான்... உடம்பு சரியானதும் நான் அவனோடு போய் விட்டேன், அவன் தேசமான போலந்துக்கு."

"இரு, இரு! துருக்கியப் பையன் என்ன ஆனான்?"

"பையனா? இறந்து போனான். வீட்டு நினை

வில் ஏக்கங்கொண்டோ, காதல் காரணமாக வோ, தெரியாது... புதிதாக நட்ட செடி கடும் வெயிலில் கருகிப் போகுமே, அந்த மாதிரி வாடிப் போனான்... சருகாகக் காய்ந்து போய் விட்டான்... பனிக்கட்டி போல ஒரேயடியாக வெ ளிறி, நீலம் பாரித்த உடலுடன் அவன் படுத் திருந்த கோலம் இப்போதும் என் நினைவில் இருக்கிறது. அந்த வேளையிலுங்கூடக் காதல் அவன் உள்ளத்தில் தழல் வீசிக் கொண்டிருந் தது... குனிந்து தன்னை முத்தமிடும்படி ஓயா மல் கெஞ்சிய வண்ணமாயிருந்தான்... நான் அவனைக் காதலித்தேன், ஏராளமாக முத் தங்களைச் சொரிந்தேன், நினைவிருக்கிறது... அப்புறம் அவன் நிலைமை இன்னும் மோசமாகி விட்டது. அவன் அநேகமாக அசையவே இல்லை. படுக்கையில் கிடந்தபடியே, என்னையும் அருகில் படுத்துத் தனக்குக் கதகதப்பு உண்டாக்கும்படி பரிதாபகரமாகக் கெஞ்சினான், பிச்சைக்காரன் யாசகம் கேட்பது போல. நான் அவன் பக்கத்தில் படுத்துக் கொண்டேன். படுத்தேனோ இல்லை யோ, அவன் உடம்பு நெருப்பாய்க் கொதிக்க ஆரம்பித்து விட்டது. ஒரு தடவை நான் கண் விழித்தவள், அவன் குளிர்ந்து போயிருப்ப தைக் கண்டேன்... சவமாகி விட்டான் அவன்... அவனுக்காகப் புலம்பி அழுதேன். யார் சொல்ல முடியும்? அவனைக் கொன்றது ஒருவேளை நானேதானோ என்னவோ. அப்போதே நான் வயதில் அவனுக்கு இரு மடங்கு மூத்தவள். எனக்கு வலிவும் ரொம்ப அதிகம், ஜீவ ஓட்ட மும் மிகுதி... அவனோ?.. பச்சைப் பிள்ளை!..''

அவள் பெருமூச்செறிந்தாள். அதோடு மூன்று தடவை சிலுவைக் குறி இட்டுக்கொண்டு (அவள் இவ்வாறு செய்ததை நான் அப்போது தான் முதல் தடவையாகக் கண்டேன்) வறண்ட உதடுகளால் ஏதோ முணுமுணுத்தாள்.

''அப்படியானால் நீ போலந்துக்குப் போனாயாக்கும்...'' என்று கதையை விட்ட இடத்திலிருந்து எடுத்துக்கொடுத்தேன்.

''ஆமாம்... அந்தச் சிறுகூடான போலந்துக்காரனோடு. அவன் கேவலமானவன், இழி பிறவி. பெண் உறவு வேண்டியிருக்கும் போது பூனை மாதிரி ஒரே கொஞ்சலும் குழைவுமாக என்னிடம் வந்து தேன் சொட்டச் சொட்டப் பேசுவான். நான் அவனுக்குத் தேவைப்படாத போதோ, சவுக்கடி போலச் சொற்களால் விளாறுவான். ஒரு முறை நாங்கள் ஆற்றோரமாக நடந்து கொண்டிருக்கையில் அவன் என்னைப் புண்படுத்தும்படி அகந்தையுடன் பேசினான். அவ்வளவுதான்!.. எனக்கு மண்டிக் கொண்டு வந்து விட்டது ஆத்திரம்! கொதிப்பு ஏறிய கீலெண்ணெய் போலப் பொங்கி எழுந்தேன்! குழந்தையைத் தூக்குவது மாதிரி (அவன் சின்ன ஆள் தானே) அவனைக் கைகளால் பிடித்துத் தூக்கி, அவன் விலாக்களை இறுக்கினேன் பாரு, அவன் முகமெல்லாம் நீலம் பாரித்து விட்டது. அவனை ஒரு சுழற்று சுழற்றி ஆற்றுக்குள் வீசி விட்டேன். அவன் வீறிட்டான். அவன் அலறுவது வேடிக்கையாயிருந்தது. கரை மேலிருந்த படியே அவனைக் குனிந்து பார்த்தேன். அவன் நீரில் தத்தளித்

துக் கொண்டிருந்தான். நான் போய் விட்டேன். அப்புறம் அவனை நான் பார்க்கவே இல்லை. இந்த விஷயத்தில் நான் அதிர்ஷ்டசாலி. ஒரு தரம் காதலித்தவனைப் பிற்பாடு நான் சந்தித்ததே கிடையாது. இத்தகைய சந்திப்புகள் நல்லவையே அல்ல—செத்தவர்களைக் காண்டது போலத்தான்.''

கிழவி பேசுவதை நிறுத்திவிட்டுப் பெருமூச்செறிந்தாள். அவள் சொற்கள் மூலம் உயிரூட்டிய மனிதர்களை நான் கற்பனை செய்து பார்த்தேன். எரிநெருப்புப் போன்ற செம்முடியும் மீசையுமாக அமைதியுடன் சுங்கான் புகைத்தவாறு தூக்கு மேடைக்குச் சென்ற குத்ஸூலியன். ஒருவேளை அவனுக்கு வறண்ட நீல விழிகள் போலும். எல்லாவற்றையும் அவை கூர்ந்தும் உறுத்தும் நோக்கியிருக்கும். அவன் பக்கத்திலே ப்ரூத் பகுதி வாசியான கருமீசைக்காரவன், சாக விருப்பம் இன்றி அழுது கொண்டிருக்கிறான். அணுகிவரும் சாவின் ஏக்கம் படிந்து அவன் முகம் வெளிறியிருக்கிறது. குதூகலம் ததும்பும் விழிகள் ஒளியிழந்து விட்டன. கண்ணீரால் நனைந்த அவனது மீசை, விகாரமாகக் கோணும் வாயின் இரு ஓரங்களிலும் சோகம் தோன்றத் தொங்குகிறது. அதோ வயது முதிர்ந்த, மிடுக்கு நிறைந்த துருக்கியன். அவன் விதியில் நம்பிக்கை உள்ளவனாகவும் ஏதேச்சாதிகாரியாகவும் இருப்பான். அவன் அருகே அவன் மகன், கிழக்குப் பிரதேசத்தைச் சேர்ந்த வெளிறிய, மென்மையான மலர் முத்தங்களினால் நஞ்சேறி வாடியது. அப்புறம்

அகந்தை பிடித்த போலந்துக்காரன், சரசரமும் கொடூரமும், செஞ்சொற் பேச்சும் கடுமொழியும் ஒருங்கே வாய்ந்தவன்... இவர்கள் எல்லாருமே இப்போது மங்கிய நிழல்கள்தாம். எவளை அவர்கள் தழுவி முத்தமிட்டார்களோ அவள் என் அருகே உட்கார்ந்திருக்கிறாள் —உயிரோடு, ஆனால் காலத்தினால் வாடி வதங்கி, உடலின்றி, உதிரமின்றி, ஆசைள் அற்ற உள்ளத்துடன், ஜீவனற்ற விழிகளுடன்—தானும் அநேகமாக நிழல் போன்று.

அவள் தன் கதையைத் தொடர்ந்தாள்:

''போலந்தில் என் பாடு கஷ்டமாயிருந்தது. அங்குள்ளவர்கள் இருதயமற்றவர்கள், பொய்யர்கள். அவர்களுடைய பாம்புச் சீறல் மொழி எனக்குத் தெரியாது. எப்போதும் சீறல்தான்... என்னதான் சீறுவார்களோ? ஆண்டவன் அவர்களுக்கு இந்தப் பாம்பு மொழியைக் கொடுத்தது அவர்கள் பொய்யர்கள் ஆனபடியால்தான். எங்கே போகிறோம் என்பது தெரியாமல் அந்த தேசத்தில் சுற்றி அலைந்தேன். ருஷ்யர்களாகிய உங்களுக்கு எதிராகக் கலகம் செய்ய அவர்கள் ஆயத்தம் செய்து கொண்டிருப்பதைக் கண்டேன். போஹ்னியா நகரம் வரை போனேன். ஒரு யூதன் என்னை விலைக்கு வாங்கிக்கொண்டான் — தனக்காக அல்ல, என் உடலை வைத்துச் சம்பாதிப்பதற்காக. நான் அதற்கு ஒப்பினேன். பிழைப்பதற்கு ஏதாவது செய்ய வேண்டுமே. எனக்கோ எதுவும் செய்யத் தெரியாது. ஆகவே உடலை விற்க ஒருப்பட்டேன். ஆனால் ஒன்று மட்டும் நினைத்துக் கொண்டேன்: பிர்லாத் ஆற்றின்

கரையில் உள்ள சொந்தப் பண்ணைக்குத் திரும்புவதற்குத் தேவையான பணம் சேர்ந்ததும் இந்தத் தளைகளை அறுத்துக்கொள்வேன்—அவை எவ்வளவு வலிவாயிருந்தாலும் சரியே—என்று. இவ்வாறு அங்கே வாழ்ந்து வந்தேன். பணக்காரச் சீமான்கள் என் வீட்டுக்கு வந்து விருந்தாடுவார்கள். இதற்கு அவர்கள் கொள்ளைப் பணம் செலவிட வேண்டியிருந்தது. என் பொருட்டு அவர்கள் ஒருவருக்கொருவர் சச்சரவிட்டு ஒருவரையொருவர் அழித்துக் கொண்டார்கள். ஒருவன் என்னை அடைவதற்கு நெடுநாள் முயன்றான். முடிவில் என்ன செய்தான் தெரியுமா? ஒரு நாள் அவன் என்னிடம் வந்தான். வேலையாள் ஒரு மூட்டையைச் சுமந்து கொண்டு அவனோடு வந்தான். சீமான் மூட்டையை எடுத்து அவிழ்த்து என் தலை மேல் கொட்டினான். தங்க நாணயங்கள் என் தலையில் பட்டுச் சிதறின. அவை தரையில் விழுந்த போது ஏற்பட்ட கணீரொலி என் காதுகளுக்கு இதமாயிருந்தது. ஆயினும் நான் அந்தச் சீமானை வெளியே விரட்டி விட்டேன். ஒரே படியாகக் கொழுத்து, ஈரித்த முகமும் பெரிய திண்டுத் தலையணை போல ஊதிய சால் வயிறும் கொண்டவன் அவன். திருப்தியாக இரை யெடுத்த பன்றி போலிருந்தான். எனக்குத் திருமுழுக்குச் செய்வதற்காகத் தனது நிலம் எல்லாவற்றையும் வீடுகளையும், குதிரைகளையும் விற்று விட்டதாக அவன் சொன்ன போதிலும் நான் அவனைத் துரத்தி விட்டேன். அந்தச் சமயத்தில் நான் தகுதி வாய்ந்த சீமான் ஒரு

வன்மீது காதல் கொண்டிருந்தேன். அவன் முகமெல்லாம் வெட்டுக்காயத் தழும்புகள். கிரேக்கர்களின் தரப்பில் துருக்கியருக்கு எதிராகச் சண்டை போட்டு விட்டு அந்நேரந்தான் திரும்பியிருந்தான். துருக்கியரின் வாள்களால் ஏற்பட்டிருந்த காயங்கள் அவன் முகம் முழுவதிலும் குறுக்கும் நெடுக்குமாகத் தழும்பிட்டிருந்தன. அவனல்லவா மனிதன்!.. அவனோ போலந்துக்காரன்தானே, கிரேக்கர்கள் எக்கேடு கெட்டால் அவனுக்கு என்ன? ஆனாலும் அவன் கிரேக்கர்களின் பகைவர்களோடு சண்டை போடக் கிளம்பி விட்டான். சண்டையில் அவன் முகம் வெட்டுப் பட்டுக் கிழிந்து போயிற்று, ஒரு கண் துண்டாகத் தெறித்து விழுந்து விட்டது, இடது கை விரல்களில் இரண்டு துணிக்கப்பட்டு விட்டன... அவனோ போலந்துக்காரன் தானே, கிரேக்கர்கள் எக்கேடு கெட்டால் அவனுக்கு என்ன? விஷயம் இதுதான்: துணிகரச் செயல்களில் அவனுக்கு மோகம். அத்தகையவனுக்கு அவற்றைப் புரியவும் முடியும், புரிவதற்குச் சந்தர்ப்பமும் எப்போதும் கிடைத்துவிடும். வாழ்க்கையில் துணிகரச் செயல்கள் புரிவதற்கு எப்போதும் இடமுண்டு, தெரிகிறதா? அதற்கு வாய்ப்பு பெறாதவர்கள் ஒன்று சோம்பேறிகள், இல்லாவிட்டால் கோழைகள், அல்லது வாழ்க்கை என்ன என்பதைப் புரிந்து கொள்ளாதவர்கள். ஏனென்றால் மக்கள் மட்டும் வாழ்க்கையைப் புரிந்துகொண்டு விட்டால், தனக்குப் பின் தனது நிழலை அதில் விட்டுச் செல்வதற்கு ஒவ்வொருவனும் விரும்புவான். அப்போது வாழ்க்கை மக்களை இருந்த

சுவடு தெரியாதபடி விழுங்கி விடாது... ஆகா, விழுப்புண்களால் தழும்பேறிய அந்த மனிதன் அருமையானவன்! ஏதேனும் வீரச் செயல் புரி வதற்காக உலகின் மறு கோடிக்குப் போவதற்குக் கூட அவன் தயாராயிருந்தான். இளர்ச்சியின் போது உங்களவர்கள் அவனைக் கொன்றுவிட் டார்கள் என்று நினைக்கிறேன். ஹங்கேரியர் களைத் தாக்குவதற்கு நீங்கள் எதற்குத் தான் போனீர்களோ? சரி, சரி, ஒன்றும் பேசாதே!..''

என்னைப் பேசாதிருக்கும்படிக் கட்டளை யிட்டுவிட்டு இஸெர்கீல் கிழவி தானும் மௌன மாகச் சிந்தனையில் ஆழ்ந்தாள். சற்று நே ரத்தில் மீண்டும் கதையைத் தொடர்ந்தாள்:

''எனக்கு ஒரு ஹங்கேரியனைத் தெரியும். ஒரு நாள் அவன் என் வீட்டை விட்டுப் போனான் —அப்போது பனிக்காலம். அப்புறம் வசந்த காலம் வந்து வெண்பனி உருகத் தொடங்கிய பின்பு தான் துப்பாக்கிக் குண்டு பாய்ந்த தலையு டன் அவன் உடல் வயலில் கண்டெடுக்கப்பட்டது. அப்படியாக்கும் சேதி! காதலினால் சாகிறவர்கள் பிளேக் நோயால் மடிபவர்களைவிட எண்ணிக் கையில் குறைவில்லை. தெரிகிறதா? கணக்கிட்டுப் பார்த்தால் எண்ணிக்கை குறைவாகவே இருக் காது... என்ன சொல்லிக் கொண்டிருந்தேன்? ம்ம், போலந்தைப் பற்றி... ஆமாம், என்னுடைய கடைசி ஆட்டத்தை அங்கே தான் ஆடினேன். ஒரு கனவானைச் சந்தித்தேன்... அழகன் என்று சொன்னால் போதாது! கொள்ளை அழகன். நா னோ, அப்போதே கிழவியாகி விட்டேன். ஆமாம், கிழவி! எனக்கு நாற்பது வயது ஆகி விட்டதோ?

அட, ஆகி விட்டது என்றே வைத்துக்கொள் வோமே... அவனோ ஒரே கர்வம் பிடித்தவன். போதாக் குறைக்குப் பெண்கள் அவனைத் தலைக்கு மேல் தூக்கி வைத்துக் கொண்டு கெடுத்து வேறு வைத்திருந்தார்கள். அவனை வசப்படுத்துவதற்கு நான் அரும்பாடு பட வேண் டியிருந்தது... ஆமாம். அவன் என்னை ஏதோ போகிற போக்கில் தனக்கு இணங்கச் செய்யப் பார்த்தான். நான் இணங்கவில்லை. ஒருபோதுமே நான் எவனுக்கும் அடிமையாய் இருந்தது கிடையாது. யூதன் கணக்கை அதற்கு முன்பே தீர்த்துவிட்டேன். ஏராளமாகப் பணத்தை அள் ளிக் கொடுத்தேன் அவனுக்கு... கிராக்கோவ் நக ருக்கு வந்து வசித்துக் கொண்டிருந்தேன். குதிரைகள், பணம், வேலையாட்கள் எல்லாம் எனக்கு உண்டு அப்போது... இந்தக் கருவக் கார ராட்சதன் என்னிடம் வந்து நான் தானாக அவனுக்கு வசமாகி விட வேண்டும் என்று பார்த்தான். இதிலே எங்களுக்குள் மனக்கசப்பு உண்டாகி விட்டது... இந்தச் சச்சரவால் நான் அழகழிந்துகூடப் போய்விட்டேன் — நினைவிருக் கிறது. இது ரொம்பக் காலத்துக்கு நீடித்தது... கடைசியில் நான் தான் ஜெயித்தேன். அவன் முழந்தாள் படியிட்டு என்னைக் கெஞ்சினான்... ஆனால் என்னை வசப்படுத்திக் கொண்டதுமே கைவிட்டு விட்டான். அப்போது தான் நான் உணர்ந்து கொண்டேன், கிழவி ஆகி விட்டேன் என்று... ஐயோ, இது எனக்கு எவ்வளவு கைப்பாய் இருந்தது! வேம்பாய்க் கசந்தது!.. நான் அந்தச் சைத்தான் மேல் மையல் கொண்

ருந்தேன்... அவனோ, என்னைக் கண்ட போதெல்லாம் கிண்டல் செய்தான்... கீழ்மகன்! மற்றவர்களிடமும் என்னைக் கேலி செய்தான். எனக்கும் அது தெரியும். எனக்குக் காட்டமா யிருந்தது, ஆமாம்! ஆனாலும் அவன் பக்கத்தி லிருந்தான், நான் இன்னும் அவனைக் காத லித்து வந்தேன். உங்களோடு—ருஷ்யர்களோடு —சண்டை போடுவதற்கு அவன் போய்விட்டதும் நான் அவனுக்காக ஏங்கிப்போனேன். ஏக்கத் தை மறக்க முயன்று பார்த்தேன், முடியவில் லை... அவனைத் தேடிக்கொண்டு புறப்படத் தீர்மானித்தேன். அவன் வார்ஸாவுக்கு அருகே, காட்டில் இருந்தான்.

"அங்கே போன பிறகுதான் தெரிய வந்தது, ருஷ்யர்கள் அவர்களை முறியடித்து விட்டார்கள் என்று... அவன் சிறை பிடிக்கப்பட்டு, பக்கத்தில் ஏதோ கிராமத்தில் வைக்கப்பட்டிருப்பதாகவும் அறிந்து கொண்டேன்.

"'அப்படியானால் நான் அவனை இனி ஒருபோதுமே காணப் போவதில்லையாக்கும்' என்று நினைத்துக்கொண்டேன். அவனைப் பார்ப்பதற்கோ ஒரேயடியாகத் துடித்தேன். ஆகவே அவனைச் சந்திக்க முயற்சி செய்யலா னேன்... பிச்சைக்காரி வேடம் போட்டுக்கொண்டு, நொண்டி மாதிரி நடித்த வண்ணம் முகத் தைத் துணியால் மூடி மறைத்தபடி அவ னிருந்த கிராமத்துக்குப் போனேன். அங்கே கஸாக்குகளும் சிப்பாய்களும் மொய்த்துக் கிடந் தார்கள்... அங்கே போவது எனக்கு அரும் பாடாய் இருந்தது! போலந்துக்காரர்கள் சிறை

வைக்கப்பட்டிருக்கும் இடத்தைத் தெரிந்து கொண்டேன். அந்த இடத்திற்குப் போவது சுலபமல்ல என்பதைக் கண்டேன். போக வேண் டியதோ எனக்கு அவசியமாயிருந்தது. ஆகவே ஓரிரவில் காய்கறித் தோட்டத்தில் பாத்திக ளுக்கு நடுவே ஊர்ந்து சென்று அந்த இடத் தை நெருங்கினேன். திடீரென்று ஒரு காவலாள் வழியில் நிற்பதைக் கண்டேன்... போலந்துக் காரர்கள் பாடுவதும் உரக்கப் பேசுவதும் என் காதில் விழுந்தன. அவர்கள் பாடியது ஏதோ பாட்டு... கர்த்தரின் தாயைப் பற்றி... என் கண்ணாளன் அர்க்காதேக்கின் குரலும் கேட் டது... ஒரு காலத்தில் ஆண்கள் என் முன்னே தரையில் ஊர்ந்தார்கள் என்பது நினைவுக்கு வந்தது... இப்போதோ, ஆண்மகன் ஒருவனுக் காக நான் பாம்பு போல மண்ணில் நெளிகி றேன், ஒருவேளை சாவை நோக்கியே ஊர்ந்து செல்கிறேனோ என்னவோ, என்று நினைக்கும் போதே எனக்குக் கசப்பாயிருந்தது. காவலாள் அரவங் கேட்டு முன்னே சாய்ந்தான். என்ன செய்வது நான்? தரையிலிருந்து எழுந்து அவ னை நெருங்கினேன். என்னிடம் கத்தியோ, வேறு ஏதேனுமோ கிடையாது, கைகளுண்டு, நாக்கு உண்டு, அவ்வளவுதான். குத்து வாளைக் கொண்டுவராமல் போனோமே என்று வருந்தி னேன். ‘பொறு!..’ என்று மெல்லச் சொன் னேன். காவல்காரச் சிப்பாயோ துப்பாக்கிச் சனி யனை என் தொண்டைக் குழிக்கு நேரே நீட்டி னான். ‘குத்தாதே, பொறு! உனக்கு நெஞ்சு இருந்தால் நான் சொல்லுவதைக் கேள்! உனக்

குக் கொடுப்பதற்கு என்னிடம் ஒன்றுமில்லை. ஆனால் உன்னைக் கெஞ்சிக் கேட்டுக் கொள்ளு கிறேன்...' என்று கிசுகிசுத்தேன். அவன் துப் பாக்கியைத் தரையில் ஊன்றிக்கொண்டு, 'போ அப்பாலே, பொம்பிளை! ஊம், போ! என்ன வேணும் உனக்கு?' என்று தணிந்த குரலில் சொன்னான். என் மகன் இங்கே சிறை வைக் கப்பட்டிருப்பதாகக் கூறினேன். 'புரிகிறதா, ஜவான்? மகன்! உனக்குந்தான் தாயார் இருக்கி றாள், இல்லையா? அப்படியானால் என்னைப் பார்—எனக்கும் உன் போலவே ஒரு மகன், அதோ, அங்கே இருக்கிறான்! அவனை ஒரு தரம் பார்க்க எனக்கு அநுமதி கொடு, ஒருகால் அவன் சீக்கிரம் இறந்து போகலாம்... இல் லை, நாளையே நீ கொல்லப்படலாம்... உன் தா யார் உனக்காகக் கண்ணீர் விட மாட்டாளா? அம்மாவைப் பார்க்காமல் சாவது உனக்குக் கஷ்டமாய் இராதா? என் மகனுக்கும் அதே போலக் கஷ்டமாய் இருக்கும். உன் மீதும் அவன் மீதும் தாயான என் மீதும் இரக்கங் காட்டு!' என்றேன்.

''அட கடவுளே, எவ்வளவு நேரம் அவனைக் கெஞ்சிக் கூத்தாடினேன் தெரியுமா? மழை பெய்து எங்களை நனைத்தது. காற்று சீறியது, முழங்கியது, முன்னும் பின்னுமாகத் தள்ளி யது. நான் அந்தக் கல்நெஞ்சுச் சிப்பாய்க்கு முன்னே சாய்ந்தாடியவாறே நின்றேன்... அவ னோ 'முடியாது!' என்று திரும்பத் திரும்பச் சொல்லிக் கொண்டிருந்தான். அவனுடைய வறண்ட குரலை ஒவ்வொரு தரமும் கேட்கும்

போதும் என் அர்க்காதேக்கைக் காண வேண்டும் என்ற ஆசை என் உள்ளத்தில் முன்னிலும் உக்கிரமாக மூண்டெரிந்தது... நான் பேசிக் கொண்டே சிப்பாயை ஏற இறங்க நோட்டமிட்டேன். அவன் குட்டையன், ஒடிசல், ஓயாமல் இருமிக் கொண்டிருந்தான். நான் அவன் முன்னே தரையில் விழுந்து, அவன் முழங்கால்களைப் பற்றிக்கொண்டு, என்னை அநுமதிக்கும்படி ஆவேசமாக மன்றாடிய படியே சடக்கெனக் காலை வாரிவிட்டு அவனை விழத் தட்டி விட்டேன். அவன் சேற்றில் விழுந்தான். நான் உடனேயே அவனை மூஞ்சி குப்புறப் புரட்டி, அவன் தலையை நீர்க் குட்டத்துக்குள் புதைய அழுத்தினேன்—அவன் கூச்சலிட முடியாதபடி. அவன் சத்தமே போடவில்லை. என்னை முதுகிலிருந்து அப்பால் தள்ளுவதற்கு முடிந்த வரை பாடுபட்டான். நானோ இரண்டு கைகளாலும் அவன் தலையைச் சேற்றுக் குழம்பலுக்குள் மேன் மேலும் ஆழ அமுக்கினேன். அவனுக்கு மூச்சு முட்டிப் போயிற்று... அப்புறம் நான் போலந்துக்காரர்கள் வைக்கப்பட்டிருந்த களஞ்சிய வீட்டுக்கு ஓடினேன். சுவரிலிருந்த பிளவு வழியாக 'அர்க்காதேக்!..' என்று கிசுகிசுத்தேன். கூர்ங்காது படைத்தவர்கள் இந்தப் போலந்துக்காரர்கள். என் குரல் செவியில் படவே பாட்டை நிறுத்தி விடவில்லை. அவனுடைய கண்கள் என் விழிகளுக்கு நேர் எதிரே தெரிந்தன. 'அங்கிருந்து வெளிவர உன்னால் முடியுமா?' என்று கேட்டேன். 'முடியும், தரை வழியாக!' என்றான். 'அப்படியானால் வெளியே வா!' ஆக நாலு

பேரும் களஞ்சிய வீட்டிலிருந்து ஊர்ந்து வெளி வந்தார்கள். என் அர்க்காதேக்கும் இன்னும் மூவரும். 'காவலர்கள் எங்கே?' என்று கேட் டான் அர்க்காதேக். 'அதோ கிடக்கிறான்!..'

''நாங்கள் சந்தடியில்லாமல் தரையோடு தரை யாகக் குனிந்து மெல்ல நடந்தோம். அடைமழை கொட்டியது, காற்று இரைச்சலுடன் வீசிற்று. கிராமத்திலிருந்து வெளியேறி ஒரு காட்டுக்குள் புகுந்து வெகு நேரம் மௌனமாக நடந்தோம். இந்த மாதிரி வேகமாக நடந்தோம். அர்க் காதேக் என் கையைப் பிடித்துக்கொண்டான். அவன் கரம் கொதித்தது, நடுங்கிற்று. ஆகா!.. அவன் பேசாமல் நடந்த வரை, அவனோடு போவது எனக்கு ஒரே இன்பமாக இருந்தது. வேட்கை மிகுந்த என் வாழ்வின் கடைசிக் கணங்கள் — கடைசியான இன்பக் கணங் கள் அவை. அப்புறம் நாங்கள் புல் வெளி யை அடைந்து, நின்றோம். எனக்கு நன்றி கூறினார்கள் அவர்கள் நால்வரும். அடேயப்பா! எவ்வளவு நேரம், எவ்வளவு நிறைய ஏதே தோ சொன்னார்கள்! அவர்கள் பேச்சைக் கேட்டபடியே நான் என் சீமானையே வைத்த கண் வாங்காமல் பார்த்துக் கொண்டிருந்தேன் — அவன் என்னை என்ன செய்யப் போகிறான் என்று. அப்போது அவன் என்னைத் தழுவிக் கொண்டு கனமிடுக்குடன் சொன்னான்... என்ன சொன்னான் என்பது இப்போது நினைவில்லை, ஆனால் அவன் கூறியதன் அர்த்தம் என்ன வென்றால், தன்னை விடுவித்ததற்கு நன்றி பா ராட்டும் பொருட்டு என் மேல் அன்பாயிருப்பான்

என்பதே. என் எதிரே முழந்தாளிட்டு, புன்னகை செய்து, 'என் ராணி!' என்றான். புளுகுணி நாய்!.. எனக்கு வந்த ஆத்திரத்தில் விட்டேன் ஓர் உதை! மூஞ்சியில் அறைந்துமிருப்பேன், ஆனால் அதற்குள் அவன் தள்ளாடித் துள்ளி எழுந்து விட்டான். முகமெல்லாம் வெளிற, குரூரமாய் விழித்துக் கொண்டு என் எதிரே நின்றான்... மற்ற மூன்று பேரும் முகத்தைச் சுளித்தபடி நின்றார்கள். ஒருவரும் பேசவில்லை. நான் அவர்களைப் பார்த்தேன்... எனக்கு உண்டானதெல்லாம், இப்போதும் நினைவிருக்கிறது, ஒரே சலிப்பும் சோம்பலுந்தான்... 'போங்கள்!' என்றேன். 'நீ திரும்பிப் போய் நாங்கள் சென்ற வழியைக் காட்டிக் கொடுப்பாயோ?' என்று கேட்டார்கள் அந்த நாய்கள். எம்மாதிரி இழி பிறவிகள் பார்த்தாயா? இருந்தாலும் அவர்கள் போய்த் தொலைந்தார்கள். நானும் என் வழியே நடந்தேன்... அடுத்த நாள் உங்களவர்கள் என்னைப் பிடித்துக் கொண்டு போனார்கள், ஆனால் சீக்கிரம் விட்டு விட்டார்கள். அப்போது தான் உணர்ந்தேன், நாமும் ஒரு கூடு கட்டிக்கொள்ள வேளை வந்துவிட்டது, குயில் வாழ்க்கை வாழ்ந்ததெல்லாம் போதும் என்று! உடல் கனத்து விட்டது, சிறகுகள் வலுக் குறைந்து விட்டன, இறகுகளில் பளபளப்பு இல்லை... வேளை வந்துவிட்டது, வந்துவிட்டது! ஆகவே கலீத்ஸியா போய் அங்கிருந்து தப்ரூஜா வந்து சேர்ந்தேன். அது முதல், இந்த முப்பது ஆண்டாக இங்கேதான் வாழ்ந்து வருகிறேன். எனக்குப் புருஷன் இருந்தான்—மல்தாவியாக்காரன். ஓராண்டுக்கு

முன்பு இறந்து போனான். நான் இப்படி வாழ்ந்து வருகிறேன்! தனிக்கட்டையாக... இல்லை, தனிக்கட்டையாக அல்ல, அதோ, அவர்களோடு.''

இவ்வாறு சொல்லிக் கடற்புறம் கையை வீசி யாட்டினாள் கிழவி. கடற்கரையில் அமைதி குடி கொண்டிருந்தது. இடையிடையே சுருக்கமான, ஏமாற்று நிறைந்த ஒலி பிறக்கும், உடனே மடிந்து விடும்.

''அவர்களுக்கு என் மேலே பிரியம். விதம் விதமாக எத்தனையோ கதைகள் சொல்லு வேன். அவர்களுக்கு இவை வேண்டும். இன் னும் சிறிசுகள் தானே... இவர்களோடு இருப் பதில் எனக்கும் மகிழ்ச்சி. இவர்களைப் பார்க் கும் போதெல்லாம் நினைத்துக்கொள்கிறேன்: 'நானுந்தான் ஒரு காலத்தில் இவர்களைப் போல் இருந்தேன்... ஆனால் அப்போது, என் காலத்தில், மக்களிடம் வலிவும் ஊக்கமும் மிகு தியாக இருந்தன. அதனால்தான் வாழ்க்கை அதிக இன்பமாகவும் இப்போதைவிட மேலான தாகவும் இருந்தது... ஆமாம்!' என்று.''

இவ்வாறு கூறி விட்டு அவள் பேசாதிருந் தாள். அவள் அருகே உட்கார்ந்திருந்த எனக்கு ஏக்கமாயிருந்தது. அவள் தலையை ஆட்டியபடி தூங்கி வழிந்தவாறு ஏதோ முணுமுணுத் தாள்... ஒருவேளை பிரார்த்தனை செய்தாள் போலும்.

கடலிலிருந்து எழுந்தது முகில்—கறுத்துத் திரண்டு, மலைத் தொடரின் சிகரங்கள் போலக் கூர்த்த விளிம்புகள் கொண்டது. ஸ்தெப்பி

வெளி மீது பரந்தது அது. அதன் உச்சியிலிருந்து மேகத் துணுக்குகள் பிரிந்து முன்னே பாய்ந்து சென்று, நட்சத்திரங்களை ஒன்றன்பின் ஒன் றாக அணைத்து விட்டன. கடல் இரைந்தது. நாங்கள் இருந்த இடத்துக்குச் சற்று தூரத்தில், முந்திரிப் பந்தர்களில் முத்தமிடுவதும் கிசுகிசுப்ப தும் பெருமூச்சு விடுவதும் கேட்டன. தொலை வில் ஸ்தெப்பி வெளியில் நாய் ஊளையிட்டது... காற்றில் கமழ்ந்த விந்தையான நெடி நரம்பு களுக்கு எரிச்சலூட்டி, நாசித்துவாரங்களில் அரிப்பு உண்டாக்கியது. வானில் மிதந்து சென்று மேகங்களின் அடர்ந்த நிழல் கூட்டங்கள் தரை யில் படிந்து ஊர்ந்தன, மறைந்தன, பின்னும் வெளிப்பட்டன... சந்திரனுக்குப் பதில் மங் கிய கோமேதகக் கறை மட்டுமே தென்பட்டது. அதையும் அவ்வப்போது மறைத்தது சாம்பல் நிற மேகக் கூட்டம்... ஸ்தெப்பியின் தொலை வெளி தனக்குள் எதையோ ஒளிப்பது போலக் கறேலென்று அச்சந்தரும் தோற்றமளித்தது. சின்னஞ்சிறு நீலத் தழல்கள் அதில் பளிச்சிட் டன. ஒருசமயம் ஓரிடத்திலும் மற்றொரு சமயம் வேறு இடத்திலும் அந்த ஒளிகள் கணப் போது தோன்றித் தோன்றி மறைந்தன. ஸ்தெப்பியில் ஒருவருக்கொருவர் தூரந் தூரமாகச் சிதறி யிருந்த சில மனிதர்கள் அதில் எதையோ தேடு வதற்காக நெருப்புக்குச்சிகளைக் கிழிப்பது போ லவும் காற்று அவற்றை உடனுக்குடன் அணைத்துவிடுவது போலவும் இருந்தது. அவை மிக விந்தையான நீலத் தீ நாக்குகள், மர்மத் தோற்றம் கொண்டவை.

‘‘நெருப்புப் பொறிகள் தெரிகின்றனவா?’’ என்று இஸெர்கீல் என்னைக் கேட்டாள்.

‘‘அதோ தெரிகின்றனவே, நீலமாக, அவையா?’’ என ஸ்தெப்பியை சுட்டியவாறு கேட்டேன்.

‘‘நீலமாகவா? ஆமாம். அவைதாம்... அப்படியானால் இன்னும் பறக்கின்றனவா? ஊம், ஊம்... எனக்கு அவை இப்போதெல்லாம் கண்ணில் படுவதில்லை. எத்தனையோ விஷயங்களை இப்பொழுது என்னால் பார்க்க முடிவதில்லை.’’

‘‘இந்தப் பொறிகள் எங்கிருந்து வருகின்றன?’’ என்று கிழவியிடம் வினவினேன்.

இந்தப் பொறிகள் தோன்றியதைப்பற்றி முன்பே ஏதோ கேள்விப்பட்டிருந்தேன். ஆயினும் இஸெர்கீல் கிழவி அவை சம்பந்தமாக என்ன சொல்கிறாள் என்று கேட்க விரும்பினேன்.

அவள் சொல்லலானாள்:

‘‘இந்தப் பொறிகள் தான்கோவின் எரியும் இதயத்திலிருந்து கிளம்புகின்றன. முன் ஒரு காலத்தில் ஓர் இதயம் இருந்தது. ஒரு சமயம் அது குப்பென்று மூண்டு எரிந்தது... அதிலிருந்து கிளம்பியவையே இந்தப் பொறிகள்... அந்தக் கதையை உனக்குச் சொல்லுகிறேன்... இதுவும் பழைய கதைதான்... பழையது, எல்லாம் பழையவை! பழங்காலத்தில் எத்தனை விஷயங்கள் நிகழ்ந்தன பார்!.. இப்போதெல்லாம் அந்த மாதிரி ஒன்றுமே—செயல்களோ, மனிதர்களோ, கதைகளோ எதுவுமே—கிடையாது... ஏன்?.. சொல்லேன் கேட்போம்! சொல்ல முடி

யாது உன்னால்... என்ன தெரியும் உனக்கு? வாலிபர்களான நீங்கள் எல்லாருமே என்னத் தைக் கண்டீர்கள்? ஹெஹ் ஹெஹ்ஹே!.. பழங்காலத்தைக் கூர்ந்து கவனிப்பீர்கள் என்றால், எல்லாப் புதிர்களுக்கும் விடை கிடைத்து விடும்... நீங்கள் கவனிப்பதில்லை, அதனால்தான் வாழத் தெரியாதவர்களாயிருக் கிறீர்கள்... நான் வாழ்க்கையைப் பார்க்கவில் லையா என்ன? பார்வை மந்தமாகி விட்ட போதிலும் நான் எல்லாவற்றையுந்தான் கவ னிக்கிறேன்! மக்கள் வாழவில்லை, பிழைப்புக் காகப் பாடுபடுகிறார்கள், இந்தப் பாட்டிற் கே வாழ்வை அர்ப்பணித்து விடுகிறார்கள். தங்கள் நலங்களை எல்லாம் தாங்களே சூறை யாடி, தங்கள் பொழுதை எல்லாம் வீண டித்த பிறகு விதியை நொந்து கொள்ளத் தொ டங்குகிறார்கள். விதியாவது விதி! இதற்கும் அதற்கும் என்ன சம்பந்தம்? ஒவ்வொருவனும் தனக்குத்தானே விதி! இந்தக் காலத்திலே நான் எத்தனையோ வகையானவர்களைப் பார்க்கிறேன், வலிமை உள்ளவர்களைத் தான் காண முடிவதில்லை. எங்கே அவர்கள்?.. அழகர்களும் வரவரக் குறைந்து கொண்டு போ கிறார்கள்.''

வலிமையும் அழகும் உள்ள ஆண்களும் பெண்களும் எங்கே மறைந்து விட்டார்கள் என் பதைப் பற்றி எண்ணமிடலானாள் கிழவி. சிந்த னையில் ஆழ்ந்தவாறே இருண்ட ஸ்தெப்பி வெளியில் கண்ணோட்டினாள், அதிலே விடை யைத் தேடுபவள் போல.

நான் அவளுடைய கதையை எதிர்பார்த்த வண்ணம் மௌனமாயிருந்தேன். ஏதாவது கேட்டால் எங்கே மறுபடியும் வேறு விஷயத் துக்குத் தாவி விடுவாளோ என்று எனக்குப் பயம்.

கடைசியில் ஒரு விதமாக அவள் கதையைத் தொடங்கினாள்.

## 3

''முன் ஒரு காலத்தில் ஓர் இனத்தவர் வாழ்ந்து வந்தார்கள். அவர்களுடைய குடியிருப்புக்கு மூன்று புறத்திலும் கடக்க முடியாத அடர்ந்த காடு சூழ்ந்திருந்தது. நாலாவது திக்கில் ஸ்தெப்பி வெளி இருந்தது. அவர்கள் களிப்பும் குதூகலமுமானவர்கள், பலசாலிகள், துணிவுள் ளவர்கள். ஒரு நாள் அவர்களுக்குக் கெட்ட காலம் வந்து விட்டது. பகை இனத்தவர் எங் கிருந்தோ வந்து அவர்களைக் காட்டுக்குள் வெகு தூரம் விரட்டி விட்டார்கள். அங்கு ஒரே இருட்டும் சதுப்பு நிலமுமாக இருந்தது, ஏனென்றால் மரங்கள் நெடுங்காலத்தவை, அவற்றின் கிளைகள் நெருக்கமாகப் பின்னிப் பிணைந்திருந்தபடியால் வானம் புலப்படாத வாறு மறைத்தன. அவற்றின் அடர்ந்து தழைத்த இலைகளைக் கடந்து சூரியக் கதிர்கள் தரை யில் பட முடியவில்லை. எப்போதாவது வெயில் தரையில் பட்டாலும் சதுப்பு நிலத்திலிருந்து கொடிய நாற்றம் கிளம்பியது. மக்கள் அத னால் மடிந்தார்கள். அப்போது இனத்துப்

பெண்டிரும் குழந்தைகளும் அழுது புலம்பி னார்கள், ஆண்கள் சிந்தனையில் ஆழ்ந்து துயரமடைந்தார்கள். காட்டை விட்டு வெளியேற வேண்டியது அவசியமாயிருந்தது. அதற்கு இரண்டு வழிகள்தான் இருந்தன: ஒன்று திரும் பிப் போகலாம், ஆனால் அங்கே வலிமை மிக்க கொடிய பகைவர்கள் இருந்தார்கள்; இரண்டாவது, முன்னே போகலாம், ஆனால் அங்கே ராட்சத மரங்கள் விசாலமான கிளை களால் ஒன்றையொன்று தழுவிப் பிணைந்த வாறு சதுப்பு நிலத்தில் முடிச்சு வேர்களை ஆழ ஊன்றி உறுதியாய் நின்றன. இந்தக் கல் போன்ற மரங்கள் பகல்போதின் மங்கிய கருக் கலில் மௌனமாக அசையாமல் நின்றன. இரவு நேரத்தில் மக்கள் நெருப்பு மூட்டியது மோ, அவை இன்னும் நெருக்கமாக அவர் களைச் சூழ்ந்து குமைந்தன. இரவும் பகலும் எப்போதும், இந்த மக்களைச் சுற்றியிருந்தது காரிருள் வளையம், அவர்களை நசுக்க முயல் வது போல. அவர்களோ, விசாலமான ஸ்தெப்பி வெளியில் வாழ்ந்து பழகியவர்கள். மரங்க ளின் உச்சி மீது காற்று வீசும் போதோ, இன் னும் பயங்கரமாக இருக்கும். அப்போது காடு முழுவதும் அவர்களது மரண கீதம் போன்ற இம்மெனும் ஒலியால் நிறைந்துவிடும். இந்த மக்கள் வலியவர்கள். தங்களைத் தோற்கடித் தவர்களுக்கு எதிராகப் போரிட இவர்க ளால் முடியும். ஆனால் அவர்கள் சண்டையில் உயிர் துறப்பதற்குத் துணியவில்லை. ஏனெ னில் வழிவழி வந்த மரபுகளை அவர்கள் பாது

காக்க வேண்டியிருந்தது. அவர்கள் கொல்லப் பட்டால் அவர்களது மரபுகளும் மாய்ந்து விடும். ஆகவே, அவர்கள் காட்டின் இரைச்சலுக்கும் சதுப்பு நிலத்தின் நாற்றத்துக்கும் நடுவே உட் கார்ந்து நீண்ட இரவு முழுவதும் கவலை நிறைந்த எண்ணங்களில் ஆழ்ந்திருந்தார்கள். அவர்கள் உட்கார்ந்திருக்கையில் கணப்பு நெ ருப்பினால் ஏற்பட்ட நிழல்கள் அவர்களைச் சுற்றிலும் ஓசையின்றித் தத்திக் குதிக்கும். அவ்வாறு குதித்தாடுபவை நிழல்கள் அல்ல, காட்டையும் சதுப்பு நிலத்தையும் சேர்ந்த தீய ஆவிகள் தங்கள் வெற்றியைக் கொண்டாடுகின் றன என்று தோன்றும்... ஆக, இந்த மக்கள் உட்கார்ந்து சிந்தித்தார்கள். ஆனால் துன்ப எண்ணங்கள் மனிதர்களின் உடல்களையும் உள்ளங்களையும் நலிவிப்பது போல, உழைப் போ, பெண்களோ, வேறு எதுவுமோ நலி விக்க முடியாது. ஓயாச் சிந்தனையால் நலிந்து போனார்கள் இம்மக்கள்... அவர்களிடையே அச்சம் பிறந்தது, அவர்களது திண்ணிய கரங் களைப் பிணைத்தது. நாற்றத்தினால் இறந் தவர்களுடைய உடல்களின் அருகிலும், பிழைத்திருந்தவர்களின் தலைவிதியை எண் ணியும் அழுது அரற்றிய மாதர் பயங்கரத்தை விளைத்தார்கள். கோழைத்தனம் நிறைந்த சொற்கள், ஆரம்பத்தில் மெதுவாகவும் பயத்து டனும், பின்பு வர வர மேலும் உரக்கவும் காட்டிலே கேட்கலாயின... பகைவர்களிடம் சென்று தங்கள் விடுதலையை அவர்களுக்கு வழங்கிவிட மக்கள் ஆயத்தமாகி விட்டார்கள்.

இறப்பை எண்ணி எல்லாருமே திகில் கொண்ட னர். அடிமை வாழ்வைப் பற்றியோ, ஒருவரா வது அஞ்சவில்லை... அந்தச் சமயத்திலே தான் கோ முன்வந்து தன்னந் தனியே அவர்கள் அனைவரையும் காப்பாற்றினான்.''

தான்கோவின் எரியும் இதயம் பற்றிய கதை யைக் கிழவி அடிக்கடி சொல்லியிருப்பாள் என் பது தெளிவாகப் புலப்பட்டது. ஏனென்றால் அவள் வழக்கமான ராகம்போடும் பாணியில் கதை சொல்லிக்கொண்டு போனாள். சதுப்பு நிலத்தின் நச்சு நெடியால் மடிந்துவந்த துர்ப் பாக்கியசாலிகளான விரட்டப்பட்ட மக்கள் அகப் பட்டுக் கொண்டிருந்த காட்டின் ஓசையை அவ ளது கரகரப்பான புகைச்சல் குரல் என் கற் பனையில் ஒலிக்கச் செய்தது...

''இளமையும் அழகும் உள்ளவன் தான் கோ. அழகர்கள் எப்போதுமே துணிவு மிகுந் தவர்கள். ஆக, தான்கோ அவர்களிடம், தன் தோழர்களிடம், சொன்னான்:

'''சிந்தனையால் மட்டும் பாறையை வழி யிலிருந்து அப்புறப்படுத்த முடியாது. ஒன்றும் செய்யாதவர்கள் ஒன்றையும் சாதிக்க இயலாது. சிந்தனையிலும் கவலைப்படுவதிலும் எதற்காக நாம் சக்தியை வீணாக்குகிறோம்? எழுங்கள்! காட்டினுள் வழி செய்து கொண்டு முன்னேறு வோம். காட்டிற்கு முடிவு இருக்கத்தானே வேண்டும்! உலகில் எதற்கும் முடிவு உண்டல்ல வா? போவோம்! ஊம், கிளம்புங்கள்!'

''அவர்கள் அவனை நிமிர்ந்து பார்த்தார் கள். பெரு வலிவும் உயிர்த் தழலும் அவன்

விழிகளில் சுடர்வதைக் கண்டு அவன் தங்கள் யாவரிலும் சிறந்தவன் என்று தெரிந்து கொண்டார்கள்.

"'எங்களை நடத்திச் செல்!' என்றார்கள்.

"அவன் அவர்களை நடத்திச் சென்றான்..."

கிழவி பேசுவதை நிறுத்திவிட்டு ஸ்தெப்பி வெளியை நோக்கினாள். அங்கே இருள் வரவர அடர்ந்து கொண்டு போயிற்று. வெகு தொலைவில் தான்கோவின் எரியும் இதயத்திலிருந்து கிளம்பிய பொறிகள் கணப் போது மலர்ந்து உதிரும் நீலப் பூக்கள் போன்று விட்டு ஒளிர்ந்தன.

"தான்கோ அவர்களை நடத்திச் சென்றான். எல்லாரும் ஒன்றாக அவனைப் பின்தொடர்ந்தார்கள், அவனை நம்பினார்கள். கஷ்டமாயிருந்தது வழி! ஒரே இருட்டு. ஒவ்வோர் அடியிலும் சதுப்பு நிலம் தனது பேராசை பிடித்த சேற்று வாயைத் திறந்து மக்களை விழுங்கியது. மரங்கள் திண்ணிய சுவர் போன்று அவர்களது வழியைத் தடுத்தன. அவற்றின் கிளைகள் ஒன்றோடொன்று பின்னிப் பிணைந்து இருந்தன, வேர்கள் எல்லாப் பக்கங்களிலும் பாம்புகள்போல நீண்டு சென்றிருந்தன. ஒவ்வோர் அடி முன்னேறுவதற்கும் இந்த மக்கள் குருதியும் வியர்வையும் பெருமளவு செலுத்த வேண்டியிருந்தது. நெடு நேரம் நடந்தார்கள்... காடு மேன்மேலும் அடர்த்தியாயிற்று, அவர்களது வலிமையோ குறைந்து கொண்டு போயிற்று! அவர்கள் தான்கோவைக் குறைகூறலானார்

கள் — அவன் இளைஞன், அநுபவமற்றவன், எங்கேயோ இட்டுச் செல்கிறான் என்று. அவ னோ, ஊக்கமும் உள்ளத் தெளிவும் துலங்க முன்னே நடந்தான்.

‘‘ஒரு நாள் காட்டுக்கு மேலே புயல் வீசியது. மரங்கள் கசமுசவென்று பயங்கரமாகச் சிலு சிலுத்தன. காடு எங்கும் செறிந்து மண்டியது காரிருள். உலகு தோன்றிய நாள் முதல் உண் டான இரவுகள் எல்லாம் ஒன்று திரண்டு அங்கே குழுமிவிட்டன போலிருந்தது. இராட்சத மரங் களுக்கு இடையே, இடியின் கொடு முழக் கத்துக்கு நடுவே நடந்தார்கள் சிறு மனிதர்கள். அவர்கள் நடக்கையில் அரக்க மரங்கள் சீற்றத் துடன் கடகடத்தன, சீழ்க்கை அடித்தன; மரங் களின் உச்சிகள் மீது வெட்டி வெட்டியடித்த மின்னல்கள், வறண்ட நீல ஒளியால் காட்டைப் பளிச்சிடச் செய்வதும், அதே விரைவுடன் மறைந்து விடுவதுமாக மக்களை வெருட்டின. வறண்ட மின் வெட்டுக்களால் ஒளிபெற்ற மரங் கள் உயிருள்ளவை போன்றும், தங்களது இருட் சிறையிலிருந்து மக்கள் தப்பி விடாதபடித் தடுக்க, அவர்களை வழி மறிக்க, தங்கள் கரடு தட்டிய நீண்ட கரங்களை விரித்து, அவர்களைச் சுற்றிலும் வலைப்பின்னல் போலக் கோத்துப் பிணைத்துக் கொண்டிருப்பவை போன்றும் காட்சியளித்தன. கிளைகளின் இருளிலிருந்து அச்சந்தருவதும் கருண்டதும் வறண்டதுமான ஏதோ ஒன்று அவர்களை உறுத்து நோக்கி யது. கடினமான வழி. அதில் நடந்து களைத் துத் தளர்ந்த மக்கள் உளம் சோர்ந்தார்கள். தங்

கள் பலவீனத்தை ஒப்புக்கொள்ள அவர்களுக்கு வெட்கமாய் இருந்த படியால் தங்களுக்கு முன்னே நடந்த தான்கோ மேல் தங்கள் ஆத்திரத்தையும் சீற்றத்தையும் பொழியலானார்கள். அவன் தங்களை நடத்திச் செல்லத் திறமை அற்றவன் என்று குறை கூறினார்கள். எப்படியிருக்கிறது சேதி? ஊம்?

''நடப்பதை நிறுத்தி விட்டு, காட்டின் அவல இரைச்சலுக்கிடையே, நடுங்கும் இருளின் நடுவே, அலுப்பும் சினமும் மேலெழ நின்று, தான்கோவை நிந்திக்கலானார்கள்.

'''நீ எங்களுக்கு அழிவும் கேடும் விளைப்பவன்! எங்களை நடத்தி வந்து சோர்வடையச் செய்து விட்டாய். இதற்குத் தண்டனையாக உன் உயிரை வாங்கப் போகிறோம்!' என்றார்கள்.

''தான்கோ அவர்களை நேரிட நோக்கி, 'நடத்திச் செல்! என்று சொன்னீர்கள், நான் நடத்தி வந்தேன்! நடத்திச் செல்ல எனக்குத் துணிவு இருந்தது, அதனால்தான் நடத்தி வந்தேன்! நீங்களோ? உங்கள் தரப்பில் நீங்கள் என்ன செய்தீர்கள்? நீங்கள் வெறுமே நடந்தீர்களே தவிர, நீண்ட வழிநடைக்கு வேண்டிய பலத்தைத் திரட்டிக்கொள்ளவில்லை! நடக்க மாத்திரமே செய்தீர்கள், அதுவும் ஆட்டு மந்தை போல!' என்று கர்ஜித்தான்.

''ஆனால் அவனது சொற்கள் அவர்களது ஆத்திரத்தை இன்னும் தூண்டி விட்டன.

'''உன்னைக் கொல்வோம்! கொன்று விடுவோம்!' என்று ஆர்ப்பரித்தார்கள்.

''காடு சீழ்க்கையும் சீறலுமாக அவர்களது

கூச்சலை எதிரொலித்தது. மின்னல்கள் இரு ளைத் தார் தாராகக் கிழித்தன. எவர்களுக்காக உழைத்தானோ அவர்களை நோட்டமிட்ட தான் கோ, அவர்கள் காட்டு விலங்குகள் போல் தோற்றமளிப்பதைக் கண்ணுற்றான். அவனைச் சூழ்ந்து மொய்த்தார்கள் அவர்கள். ஒருவர் முகத்திலாவது அருள் இல்லை. அவர்களிடம் இரக்கத்தை எதிர்பார்க்கவே முடியாது என் பதைக் கண்டான் தான்கோ. அப்போது அவன் உள்ளத்தில் மண்டி எழுந்தது சீற்றம். இருந் தாலும் இந்த மனிதர்கள் மேல் உண்டான இரக்கத்தால் அதை அடக்கிக் கொண்டான். இந்த மக்களை அவன் நேசித்தான். தான் இல்லாவிட்டால் அவர்கள் மடிந்து ஒழிவார்கள் என்று எண்ணினான். ஆகவே, அவர்களைக் காப்பாற்றும் விருப்பம், அவர்களைச் சுலப மான வழியில் நடத்திச் செல்லும் ஆசை அவன் நெஞ்சில் தழலாய் மூண்டெரிந்தது. இந்த வன் தழலின் ஒளி அவன் விழிகளில் சுடர்ந்தது... இதைக் கண்ட அவர்கள், அவன் ஆத்திரம் அடைந்திருப்பதாகவும் அதனால்தான் அவன் கண்கள் அவ்வளவு பிரகாசமாக அனல் வீசு வதாகவும் எண்ணி, அவன் தங்களைத் தாக்கு வான் என்று எதிர்பார்த்து ஓநாய்கள் போல எச்சரிக்கையுடன், கூட்டமாக அவனைச் சூழ்ந்து நெருங்கினார்கள் — அப்போதுதான் அவனைப் பிடித்துக் கொல்வது எளிதாயிருக்கும் என்ற எண்ணத்தில். தான்கோ அவர்களுடைய நினைப் பைப் புரிந்து கொண்டான். அந்த நினைப்பு அவனுக்கு வருத்தம் ஊட்டியது. அதனால்

அவன் இதயம் முன்னிலும் அதிக ஒளியுடன் மூண்டெரிந்தது.

"காடு சோக கீதத்தைத் தொடர்ந்து இசைத்தது. இடி முழங்கி அதிர்ந்தது, மழை கொட்டியது...

"'இந்த மக்களுக்காக நான் என்ன செய்வது?' என்று இடி முழக்கத்தை விஞ்சும் குரலில் கர்ஜித்தான் தான்கோ.

"திடீரென்று அவன் கைகளால் தனது நெஞ்சைக் கிழித்து, அதற்குள்ளிருந்து இதயத்தைப் பிய்த்து எடுத்துத் தலைக்கு மேலே உயர்த்தினான்.

"அது சூரியன் போல, அதையும் விட அதிகமாக, ஒளி வீசிற்று. மாந்தர்கள் மீது உண்டான பேரன்பு என்னும் இந்தத் தீப்பந்தத்தால் பிரகாசமடைந்த காடு அனைத்தும் நிசப்தமாகி விட்டது. ஒளியைக் கண்டு ஓட்டமெடுத்த இருள், காட்டினுள் நெடுந் தொலைவில் நடு நடுங்கி, சதுப்பு நிலத்தின் நாற்றக் குழம்பலில் விழுந்தது. வியப்பினால் கல்லாய்ச் சமைந்து விட்டார்கள் மக்கள்.

"தான்கோ, 'போகலாம் வாருங்கள்!' என்று கூறி, தனது எரியும் இதயத்தைத் தூக்கிப் பிடித்தவாறு, வழியில் வெளிச்சம் காட்டிக் கொண்டு முன்னே பாய்ந்து சென்றான்.

"மந்திரத்தால் கட்டுண்டவர்கள் போல அவர்கள் அவன் பின்னே நடந்தார்கள். அப்போது காடு முன்போலவே ஆரவாரம் செய்தது. மரங்களின் உச்சிகள் வியப்புடன் அசைந்தாடின. ஆனால் ஓடும் மக்களின் அடியோசை, கானகத்

தின் அரவத்தை அடக்கிவிட்டது. எரியும் இதயத்தின் அற்புதக் காட்சியால் கவரப்பட்டு அனைவரும் விரைவாகவும் துணிவுடனும் ஓடினார்கள். இப்போதும் பலர் மடிந்தார்கள், ஆனால் முணுமுணுப்போ கண்ணீரோ இன்றி மடிந்தார்கள். தான்கோ இடைவிடாது முன்னே சென்ற வண்ணமாயிருந்தான். அவன் இதயம் எரிந்த வண்ணமாயிருந்தது!

''திடீரென்று கானகம் அவர்களுக்கு முன்னே விலகி வழி விட்டது. வழிவிட்டு விட்டு, அடர்வும் மௌனமுமாகப் பின் தங்கி விட்டது. தான்கோவும் மற்றவர்களும் வெளியொளியும் மழையால் கழுவப்பட்ட தூய காற்றும் நிறைந்த இன்பக் கடலில் திடீரென மூழ்கித் திளைத்தார்கள். அவர்களுக்குப் பின்னே காட்டுக்கு மேலே புயல் வீசியது. ஆனால் இங்கேயோ பளிச்சென்று வெயில் அடித்தது. ஸ்தெப்பி வெளி உயிர்த்தது, புற்கள் மேல் மழைத்துளிகள் வைரமாய் மின்னின. ஆறு தங்கப் பாளம் போல மின்னியது... மாலை ஆகி விட்டது. மறையும் ஞாயிற்றின் கதிர்களைப் பிரதிபலித்த ஆறு, தான்கோவின் பிளந்த மார்பிலிருந்து கொதிக்கும் அருவியாய்ப் பொழிந்த குருதி போன்று செக்கச் செவேலெனக் காட்சியளித்தது.

''தனக்கு முன்னே பரந்து கிடந்த ஸ்தெப்பி வெளி மீது கண்ணோட்டினான் கர்வமும் துணிவும் திகழும் தான்கோ. சுதந்திர பூமியை மகிழ்வுடன் நோக்கி, கர்வம் பொங்க வாய்விட்டுச் சிரித்தான். பின்பு தரையில் விழுந்து இறந்து போனான்.

“உவகை மீதூர, நம்பிக்கை ஊற்றெடுக்க நின்ற மக்கள் அவன் இறந்ததைக் கவனிக்க வில்லை, தான்கோவின் உடலின் அருகே அவனு டைய துணிவு மிக்க இதயம் இன்னும் எரிந்து கொண்டிருப்பதையும் பார்க்கவில்லை. எச்சரிப் புள்ள ஒருவன் மட்டுமே இதைக் கவனித்தான். எதனாலோ அரண்டுபோய் அவன் கர்வம் ததும்பும் அவ்விதயத்தை மிதித்தான்... அது படபடவெனப் பொறிகளைச் சிதறிவிட்டு அணைந்து போயிற்று...

“புயலுக்கு முன்னால் ஸ்தெப்பி வெளியில் காணப்படுகின்றனவே, நீலப் பொறிகள், அவை அதிலிருந்துதான் கிளம்புகின்றன!”

இப்போது, கிழவி தனது அழகிய கதையைச் சொல்லி முடித்ததும், மக்களின் பொருட்டுத் தனது இதயத்தை எரித்து விட்டு, அவர்களிடம் கைம்மாறு எதுவும் கோராமல் உயிர் வழங்கிய வீரன் தான்கோவின் மனோதிடத்தினால் ஸ்தெப்பி வெளியும் வியப்படைந்து விட்டது போல பெரு மௌனத்தில் ஆழ்ந்தது. கிழவி தூங்கி வழிந்தாள். “இவளது மனத்தில் இன் னும் எத்தனை கதைகளும் நினைவுகளும் எஞ்சியிருக்கும்?” என்று அவளை நோக்கிய வாறு நான் எண்ணமிட்டேன். தான்கோவின் மாண்புமிக்க எரியும் இதயத்தைப் பற்றியும், எழிலும் விருவிருப்பும் கொண்ட இத்தகைய கதைகளைப் படைத்த மனிதனது கற்பனை யைப் பற்றியும் சிந்தித்தேன்.

இஸெர்கீல் அயர்ந்து உறங்கி விட்டாள். வீசிய காற்று, அவளது கசங்கிய கிழிசல் உடையை

அகற்றி, சப்பிய மார்பகம் வெளித் தெரிய வைத்தது. நான் அவளுடைய முதிய உடலைப் போர்த்து மூடிவிட்டு, அவளருகே தரையில் படுத்துக்கொண்டேன். ஸ்தெப்பி இருளடர்ந்து நிசப்தமாயிருந்தது. வானத்தில் மேகங்கள் முன்போன்றே மெதுவாக, சலிப்பூட்டும் வகையில் ஊர்ந்த வண்ணமாயிருந்தன... கடல் வெறுமையும் துயரமும் பொங்க, ஓலமிட்டது.

1894

# திருடன்

புழுதியால் சற்று இருண்ட தெற்கத்தி வானம் மங்கி இருந்தது. வெப்பம் வீசிய சூரியன் பசிய கடலை மெல்லிய சாம்பல் நிறத் திரை வழி யாகப் போல நோக்கியது. துடுப்புகள், நீராவிக் கப்பல்களின் உந்து சக்கரங்கள் ஆகியவற் றின் அடிகளும் துருக்கிப் பாய்மரக் கப்பல் களின் அடிகளும் நெரிசலான கப்பல்துறையில் எல்லாத் திசைகளிலும் நீரை உழுதவாறு இயங் கிய மற்றக் கப்பல்களுடைய அடிக்கட்டைகளும் நீரைக் கூறிட்ட வண்ணமாக இருந்தன. சூரி யன் அதில் அநேகமாகப் பிரதிபலிக்கவில்லை. துறையின் கற்சுவர்களால் பிணிக்கப்பட்டிருந்த கடல் அலைகள் தங்கள் முடிகள் மீது வழுக்கிச் சென்ற பெரும் சுமைகளால் நசுக்கப்பட்டுக் கப்பல்களின் பக்கங்களிலும் கரையிலும் மோதி அடித்தன, பலவகைக் கூளங்களால் அழுக் கடைந்து நுரைத்துப் பொங்கி முணுமுணுத்தன.

நங்கூரச் சங்கிலிகளின் கணகணப்பு, சரக்கு ஏற்றி வந்த வண்டித் தொடர்களின் கடகடப்பு, தளவரிசைக் கல்மேல் எங்கிருந்தோ விழுந்த

இரும்புத் தகடுகளின் தடாரோசை, கட்டை களின் மட்டென்ற சத்தம், சவாரி வண்டிகளின் கிலுகிலுப்பு, சில வேலைகளில் காதைத் துளைக் கும்படிக் கூர்மையாகவும் வேறு சில வேளை களில் கம்மிய உறுமலாகவும் ஒலித்த நீராவிக் கப்பல்களின் ஊதல்கள், சுமையாட்களும் மாலு மிகளும் சுங்கச் சாவடிக்காரர்களும் போட்ட கூச் சல்கள்—இந்த எல்லா ஓசைகளும் உழைப்பு நாளின் காது செவிடுபடும் இசையில் கலந்து குழம்பித் தளும்பியவாறு கப்பல் துறைக்கு மேல் வானில் தாழ மிதந்தன. ஒலிகளின் மேலும் புதிய புதிய அலைகள் அவற்றை நோக்கி எழுந்தன. சில வேளைகளில் மந்த மான குமுறல்களாக அவற்றைச் சுற்றி உள்ள வை யாவற்றையும் அதிர வைத்தன. வேறு சமயங்களிலோ, திடீரென முழங்கி, புழுதியும் வெக்கையும் நிறைந்த காற்றைக் கிழித்தன.

கருங்கல், இரும்பு, மரம், கப்பல் துறையின் தளவரிசை, கப்பல்கள், மனிதர்கள் எல்லாரும் பேரொலிகளால் வாணிகத் தேவனை ஆர்வத்து டன் போற்றி பாடினார்கள். ஆனால் இவற்றில் அரிதாகவே கேட்ட மனிதர்களின் குரல்கள் பல வீனமாகவும் நகைக்கத் தக்கவையாகவும் இருந் தன. இந்த இரைச்சலை முதலில் தொடங்கி வைத்த மனிதர்கள் கேலிக்குரியவர்களாகவும் நகைக்கத் தக்கவர்களாகவும் இருந்தார்கள். புழுதி படிந்து, கந்தல் உடுத்தி, முதுகுகளில் ஏற்றிய சரக்குகளின் சுமையால் கூனிய அவர் களுடைய துடியான உருவங்கள் புழுதிப் படலங் களில் இங்குமங்கும் பரபரப்பாக ஓடிய வண்ண

மாக இருந்தன. வெக்கையும் ஒலிகளும் நிறைந்த கடலில் சூழ்ந்திருந்த இரும்பு அரக் கர்களோடும் சரக்குக் குவியல்களோடும் முழங் கிய வண்டிகளோடும் மனிதர்கள் உருவாக்கிய எல்லாவற்றோடும் ஒப்பிடுகையில் அவர்களுடைய உருவங்கள் அற்பமாக இருந்தன. அவர்களு டைய மனிதப் பண்புகளைப் பறித்து விட்டன.

எடை மிக்க அரக்க நீராவிக் கப்பல்கள் புறப் படத் தயாராக நின்றவாறு சங்குகளை ஊதின, சீறின, ஆழ்ந்து பெருமூச்சு விட்டன. அவை செய்த ஒவ்வோர் ஒலியிலும் ஆட்களின் சாம்பல் நிற மான, புழுதி படிந்த உருவங்கள் மீது இகழ்ச்சி ததும்பும் கேலி தொனித்தது. ஆட்களோ, கப்பல்களின் மேல் தட்டுகளில் ஊர்ந்தார்கள், அவற்றின் ஆழமான சரக்கறைகளைத் தங்கள் அடிமை உழைப்பின் உற்பத்திப் பொருள் களால் நிறைத்தார்கள். தங்கள் சொந்த வயிறு களுக்காகச் சில ராத்தல் கோதுமை சம்பா திக்கும் பொருட்டுப் பல்லாயிரம் மணங்கு அதே கோதுமையைத் தங்கள் தோள்களில் சுமந்து வந்து கப்பல்களின் வயிறுகளில் நிறைக்கும் சுமையாட்களின் நீண்ட வரிசைகள் கண்ணீர் வரும் அளவுக்குச் சிரிப்பூட்டுபவையாக இருந் தன. கிழிசல் அணிந்து, வியர்வை பெருக, களைப்பினாலும் இரைச்சலினாலும் வெக்கை யினாலும் சோம்பிப் போயிருந்த ஆட்கள் ஒரு புறம், பிரமாண்டமான உடல்கள் வெயி லில் பளிச்சிட நின்ற விறல் மிக்க எந்திரங் கள்—இதே ஆட்களால் நிறுவப்பட்டு, முடி வாகப் பார்க்கும்போது நீராவியால் அல்ல, தங்க

ளைப் படைத்தவர்களின் தசைகளாலும் குருதி யாலும் இயங்கத் தொடங்கிய எந்திரங்கள் — மறு புறம். இந்த ஒப்பீட்டில் கொடிய நையாண்டிக் காவியம் முழுமையாக அடங்கி இருந்தது.

இரைச்சல் நசுக்கியது. புழுதி மூக்குத் துளை களைக் காந்தச் செய்து கண்களைக் குருடாக்கியது. வெக்கை உடலை வதக்கி வாட்டியது. சூழ இருந் தவை எல்லாம் இறுக்கம் நிறைந்து, பொறுமை இழந்து, மாட்சி மிக்க ஒரு பேரதிர்ச்சியால், வெடிப்பால், தகர்ந்து சிதற ஆயத்தமாய்க் காணப்பட்டன. இந்தவெடிப்புக்குப்பின்அதனால் குளிர்விக்கப்பட்ட காற்றில் தாராளமாகவும் எளி தாகவும் மூச்சு விடலாம், தரைமீது அமைதி ஆட்சி புரியும், எரிச்சல் ஊட்டுவதும் ஏக்கம் நிறைந்த வெறி உண்டாக்குவதும் ஆன புழுதி அடர்ந்த இந்த இரைச்சல் அடங்கி விடும், நகரத்திலும் கடல் மீதும் வானிலும் அமைதியும் தெளிவும் இனிமை யும் நிலவும் என்று தோன்றியது...

கண்டாமணி பன்னிரண்டு முறை ஒரு சீராகக் கணீரென்று அடித்தது. கடைசி வெண்கல ஒலி அடங்கியதும் உழைப்பின் காட்டுத்தனமான இசை தணிவாக ஒலிக்கலாயிற்று. இன்னும் ஒரு நிமிடத்தில் அது அதிருப்தி ததும்பும் தெளிவற்ற முணுமுணுப்பாக மாறியது. இப்போது மனிதர் களின் குரல்களும் கடலின் அலையோசையும் காதில் படத் தொடங்கின. பகலுணவு கொள்ளும் நேரம் வந்துவிட்டது.

# 1

சுமையாட்கள் வேலை செய்வதை நிறுத்தி விட்டு, இரைச்சலிடும் கும்பல்களாகக் கப்பல் துறையில் சிதறி, கடைகளில் விதம் விதமான உணவுப் பண்டங்களை வாங்கிக்கொண்டு, தள வரிசையிலேயே நிழலுள்ள மூலைகளில் சாப் பிட உட்கார்ந்தபோது அங்கே வந்தான் கிரீஷ்கா செல்காஷ். இவன், எல்லாம் பட்டுத் தேறியவன், கப்பல் துறை ஆட்களுக்கு நன்கு தெரிந்தவன், மிடாக் குடியன், சாமர்த்தியமும் துணிவும் உள்ள திருடன். அவன் வெறுங்காலனாக இருந்தான். பழைய, நைந்த வெல்வெட்டுணிச் சராயும் கழுத்துப் பட்டையில் கிழிந்த அழுக்கேறிய சீட்டிச் சட்டையும் அணிந்திருந்தான். அவனுடைய வரண்டு துருத்திப் பழுப்புத் தோல் போர்த்த எலும்புகள் கழுத்துப் பட்டைக் கிழிசல் வழியே தெரிந்தன. அவன் தலையில் தொப்பி இல்லை. நரையோடிய கரு முடி கற்றை கற்றையாகத் தொங்கியது. வேட்டைப் பருந்துத் தோற்றம் கொண்ட கூரிய முகம் கலங்கி இருந்தது. அவன் அப்போதுதான் உறங்கி விழித்திருந்தான் என்பதை அவை காட்டின. அவனது ஒரு பழுப்பு மீசையில் வைக்கோல் துருத்திக் கொண்டிருந்தது. இன்னொரு வைக்கோல் மழித்த இடது கன்னக் கட்டை மயிர்களில் சிக்கிக் கொண்டிருந்தது. அப்போதுதான் கிள்ளிய சிறு லிண்டன் கிளையை அவன் காதில் செருகி இருந்தான். அவனுடைய சதைப்பிடிப்பற்ற நெடிய மேனி சிறிது கூனி

யிருந்தது. கற்கள் மேல் மெதுவாக நடந்த வாறு வளைந்த கழுகு மூக்கை அசைத்துக் கூரிய பார்வையை நாற்புறமும் செலுத்தினான். அவனது உணர்ச்சியற்ற சாம்பல் நிற விழிகள் பளிச்சிட்டன. சுமையாட்களுக்கு இடையே யாரையோ அவன் தேடினான். அடர்ந்து நீண்ட அவனது பழுப்பு நிற மீசை பூனையினுடையவை போன்று அடிக்கடி துடித்தது. முதுகுப் புறம் கிடந்த கைகள் நீண்டு வளைந்து இறுகப் பற்றும் விரல்களைப் பதற்றத்துடன் திருகியவாறு ஒன்றை ஒன்று தேய்த்துக் கொண்டிருந்தன. ஸ்தெப்பிக் கழுகு போன்ற தோற்றம், வேட்டை விலங்குக்கு ஒப்பான மெலிய உடல், இலக்கை நோக்கி முன்னேறும் நடை ஆகியவற்றால் இங்கே, தன்னைப் போன்ற துடியான வெறுங்காலர்கள் நூற்றுக்கணக்கானவர்களுக்கு நடுவே கூட, அவன் கவனத்தை ஈர்த்தான். பார்வைக்குச் சீராகவும் அமைதியாகவும் இருந்தாலும் இந்த நடை தோற்றத்தில் அவனை நிகர்த்திருந்த வேட்டைப் பறவையின் பறப்பு போலவே உள்ளுக்குள் கிளர்ச்சியும் எச்சரிப்பும் கொண்டிருந்தது.

நிலக்கரிக் கூடைகளின் குவியலருகே நிழலில் ஒதுங்கி இருந்த சுமையாட்களின் ஒரு கும்பலுக்கு நேராக அவன் எதிரே நின்றான் ஓர் இளைஞன். அவனது கருஞ் சிவப்புப் புள்ளிகள் நிறைந்த முகத்தில் அசடு வழிந்தது. கழுத்தில் பிறாண்டல்கள் காணப்பட்டன. அவன் சமீபத்தில் அடி வாங்கி இருக்க வேண்டும். அவன் செல்காஷின் அருகாக நடந்தவாறு தணிந்த

குரலில் சொன்னான்:

"கப்பல்காரர்களுடைய இரண்டு சிப்பங் களைக் காணோமாம்... தேடுகிறார்கள்."

செல்காஷ் அவனை அமைதியாக நோட்ட மிட்டு, "அப்புறம்?" என்றான்.

"அப்புறமாவது ஒன்றாவது? தேடுகிறார் களாம், வேறு ஒன்றுமில்லை."

"நான் வேண்டுமென்று கேட்டார்களா என்ன, தேட உதவுவதற்கு?"

இவ்வாறு கூறி, வர்த்தகக் கப்பல்களின் சரக்குக் கிட்டங்கி இருந்த இடத்தை இளநகை யுடன் நோக்கினான் செல்காஷ்.

"போடா சைத்தான் கிட்டே!"

தோழன் திரும்பிப் போனான்.

"ஏய், நில்லு! உனக்கு இப்படி ஒப்பனை செய்தது யார்? மூஞ்சியை என்ன கோலம் பண்ணி இருக்கிறார்கள்!.. மீஷ்காவை இங்கே பார்த்தாயா?"

"ரொம்ப நாளாகப் பார்க்கவில்லை!" என்று கத்திவிட்டுத் தன் தோழர்களிடம் போனான்.

செல்காஷ் மேலே நடந்தான். நன்கு பழக் கம் ஆனவனைப் போல அவனை எல்லாரும் எதிர் கொண்டார்கள். ஆனால் வழக்கமாகக் குதூகலமாகவும் குத்தலாகவும் பேசும் அவ னுக்கு இன்று உற்சாகம் இல்லை போலும். ஆட்களின் கேள்விகளுக்கு அரைகுறையாகவும் வெடுக்கெனவும் பதில் சொன்னான்.

சரக்குச் சிப்பங்களின் அடுக்குக்குப் பின் எங் கோ இருந்து வெளியே வந்தான் சுங்கச் சாவ டிக் காவலாள். அவனுடைய கரும் பச்சை

உடுப்பு புழுதி படிந்திருந்தது. அவன் படையினரின் பாங்கில் விரைப்பாக நடந்தான். சவால் விடுபவன் போன்ற தோரணையில் செல்காஷின் எதிரே வழி மறித்து நின்று, இடது கையால் கட்டாரிப் பிடியைப் பற்றிக்கொண்டு வலது கையால் செல்காஷின் கழுத்துப் பட்டையைப் பிடிக்க முயன்றான்.

"நில்! எங்கே போகிறாய்?"

செல்காஷ் ஓர் அடி பின்வாங்கி, காவலாளை ஏறிட்டுப் பார்த்து வறட்சியாகப் புன்னகைத்தான்.

காவலாளின் நல்லியல்பும் தந்திரமும் வாய்ந்த சிவந்த முகம் பயங்கரத் தோற்றத்தைக் காட்ட முயன்றது. கன்னங்கள் உப்பின, முகம் கருஞ் சிவப்பு நிறத்துடன் உருண்டை ஆயிற்று, புருவங்கள் நெரிந்தன, விழிகள் விரிந்தன. மிகவும் வேடிக்கையாக இருந்தது அந்தத் தோற்றம்.

"கப்பல் துறைக்கு வரத் துணியாதே, விலாவை முரித்து விடுவேன் என்று சொல்லி இருக்கிறேனே உனக்கு! நீ என்ன, மறுபடியுமா?" என்று மிரட்டும் குரலில் கத்தினான் காவலாள்.

"வணக்கம், செம்யோனிச்! நாம் சந்தித்து வெகு காலம் ஆகிவிட்டது," என்று அமைதியாக முகமன் கூறி அவனிடம் கையைக் குலுக்குவதற்காக நீட்டினான் செல்காஷ்.

"ஆயுள் பூராவும் உன்னைச் சந்திக்காமலே இருந்தால் நல்லது! போ, போ!.."

ஆனாலும் செம்யோனிச் நீட்டிய கையைப் பற்றிக் குலுக்கினான்.

செம்யோனிச்சின் கையைத் தன் வலிய விரல்களின் பிடியிலிருந்து விடாமல் நெருங்கிய நண்பனுக்குரிய சுதந்திரத்துடன் குலுக்கியவாறு பேச்சைத் தொடர்ந்தான் செல்காஷ்:

''ஒன்று சொல்லு. நீ மீஷ்காவைப் பார்க்கவில்லையா?''

''இன்னும் யார் அவன் மீஷ்கா? எந்த மீஷ்காவையும் எனக்குத் தெரியாது! போய்விடு, தம்பி, அப்பாலே! இல்லாவிட்டால் கிட்டங்கிக் காரன் பார்த்து விடுவான். அவன் உன்னை...''

''நான் சொல்லுகிறது செம்பட்டைத் தலையனை. போன தடவை நான் 'கஸ்திரமாவில்' ஒருவனோடு வேலை செய்தேனே, அவனை,'' என்று தன் பேச்சை விடாது தொடர்ந்தான் செல்காஷ்.

'''நான் ஒருவனோடு சேர்ந்து திருடுகிறேனே,' என்று சொல்லு! மருத்துவமனைக்குக் கொண்டு போயிருக்கிறார்கள் அவனை, உன் மீஷ்காவை. இரும்புத் தடி காலை நசுக்கி விட்டதாம். மரியாதையாகப் போய்விடு, தம்பி, போய்விடு, இல்லாவிட்டால் பிடரியைப் பிடித்துத் தள்ளுவேன்!..''

''ஆகா, ஆளைப் பார்! 'மீஷ்காவை எனக்குத் தெரியாது' என்கிறாய், தெரிந்து தானே வைத்திருக்கிறாய்! எதற்காக இப்படி எரிந்து விழுகிறாய், செம்யோனிச்?..''

''இதோ பாரு, இந்தப் பம்மாத்து எல்லாம் என் கிட்டே வைத்துக் கொள்ளாதே, போய் விடு!..''

காவலாள் எரிச்சல் படத் தொடங்கி, இரு

புறமும் பார்த்து விட்டுத் தன் கையைச் செல்காஷின் உறுதியான கையிலிருந்து விடுவித்துக் கொள்ள முயன்றான். செல்காஷ் தன் அடர்ந்த புருவங்களின் அடி வழியே அவனை அமைதியாகப் பார்த்து, அவனது கையை விடாமல் தொடர்ந்து பேசிக்கொண்டு போனான்:

“நீ என்னை அவசரப்படுத்தாதே. வேண்டிய அளவு உன்னோடு பேசி விட்டுப் போய் விடுகிறேன். சொல்லு, நீ எப்படி இருக்கிறாய்?.. மனைவி, பிள்ளைகள் சுகந்தானா?” பின்பு கண்கள் பளிச்சிட, கேலிப் புன்னகையில் பற்கள் வெளித் தெரிய, “உன் வீட்டுக்கு விருந்திற்கு வரலாம் என்று பார்க்கிறேன், நேரமே கிடைப்பதில்லை. ஓயாமல் நானே குடித்துத் தீர்க்கிறேன்...” என்றான்.

“டேய், டேய், இந்தப் பேச்சைக் கட்டிவை! கேலி பண்ணாதே, எலும்பு துருத்திச் சாத்தானே! நான் உனக்குச் சரியான பாடம் கொடுப்பேன்... அல்லது வீடு வீடாக, தெருத் தெருவாகப் புகுந்து கொள்ளையடிக்கத் திட்டம் இட்டிருக்கிறாயோ?”

“எதற்காக? இங்கே இருக்கிற பண்டமே உனக்கும் எனக்கும் வாழ்நாள் முழுவதற்கும் போதுமே. கடவுளாணை, போதும், செம்யோனிச்! நீ என்னவோ மறுபடி இரண்டு சரக்குச் சிப்பங்களை அபேஸ் பண்ணி விட்டாயாமே!.. பார், செம்யோனிச், சாக்கிரதை! எக்கச்சக்கமாக மாட்டிக்கொண்டு விடாதே!..”

செம்யோனிச்சுக்கு ஆத்திரத்தால் உடல் பதறிற்று. ஏதோ சொல்ல முயன்றவன் எச்சி

லைத் தெரித்தான். செல்காஷ் அவன் கையை விட்டு விட்டு நீண்ட கால்களால் அமைதியாகத் திரும்பி நடந்து கப்பல் துறையின் வாயிலுக்குச் சென்றான். காவலாள் வெறியுடன் திட்டி நொறுக்கியவாறு அவன் பின்னே சென்றான்.

செல்காஷ் களிப்படைந்தான். பற்களின் ஊடாக மெதுவாய்ச் சீட்டி அடித்தான். சராய்ப் பைகளில் கைகளை நுழைத்துக்கொண்டு குத் தலும் கிண்டலும் கேலியுமாக இடமும் வலமும் வீசியவாறு நிதானமாக நடந்தான். மற்றவர் கள் அவனுக்கு அதே முறையில் பதிலளித் தார்கள்.

''அடேயப்பா, கிரீஷ்கா, எசமானர்கள் உன் னை எப்படித் தான் பேணுகிறார்கள்!'' என்று சாப்பிட்டு விட்டு இளைப்பாறுவதற்காகத் தரை யில் கிடந்த சுமையாட்கள் கும்பலிலிருந்து ஒருவன் கத்தினான்.

''நான் வெறுங்காலன் அல்லவா, அதனால் என் காலில் ஏதேனும் குத்திக்கிழித்து விடாத படி செம்யோனிச் பார்த்துக் கொள்கிறார்,'' என்று செல்காஷ் பதில் கூறினான்.

வாயிலை அடைந்தார்கள். இரண்டு இராணு வத்தினர் செல்காஷின் மேல் தொட்டுத் தடவிப் பார்த்து விட்டு அவனை லேசாக வீதியில் தள்ளி னார்கள்.

செல்காஷ் வீதியைக் குறுக்காகக் கடந்து சாராயக் கடைக் கதவுக்கு எதிரே இருந்த குத் துக்கல் மேல் உட்கார்ந்தான். சரக்கு ஏற்றிய வண்டிகளின் வரிசை கப்பல் துறை வாயி லிலிருந்து கடகடப்புடன் வெளியே வந்தது.

எதிர்ப்புறமிருந்து காலி வண்டிகள் சென்றன. வண்டிக்காரர்கள் அவற்றில் குதித்துக் கொண் டிருந்தார்கள். கப்பல் துறை ஊளை முழக் கத்தையும் காந்தச் செய்யும் புழுதியையும் பரப் பியது...

இந்த வெறி பிடித்த சந்தடியில் செல்காஷ் மகிழ்ச்சியில் திளைத்தான். கொழுத்த வரு மானம் அவனுக்குக் கிடைக்க இருந்தது. கொஞ் சம் உழைப்பும் நிறையச் சாமர்த்தியமும் அதற் குத் தேவைப்பட்டன. வேண்டிய அளவு சாமர்த் தியம் தன்னிடம் இருப்பதாக அவன் நம் பினான். மறுநாள் காலையில் பண நோட்டுகள் கைக்கு வந்து சேர்ந்ததும் எப்படிக் களி கொண் டாடப் போகிறோம் என்று கண்களைச் சுரித்த வாறு எண்ணமிட்டான்... தோழன் மீஷ்கா வை நினைத்துக் கொண்டான். காலை ஒடித் துக் கொண்டிராவிட்டால் இன்று இரவு அவன் மிகவும் உதவியாய் இருந்திருப்பான். மீஷ்கா இல்லாமல் ஒண்டியாகக் காரியத்தைச் சமாளிப் பது தன்னால் முடியாது என்று எண்ணி மனத் துக்குள் திட்டிக்கொண்டான் செல்காஷ். இரவு எப்படிப்பட்டதாக இருக்கும்?.. அவன் வானத் தின் மீதும் வீதி நெடுகிலும் கண்ணோட் டினான்.

அவனுக்கு ஓர் ஆறு அடி தூரத்தில் குத் துக்கல்லில் முதுகைச் சாய்த்துக்கொண்டு நடை பாதை அருகே தளவரிசை மேல் உட்கார்ந்திருந் தான் ஓர் இளைஞன். நீல நிற முரட்டுத் துணிச் சட்டையும் அதே மாதிரிச் சராயும் மரவுரிச் சோடு களும் முன் விளிம்பு வைத்த கிழிந்த தொப்பி

டம் அணிந்திருந்தான். சிறு பயணப் பையும் பின்னிய வைக்கோல் சுற்றி மேலே கயிற்றால் கச்சிதமாகக் கட்டப்பட்டிருந்த பிடியற்ற அரிவாளும் அவன் பக்கத்தில் கிடந்தன. அவன் அகன்ற தோள்களும் கட்டுக்குட்டான மேனியும் சணல் நிற முடியும் வெயிலிலும் காற்றிலும் அடிபட்டுப் பழுப்பேறிய முகமும் பெரிய நீல விழிகளும் கொண்டிருந்தான். அந்த விழிகள் செல்காஷை நம்பிக்கையுடன் நோக்கின.

செல்காஷ் பற்களைக் காட்டி நாக்கை நீட்டி, முகத்தைப் பயங்கரம் ஆக்கிக்கொண்டு இளைஞனைப் பரக்க விழித்துப் பார்த்தான்.

இளைஞன் முதலில் ஒன்றும் புரியாமல் மலங்க மலங்க விழித்தான். பின்பு திடீரென்று வாய்விட்டுச் சிரித்து, ''வேடிக்கையான ஆளப்பா நீ!'' என்று சிரிப்புக்கு நடுவே கத்தினான். அநேகமாகத் தரையிலிருந்து எழுந்திருக்காமலே தன் பையைப் புழுதியில் இழுத்துக்கொண்டும் அரிவாளைக் கற்களில் அடிபட நகர்த்திக்கொண்டும் தன் குத்துக்கல்லிலிருந்து செல்காஷின் குத்துக்கல்லுக்கு வந்து விழுந்தான்.

செல்காஷின் சராயைப் பிடித்து இழுத்து, ''என்ன சகோதரனே, குடி ரொம்ப பலம் போலிருக்கிறதே!..'' என்றான்.

''குடி பலந்தான், பச்சைப் பிள்ளை, பலந்தான்!'' என்று குறு நகையுடன் ஒப்புக்கொண்டான் செல்காஷ். குழந்தையுடையவை போன்ற தெளிந்த விழிகள் கொண்ட திடகாத்திரமான இந்த நல்ல பையனை அவனுக்கு

எடுத்த எடுப்பில் பிடித்துப் போய்விட்டது. ''புல் அறுப்பு நடத்திவிட்டு வருகிறாயாக்கும்?''

''பின்னே என்ன?.. ஒரு மைல் தூரம் புல் அறுத்தால் ஒரு காசு கூலி கிடைக்கிறது. படு மோசமான பிழைப்பு! ஆ-ஆட்கள் ஒரு பாடு! பஞ்சத்தில் அடிப்பட்டவன் எல்லாம் வந்து குவிந்தானா, கூலியை ஒரே மட்டாய்க் குறைத்து விட்டார்கள். வேண்டாம் என்றால் விட்டு விடு என்கிறார்கள்! அறுபது காசு குபாணில் கூலி கொடுத்தார்கள். காலத்தின் கோலம்!.. முன் னே எல்லாம் மூன்று ரூபிள், நான்கு, ஐந்து கூடக் கொடுத்தார்களாம்!..''

''முன்னேயா!.. முன்னே என்றால் அங்கே ருஷ்ய ஆளைப் பார்ப்பதற்கே மூன்று ரூபிள் கொடுத்தார்கள். ஒரு பத்து ஆண்டுக்கு முன் னாலே நான் இந்த வேலை தான் செய்து கொண்டிருந்தேன். கிராமத்துக்குப் போவேன். 'நான் ருஷ்யன்' என்பேன். ஆட்கள் என்னை ஏற இறங்கப் பார்ப்பார்கள், தொட்டுத் தடவிச் சோதிப்பார்கள், ஆச்சரியப்படுவார்கள், அப் புறம், 'இந்தா மூன்று ரூபிள்!' என்று கொடுப் பார்கள். மேற்கொண்டு குடியும் சாப்பாடும் வே றே. எத்தனை நாள் வேண்டுமோ இருந்து கொள்ளலாம்.''

இளைஞன் முதலில் வாயை ஆவென்று திறந்து, உருண்டை முகத்தில் விளங்காத பா ராட்டு தோன்றச் செல்காஷின் பேச்சைக் கேட்டுக் கொண்டிருந்தான். கந்தலாண்டி பொய் சொல் கிறான் என்பதை அப்புறம் புரிந்து கொண்டு உதடுகளைச் சப்புக்கொட்டிக் கட கடவென்று

சிரித்தான். செல்காஷ் புன்னகையை மீசைக் குள் மறைத்துக் கொண்டு ஆழ்ந்த முகத் தோற்றத்தை அப்படியே வைத்திருந்தான்.

''கோமாளி, நிஜம் போலச் சொல்லுகிறாய், நானும் கேட்டு நம்புகிறேன்... இல்லை, கடவுளா ணை, முன்னே எல்லாம்...''

''நான் மட்டும் என்ன சொல்லுகிறேனாம்? முன்னே எல்லாம் அப்படித்தான் இருந்தது என்கிறேன்...''

''அட, போ அப்பா!..'' என்று கையை ஆட்டி னான் இளைஞன். ''நீ என்ன, செம்மானா? இல்லை, தையல்காரனா?''

''நானா?'' என்று பதிலுக்குக் கேட்டான் செல்காஷ். ''நான் மீனவன்...''

''மீனவனா! அப்படிச் சொல்லு! என்ன, மீன் பிடிபடுகிறதா?..''

''மீன் எதற்கு? இந்தப் பக்கத்து மீனவர்கள் வெறுமே மீன் மட்டும் பிடிப்பதில்லை. மூழ் கியவற்றை, பழைய நங்கூரங்கள், முழுகிய கப் பல்கள் — எல்லாவற்றையும் அதிகமாகப் பிடிப் பார்கள்! இதற்காகத் தனிப்பட்ட தூண்டில்கள் இருக்கின்றன...''

''புளுகு, புளுகு!.. ஒரு பாட்டு பாடுவார்களே, மீனவர்கள், நீ அவர்களைச் சேர்ந்தவனோ ஒரு வேளை? அந்தப் பாட்டில் இப்படி வரும்:

'வலைகள் வீசுவோம் நாங்கள்
வறண்ட கரைகளில்.
களஞ்சியங்கள், கிடங்குகளில்!..' ''

செல்காஷ் புன்னகையுடன் அவனை நோக்கி,

‘‘இந்த மாதிரி மீனவர்களை நீ பார்த்திருக்கிறாயா?’’ என்று கேட்டான்.

‘‘இல்லை, பார்ப்பது எங்கே? கேள்விப்பட்டிருக்கிறேன்...’’

‘‘பிடிக்கிறதா?’’

‘‘அவர்களையா? பிடிக்காமல் என்ன?.. மோசமில்லை பையன்கள். கட்டில்லாதவர்கள், சுதந்திரமானவர்கள்...’’

‘‘உனக்கு எதற்குச் சுதந்திரம்?.. உனக்குச் சுதந்திரம் பிடிக்குமா, என்ன?’’

‘‘பிடிக்காமல் எப்படி? நமக்கு நாமே எசமான். எங்கே வேண்டுமோ போகலாம், என்ன வேண்டுமோ செய்யலாம்... சும்மா தானா! ஒழுங்காக வாழ முடியும் என்றால், தோளில் பாரம் இல்லையென்றால் அதுவே போதுமானது! வேண்டியபடிக் குதூகலமாகச் சுற்றித் திரியலாம். கடவுளை மட்டும் மறந்துவிடக் கூடாது...’’

செல்காஷ் இகழ்ச்சியுடன் துப்பி, இளைஞனிடமிருந்து முகத்தைத் திருப்பிக்கொண்டான்.

‘‘என் காரியத்தையே எடுத்துக் கொள்வோம்...’’ என்று பேசிக் கொண்டு போனான் இளைஞன். ‘‘என் அப்பன் இறந்து விட்டான், பண்ணை சின்னது, அம்மா கிழவி, நிலம் சத்தில்லாதது—நான் என்ன செய்வது? பிழைப்பு நடத்தியாக வேண்டும். ஆனால் எப்படி? தெரியவில்லை. நல்ல குடும்பத்திலே மாப்பிள்ளையாகப் போகலாம். சரி. பெண்ணுக்குச் சொத்தைப் பிரித்துக்கொடுத்தால் நல்லது... ஆனால் மாமன் பிரித்துக்கொடுக்க மாட்டேன் என்கிறா

னே பேய்ப் பயல்! நான் அவனுக்கு உழைக்க வேண்டும்... நீண்ட காலம்... ஆண்டுக் கணக்கில்! பார்த்தாயா நிலவரத்தை! நான் மட்டும் ஒரு நூறு, நூற்றைம்பது ரூபிள் சம்பாதிக்க முடிந்தால் உடனே தன் பலம் கொண்டு நிற்பேன். அந்தீப் இருக்கிறானே, என் மாமன், அவனைப் போடா போக்கற்றவனே என்று விரட்டி இருப்பேன்! மகள் மார்ஃபாவுக்குச் சொத்தைப் பிரித்துக்கொடுக்க இஷ்டமா? இல்லையா? வேண்டாம்! ஆண்டவன் அருளாலே கிராமத்தில் பெண் அவள் ஒருத்தி மட்டும் அல்ல. ஆக, நான் ஒரு கட்டு இல்லாமல் முழுக்க முழுக்கச் சுதந்திரமாய் இருப்பேன், என் போக்குப் படி... ஆ-மாம்!'' இளைஞன் பெருமூச்செறிந்தான். ''இப்போதோ, பெண்ணைக் கட்டிக்கொள்வது தவிர வேறு வழி இல்லை. நான் நினைத்தேன்: இதோ குபானுக்குப் போவேன். ஓர் இருநூறு ரூபிள் போலச் சம்பாதிப்பேன், போதுமே! நானே பிரபு!.. எண்ணம் ஈடேறவில்லை. பண்ணைக் கூலியாக வேலை செய்துதான் பிழைக்க வேண்டும். சொந்த நிலத்தை உழுது பயிரிட்டுக் காலம் தள்ள முடியாது என்னால்! ஒருபோதும் முடியாது! ஐயோ!..''

இளைஞனுக்கு மாப்பிள்ளை ஆக அறவே விருப்பம் இல்லை. அவன் முகங்கூடத் துயரத்தால் நிறம் மங்கிவிட்டது. தரையில் இருந்தபடியே அமைதி இன்றித் துடித்தான்.

''இப்போது நீ எங்கே போவாய்?'' என்று கேட்டான் செல்காஷ்.

''எங்கேயாவது? தெரியாதா, வீட்டுக்குத் தான்.''

''ஆனால், தம்பி, எனக்கு இது தெரியாது. ஒருவேளை நீ துருக்கிக்குப் போனாலும் போவாய்...''

''துருக்-இக்-கா?..'' என்று நீட்டி முழக்கினான் இளைஞன். ''ருஷ்யக் கிறிஸ்தவர்களில் எவன் அப்பா அங்கே போவான்? நல்ல இடந்தான் பார்த்தாய், போ!..''

''சரியான மடையனடா நீ!'' என்று செல்காஷ் பெருமூச்செறிந்து மறுபடி அவனிடமிருந்து முகத்தைத் திருப்பிக் கொண்டான். வலிய உடற்கட்டுள்ள இந்த நாட்டுப்புற இளைஞன் செல்காஷின் உள்ளத்தில் இனந் தெரியாத ஓர் உணர்வைத் தூண்டி விட்டான்...

மெதுவாக முதிர்ந்த, மங்கலான, வருத்தம் தரும் உணர்வு எங்கோ நெஞ்சின் ஆழத்தில் குமைந்து, அன்று இரவு செய்ய வேண்டி இருந்த காரியத்தைப் பற்றிக் கவனமாக ஆழ்ந்து சிந்திக்க விடாமல் அவனைத் தடுத்தது.

ஏச்சுக்கு உள்ளான அந்த இளைஞன் செல்காஷை எப்போதாவது ஓரப் பார்வையாகப் பார்த்தவாறு வாய்க்குள் ஏதோ முணுமுணுத்தான். அவன் கன்னங்கள் வேடிக்கையாக உப்பின, உதடுகள் துருத்தின, இடுங்கிய கண்கள் மிக அடிக்கடி, சிரிப்பூட்டும் வகையில் கொட்டின. இந்த மீசைக்காரக் கந்தலாண்டியுடன் தனது பேச்சு இவ்வளவு விரைவாகவும் வருந்தத்தக்க விதத்திலும் முடியும் என்று அவன் எதிர் பார்க்கவில்லை போலும்.

கந்தலாண்டி அப்புறம் அவன் மீது கவனம் செலுத்தவே இல்லை. யோசனையில் ஆழ்ந்த வனாகக் குத்துக்கல் மேல் உட்கார்ந்து வெற்றுக் குதிகாலால் அதில் தாளம் போட்டவாறு சீட்டி அடித்தான்.

தானும் சுடு சொல்லால் அவனைத் தாக்க வேண்டும் என்ற விருப்பம் இளைஞனுக்கு உண் டாயிற்று.

''டேய் மீனவா! நீ அடிக்கடி இப்படிக் குதிப் பது உண்டோ?'' என்று பேச்சைத் தொடங்க வாயெடுத்தான். ஆனால் அதே கணத்தில் மீன வன் அவன் பக்கம் முகத்தை விரைவாகத் திருப்பி,

''கேளப்பா, பச்சைப் பிள்ளை! இன்றைக்கு ராத்திரி என்னோடு வேலை செய்ய விரும்புகிறா யா? சட்டென்று சொல்லு!'' என்றான்.

''என்ன வேலை?'' என்று நம்பிக்கை இல் லாமல் கேட்டான் இளைஞன்.

''ஊம், என்ன வேலையா?.. நான் சொல் லுகிற வேலை... மீன் பிடிக்கப் போவோம். நீ துடுப்புத் தள்ளுவாய்...''

''அப்படியா... அதற்கென்ன? பரவாயில் லை. வேலை செய்யலாம். ஒன்று மட்டும்... உன்னோடு சேர்ந்து ஏதேனும் வம்பில் மாட்டிக் கொள்ள வேண்டி வருமோ. நீ ரொம்பப் புரிந்து கொள்ள முடியாத, சந்தேகத்துக்கு இடமான ஆளாக...''

செல்காஷுக்கு நெஞ்சில் சூட்டுக்கோல் பட்ட மாதிரி இருந்தது. ஆழ்ந்த வன்மத்துடன் தணிந்த குரலில் சொன்னான்:

‘‘புரியாததைப் பற்றிப் பேசாதே நீ. இதோ உன் மண்டையில் மடாரென்று ஒரு சாத்து சாத்துகிறேன், மூளை தெளிந்து விடும்...’’

அவன் குத்துக்கல்லிலிருந்து குதித்தெழுந்து இடது கையால் மீசையை நெருடி, வலது கையை நாளங்கள் புடைக்க முட்டி பிடித்துப் பளிச்சிடும் கண்களை உருட்டி விழித்தான்.

இளைஞன் அரண்டு போனான். சட்டென்று சுற்றிலும் கண்ணோட்டி விட்டு, அச்சத்துடன் இமைகளைக் கொட்டியவாறு தானும் தரையிலிருந்து துள்ளி எழுந்தான். ஒருவரை ஒருவர் கண்களால் ஆழம் பார்த்த வண்ணம் இருவரும் பேசாதிருந்தார்கள்.

‘‘ஊம்?’’ என்று கடுமையாக வினவினான் செல்காஷ். இந்த இளங் கன்றுக் குட்டி தனக்கு இழைத்த அவமானத்தால் அவன் கொதித்துத் துடித்தான். உரையாடலின் போது இந்தப் பயலை அவன் இகழ்ந்தான். இப்போதோ, திடீரென்று வெறுத்தான்—அவனுக்கு இத்தகைய தெளிந்த இள நீல விழிகளும் ஆரோக்கியமுள்ள பழுப்பேறிய முகமும் குட்டையான வலிய கரங்களும் இருந்ததற்காக, அவனுக்குச் சொந்த ஊரும் அதில் ஒரு வீடும் உண்டு என்பதற்காக, பணக்கார விவசாயி ஒருவன் அவனை மாப்பிள்ளை ஆகும்படி அழைப்பதற்காக, அவனுடைய சென்று போன, வரப் போகிற வாழ்க்கை அனைத்திற்குமாக, செல்காஷுடன் ஒப்பிடும்போது இளம் பாலகனான இவன், எதன் மதிப்பை அறிய மாட்டானோ, எது இவனுக்குத் தேவையும் இல்லையோ அந்த விடுதலையை

விரும்புவதற்காக. எவனை நாம் நம்மைவிட மோசமானவன், தாழ்ந்தவன் என்று எண்ணுகிறோமோ அவன் நாம் விரும்புவதை விரும்புகிறான், வெறுப்பதை வெறுக்கிறான், இவ்வாறு நமக்கு ஒப்பாகி விடுகிறான் என்பதைக் காண்பது எப்போதும் மகிழ்ச்சியற்றது.

இளைஞன் செல்காஷை நோக்கி அவன் தனக்கு எசமானன் என உணர்ந்தான்.

''நான் ஒன்றும்... மறுப்புக் கிடையாது...'' என்று பேச்சைத் தொடங்கினான். ''வேலை கிடைக்காதா என்று தானே தேடிக் கொண்டிருக்கிறேன். உன்னிடமோ, வேறு ஒருவனிடமோ, யாரிடம் வேலை செய்தாலும் எனக்கு ஒன்றுதான். நான் எதற்காகச் சொன்னேன் என்றால் நீ வேலை செய்யும் ஆள் மாதிரி இல்லை—ஒரே... கந்தலாண்டியாக இருக்கிறாய் என்பதற்காக. இது எல்லாருக்கும் ஏற்படக் கூடியதுதான் என்பது எனக்குத் தெரியும். அட கடவுளே, குடிகாரர்களை நான் முன்பு கண்டதில்லையா என்ன? அடேயப்பா, எத்தனை பேரைப் பார்த்திருக்கிறேன்!.. அதுவும் உன்னை விடப் படுமோசமானவர்களை.''

''சரி, சரி, விடு! சம்மதமா?'' என்று மென்மையாக மறுபடி கேட்டான் செல்காஷ்.

''எனக்கா? சம்மதம்!.. தாராளமாக. கூலியைப் பேசு.''

''வேலைக்குத் தக்கபடி கூலி கொடுப்பேன். எந்த மாதிரி வேலை என்பதைப் பொறுத்து. அதாவது பிடிபடுவது எந்த மாதிரி மீன் என்

பதைப் பொறுத்து... ஐந்து ரூபிள் போல உனக்கு, புரிந்ததா?''

ஆனால் இப்போது விஷயம் பணத்தைப் பற்றியதாக இருந்தது. இதில் விவசாயி துல்லியமாக இருக்க விரும்பினான். வேலை கொடுப்பவனிடமும் அதே துல்லியத்தை எதிர்பார்த்தான். நம்பிக்கையின்மையும் சந்தேகமும் இளைஞனுக்கு மீண்டும் உண்டாயின.

''இது எனக்குக் கட்டி வராது, அண்ணே!''

செல்காஷ் பாத்திரத்துக்கு ஏற்ப நடித்தான்:

''பேசாதே, பொறு! சாப்பாட்டு விடுதிக்குப் போவோம் வா!''

அவர்கள் அருகருகாகத் தெருவில் நடந்தார்கள். செல்காஷ் எசமானனுக்குரிய மிடுக்கான தோற்றத்துடன், மீசையை முறுக்கிக் கொண்டு நடந்தான்; இளைஞன் கீழ்ப்படிய முற்றும் ஆயத்தமாய் இருக்கும் முக பாவத்துடனும் அதே சமயம் நம்பிக்கையின்மையும் அச்சம் நிறைந்தவனாகவும் காணப்பட்டான்.

''உன் பெயர் என்ன?'' என்று கேட்டான் செல்காஷ்.

''கவ்ரீலா!'' என்று பதில் சொன்னான் இளைஞன்.

அழுக்கடைந்து புகை படிந்த சாப்பாட்டு விடுதிக்கு அவர்கள் வந்ததும் செல்காஷ் கடைக்காரனிடம் போய் வாடிக்கைக்காரனுக்குரிய பழக்கமான தோரணையில் ஒரு புட்டி வோத்காவும் முட்டைக்கோசு சூப்பும் இறைச்சிப் பொரியலும் தேநீரும் கொடுக்கும்படிக் கூறி, வேண்டியதை வரிசைப்படுத்திச் சொன்ன பிறகு ''எல்லாம்

பற்று எழுதிக்கொள்!'' என்று சுருக்கமாகக் குறிப்பிட்டான். கடைக்காரன் அதற்கு மௌன மாகத் தலையாட்டினான். போக்கிரியாகத் தோற் றம் அளித்தாலும் தன் எசமானன் இவ்வளவு பிரபலமாகவும் நம்பிக்கைக்கு உரியவனாகவும் இருப்பதைக் கண்ட கவ்ரீலாவுக்கு அவன் மேல் திடீரென்று மட்டற்ற மரியாதை உண்டாகிவிட் டது.

''நல்லது, இதோ நாம் சாப்பிடலாம், விவர மாகப் பேசுவோம். இப்போதைக்கு நீ உட் கார்ந்திரு, நான் சில இடங்களுக்குப் போய் விட்டு வருகிறேன்.''

செல்காஷ் போய் விட்டான். கவ்ரீலா சுற்றி லும் நோட்டமிட்டான். சாப்பாட்டு விடுதி நிலவறை யில் இருந்தது. ஈரிப்பாகவும் இருட்டாகவும் இருந் தது. மட்டு மீறிச் சூடேறிய வோத்கா, சிகரெட்டுப் புகை, கீல் ஆகியவற்றின் மூச்சு திணறச் செய் யும் நாற்றத்தாலும் வேறு ஏதோ சுள்ளென்ற நெடியாலும் அது முழுவதும் நிறைந்திருந் தது. கவ்ரீலாவுக்கு எதிரே, வேறு மேசையருகே உட்கார்ந்திருந்தான் ஒரு குடிகாரன். செம்பட் டைத் தாடி வைத்திருந்த அந்த ஆள் மாலுமி உடுப்பு அணிந்திருந்தான். நிலக்கரித் தூளும் கீலும் அவன் மேலெல்லாம் படிந்திருந்தன. ஓயாமல் விக்கியவாறு ஒரு பாட்டை முனகிக் கொண்டிருந்தான் அவன். பாட்டின் சொற் களைக் குழப்பியும் சிதைத்தும், சில வேளை களில் பயங்கரச் சீறலாகவும் வேறு வேளை களில் அடித் தொண்டையிலிருந்தும் ஒலித் தான். அவன் ருஷ்யன் அல்லாதவன் போலும்.

அவனுக்குப் பின்னே இரண்டு மல்தாவியப் பெண்கள் உட்கார்ந்திருந்தார்கள். கந்தல் உடைகள் அணிந்து கருங் கூந்தலும் பழுப்பேறிய முகங்களும் கொண்டிருந்த அவர்களும் குடி வெறிக் குரல்களில் பாட்டைக் கிரீச்சிட்டுக் கொண்டிருந்தார்கள்.

பிறகு இருட்டிலிருந்து வெளிப்பட்டன இன்னும் பல வித உருவங்கள். எல்லாம் விந்தையான முறையில் அலங்கோலத் தோற்றம் அளித்தன, எல்லாம் அரைக் குடிவெறியில் இருந்தன, கூச்சலிட்டன, அமைதி இன்றிக் குமைந்தன...

கவ்ரீலாவுக்கு அச்சம் ஏற்பட்டது. எசமானன் விரைவில் திரும்ப வேண்டும் என்ற விருப்பம் உண்டாயிற்று. சாப்பாட்டு விடுதியில் இரைச்சல் ஒரே குரலாக ஒன்றாயிற்று. ஏதோ ஒரு பிரமாண்டமான விலங்கு உறுமுகிறது என்று தோன்றியது. வெவ்வேறான பல நூறு குரல்கள் கொண்ட இந்த விலங்கு இந்தக் கற்குழியிலிருந்து வெளியேறுவதற்காகச் சீற்றத்துடன் குருட்டுத்தனமாகப் பாய்வது போலவும் வெளியே போக அதற்கு வழி கிடைக்கவில்லை போலவும் பிரமை உண்டாயிற்று... வெறியூட்டுவதும் கனத்ததுமான ஒன்று தன் உடலில் உறிஞ்சப் படுவது போலவும் அதனால் தன் தலை கிறுகிறுப்பது போலவும் ஆவலுடனும் அச்சத்துடனும் விடுதியைப் பார்வையிட்டுக் கொண்டிருந்த கண்கள் இருள் அடைவது போலவும் கவ்ரீலா உணர்ந்தான்...

செல்காஷ் வந்தான். அவர்கள் பேசிக்

கொண்டே சாப்பிடவும் குடிக்கவும் தொடங்கி னார்கள். மூன்றாவது கிண்ணம் பருகியதும் கவ்ரீலாவுக்கு வெறி ஏறிவிட்டது. அவனுக்குக் களிப்பு உண்டாயிற்று. தனக்கு இவ்வளவு ருசி யான சாப்பாடு போட்ட எசமானனுக்கு—அரு மையான மனிதன்!—இனிய சொற்கள் எவற் றையேனும் கூற ஆசைப்பட்டான். ஆனால் அலை அலையாகத் தொண்டையில் பெருகிய சொற்கள் எதனாலோ நாக்கில் ஏற மறுத்து விட்டன. நாக்கோ திடீரென்று கனமாகி விட்டது.

செல்காஷ் அவனை நோக்கிக் கேலிப் புன் னகை செய்து, "வெறி கொண்டு விட்டாயா?.. ஐந்தாவது கிண்ணத்துக்குள்?.. வெறும் கூழ் குடிக்கி! எப்படி வேலை செய்யப் போகிறா யாம்?.." என்றான்.

"நண்பா!.." என்று குதலையாகக் குழற் றினான் கவ்ரீலா. "பயப்படாதே! நீ சொல் வதைச் செய்கிறேன்!.. இதோ உன்னை முத்த மிடுகிறேன்!.. ஊம்?"

"டேய், டேய்!.. இந்தா, இன்னும் குடி!"

கவ்ரீலா குடித்தான். முடிவில் எல்லாம் ஒரு சீரான அலைகள் போன்ற இயக்கத்துடன் அசைந்தாடுவது போல அவனுக்குத் தோன்றலா யின. இந்த ஆட்டம் அவனுக்கு உவப்பாய் இல்லை. இதனால் குமட்டல் எடுத்தது. அசட்டுப் பேரின்பத் தோற்றம் அவன் முகத்தில் வந்து விட்டது. ஏதோ சொல்ல முயன்றவன் வேடிக் கையாக உதடுகளைச் சப்பு கொட்டி மம்மம்மா என்று மாடு போலக் கத்தினான். அவனை உற் றுப் பார்த்துக் கொண்டிருந்த செல்காஷ் எதை

யோ நினைவுபடுத்திக் கொண்டவன் போல மீசை யை முறுக்கியவாறு புருவங்களைச் சுரித்து ஓயாமல் புன்னகை செய்து கொண்டிருந்தான்.

சாப்பாட்டு விடுதியோ, குடிவெறிக் கூச்சலில் இரைந்து கொண்டிருந்தது. செம்பட்டைத் தலை மாலுமி மேசை மீது முழங்கைகளை ஊன்றி யவாறு உறக்கத்தில் ஆழ்ந்திருந்தான்.

செல்காஷ் எழுந்து, ''வா அப்பா, போ வோம்!'' என்றான்.

கவ்ரீலா எழுந்திருக்கப் பார்த்தான், ஆனால் அவனால் முடியவில்லை. கடுமையாகத் திட்டி, குடி மயக்கத்தில் இருப்பவனுக்கு இயல்பான அர்த்தமற்ற சிரிப்புச் சிரித்தான்.

செல்காஷ் அவனுக்கு எதிரே மறுபடி நாற் காலியில் உட்கார்ந்து, ''மயங்கி விட்டான்!'' என்று சொல்லிக்கொண்டான்.

கவ்ரீலா சோம்பிய விழிகளால் எசமானனை நோக்கியவாறு விடாமல் சிரித்துக்கொண்டு போ னான். எசமானனோ, அவனை உறுத்தும் கூர் மையாகவும் சிந்தனையுடனும் பார்வையிட் டான். அவனுடைய வாழ்க்கை தன் ஓநாய்ப் பிடியில் சிக்கிக்கொண்டு விட்டதோ அந்த மனி தனைச் செல்காஷ் தன் எதிரே கண்டான். அதை இப்படியும் அப்படியும் திருப்பத் தன் னால் முடியும் என்று அவன் உணர்ந்தான். இதை ஒடிக்க அவனால் முடியும். அதே போல, உறுதியான விவசாயத்தில் நிலைபெற அதற்கு உதவவும் அவனால் முடியும். மற்றவனுக்குத் தான் எசமானன் என்று உணர்ந்த செல்காஷ் விதிவசத்தால் தான் பட நேர்ந்த பலவகையான

துன்பங்களை இந்த இளைஞன் ஒருபோதும் பட மாட்டான் என்று நினைத்துக் கொண் டான். இந்த இளைஞனுடைய வாழ்க்கை மீது அவன் பொறாமையும் பரிவும் கொண்டதோடு அதை எள்ளி நகையாடவும் தன்னுடையவை போன்ற கைகளில் அது இன்னொரு தடவை சிக்கிக்கொள்ளலாம் என்று எண்ணி அதற்காக வருத்தப்படவும் செய்தான்... செல்காஷின் எல்லா உணர்வுகளும் முடிவில் தகப்பனுக்கும் எசமானனுக்கும் உரிய ஒரு வகை உணர்வில் கலந்து ஒன்றாகி விட்டன. சிறுவன் மேல் இரக் கம் உண்டாயிற்று, சிறுவன் தேவையாகவும் இருந்தான். அப்போது கவ்ரீலாவின் கக்கங்க ளில் கை கொடுத்துத் தூக்கிய செல்காஷ், பின் னாலிருந்து முழங்காலினால் லேசாக இடித்துச் சாப்பாட்டு விடுதி முகப்புக்கு இட்டு வந்து விறகுக் கட்டைக் குவியலின் நிழலில் தரையில் படுக்கப் போட்டு, தானும் அவனருகே உட்கார்ந்து சுங் கான் புகைக்கலானான். கவ்ரீலா சற்று புரண் டான், முனகினான், பின்பு உறங்கிவிட்டான்.

## 2

''என்ன, தயாரா?'' என்று துடுப்புகளைப் பொ ருத்திக் கொண்டிருந்த கவ்ரீலாவிடம் தணிந்த குரலில் கேட்டான் செல்காஷ்.

''இதோ! துடுப்புக் கொண்டி லேசாக ஆடு கிறது. துடுப்பால் ஓர் அடி அடிக்கலாமா?''

''கூடாது! சத்தமே உதவாது! கைகளால்

அதை வலிவாக அழுத்து. அது இடத்தில் சரியாகப் பொருந்திக்கொள்ளும்.''

ஓக் மரப் பலகைகள் நிறைத்த பாய்மரக் கப்பல்கள், ஈச்ச மரங்களும் சந்தனக் கட்டைகளும் சைப்ரஸ் மரத் துண்டுகளும் ஏற்றிய பெரிய துருக்கிய மரக்கலங்கள் ஆகியவற்றின் வரிசைகள் நிறுத்தப்பட்டிருந்தன. இந்த மரக்கலங்கள் ஒன்றோடு இணைக்கப்பட்டிருந்த படகை இருவரும் ஆயத்தம் செய்தார்கள்.

இரவு கவிந்திருந்தது. பரட்டை மேகங்களின் கனத்த படலங்கள் வானத்தில் மிதந்தன. கடல் அமைதியாகவும் கருமையாகவும் எண்ணெய் போன்று கெட்டியாகவும் இருந்தது. ஈரித்த உவர் மணம் அதிலிருந்து வீசியது. செல்காஷின் படகைச் சிறிது அசைத்தவாறு, கப்பல்களின் பக்கங்களிலும் கரையிலும் மோதிக் கொஞ்சலாக ஒலித்தது கடல். கரைக்கு வெகு தொலைவில் இருந்த கடற் பரப்பிலிருந்து மேலெழுந்தன கப்பல்களின் கரிய உடல்கள். உச்சியில் பல நிற விளக்குகளுடன் அவற்றின் கூரிய பாய்மரங்கள் வானைத் துளைத்தன. விளக்குகளின் ஒளிகளைக் கடல் பிரதிபலித்தது. அவை மஞ்சள் கறைகள் போன்று அதில் அடை அடையாகச் சிதறி இருந்தன. மென்மையான, மங்கிய கரு நிற வெல்வெட் நீர்ப் பரப்பில் அவை அழகாகத் துடித்தன. பகல் முழுதும் கடுமையாக உழைத்துக் களைத்துப்போன தொழிலாளி போல ஆரோக்கியம் நிறைந்த அயர்ந்த தூக்கத்தில் ஆழ்ந்திருந்தது கடல்.

கவ்ரீலா துடுப்புகளை நீரில் ஆழ்த்தி, ''போ வோம்!'' என்றான்.

''நல்லது!''—செல்காஷ் சுக்கானை விசையாகத் திருப்பிப் படகைப் பாய்மரக் கப்பல்களின் இடையே நீரில் தள்ளினான். அது நீரில் வழுக்கி விரைவாகச் சென்றது. துடுப்பின் அடிகளால் நீர் பாஸ்வர இள நீல வண்ணத்தில் ஒளிர்ந்தது. படகின் பின்புறம் நீண்ட நீர்ப் பட்டை மென்மையாகப் பளிச்சிட்டவாறு வளைந்து சென்றது.

''என்ன, தலை எப்படி இருக்கிறது? வலிக்கிறதோ?'' என்று கனிவாகக் கேட்டான் செல்காஷ்.

''பயங்கரமாக!.. இரும்புக் கொதிகலம் போலக் கணகணக்கிறது... இதோ தண்ணீரால் நனைத்துக் கொள்கிறேன்.''

''எதற்காக? இதோ பார். நீ வயிற்றை உள்ளாலே நனைத்துக்கொள். ஒருவேளை சீக்கிரமாகச் சுதாரித்துக் கொள்வாய்...'' என்று கூறி வோத்கா புட்டியை கவ்ரீலாவிடம் நீட்டினான் செல்காஷ்.

''ஓகோ, அப்படியா? ஆண்டவா, அருள் செய்!..''

தணிந்த களகளப்புச் சத்தம் கேட்டது.

''உன்னைத்தானே, டேய்! சந்தோஷம் உண்டாயிற்றா?.. போதும்!'' என்று அவனை நிறுத்தினான் செல்காஷ்.

கப்பல்களின் நடுவே ஓசை இல்லாமலும் அனாயாசமாகவும் வளைந்து நெளிந்தவாறு படகு மீண்டும் விரைந்தது... திடீரென்று அது அவற்றின் கூட்டத்திலிருந்து பிய்த்துக்கொண்டு முன்

னேறியது. எல்லையற்ற, விறல் மிக்க கடல் அவர்களுக்கு எதிரே அகன்று விரிந்து நீலத் தொடுவானத்திற்குள் சென்றது. அங்கே அதன் நீரிலிருந்து வானத்தில் எழும்பின முகில் மலைகள். ஊதாவும் மங்கிய நீல நிறமும் கொண்டவை, விளிம்புகளில் மஞ்சள் தூவிக் கரையிட்டவை, பசிய நிறம் உள்ளவை, கடல் நீரின் நிறம் வாய்ந்தவை, மற்றும் பெருந் துயர் ததும்பும் கனத்த நிழல்களைத் தோற்றுவிக்கும் சலிப்பூட்டும் காரீய நிற முகில்கள் ஆகியவை இவற்றில் இருந்தன. சில வேளைகளில் ஒன்றாகச் சேர்ந்தும் வேறு வேளைகளில் ஒன்றை ஒன்று முந்திக் கொண்டும் மேகங்கள் மெதுவாக ஊர்ந்தன, தங்கள் வண்ணங்களையும் வடிவங்களையும் கலந்தன, தங்களைத் தாங்களே விழுங்குவதும் மீண்டும் புதிய வரையுருவங்களில் வெளிப்படுவதுமாக மாட்சியும் துயரத் தோற்றமும் ஒருங்கே கொண்டு இயங்கின... உயிரற்ற பிழம்புகளின் இந்த மெதுவான இயக்கத்தில் ஊழின் தன்மை வாய்ந்த ஒரு பண்பு இருந்தது. அங்கே, கடலின் விளிம்பில், அவை அளவு கடந்து நிறைய இருப்பதாகவும் உறங்கும் கடல் மீது தனது பொன்னிறமான பல் கோடிக் கண்களால்—விதம் விதமான நிறங்கள் கொண்டவையும் உயிரோட்டம் உள்ளவையும் தங்கள் தூய ஒளியை மதிக்கும் மனிதர்களின் உள்ளங்களில் உயர் விருப்பங்களைத் தூண்டியவாறு சுடர்பவையுமான நட்சத்திரங்களால்—வானம் இனி ஒருபோதும் பிரகாசிக்க விடாதவாறு தடுக்கும் தீய நோக்கத்

தால் உந்தப்பட்டு அவை எப்போதும் இதே அசட்டையுடன் வானில் ஊர்ந்து கொண்டிருக்கும் என்றும் தோன்றியது.

''கடல் நன்றாய் இருக்கிறதா?'' என்று கேட்டான் செல்காஷ்.

''பரவாயில்லை! ஆனால் பயமாய் இருக்கிறது,'' என்று துடுப்புகளால் ஒரு சீராகவும் வலிவாகவும் நீரை அடித்தவாறு பதிலளித்தான் கவ்ரீலா. நீண்ட துடுப்புகளின் அடிகளால் தண்ணீர் சற்றே காதில் படும்படிக் கணகணத்துச் சளப்பிட்டு பாஸ்வரத்தின் இதமான இளநீல வண்ணத்தில் இடையறாது ஒளிர்ந்தது.

''பயமாய் இருக்கிறதா? சரியான மடமட்டிப் பயல் நீ!..'' என்று கேலி செய்து முணுமுணுத்தான் செல்காஷ்.

திருடனான அவன் கடலை விரும்பினான். சோர்வின்மையும் துடி துடிப்பும் உள்ள அவனுடைய இயல்பு உளப் பதிவுகளை ஆர்வத்துடன் நாடிற்று. எல்லையற்றதும் சுதந்திரமானதும் விறல் மிக்கதுமான இந்தக் கரும் பரப்பில் நெஞ்சு செலுத்தி அதைப் பற்றிய சிந்தனையில் ஈடுபட்டிருப்பதற்கு அது அலுப்பதே இல்லை. தான் அன்பு கொண்டிருந்த ஒன்றின் அழகைப் பற்றிய கேள்விக்கு இந்த மாதிரி விடையைக் கேட்டு அவன் மனம் புண்பட்டது. படகின் பின் பகுதியில் உட்கார்ந்து சுக்கானால் தண்ணீரை வகிர்ந்தவாறு அவன் அமைதியாக முன்னே பார்வை செலுத்தினான். மழமழப்பான இந்த வெல்வெட் பரப்பில் நெடுநேரம் நெடுந் தொலை செல்லும் விருப்பம் அவனுள் நிறைந்தது.

கடல் மீது செல்கையில் விசாலமான, நலம் வாய்ந்த உணர்வு அவன் உள்ளத்தில் எப் போதும் எழும். உள்ளம் முழுவதையும் ஆட் கொண்டு வாழ்க்கையில் எதிர்ப்படும் கீழ்மை யிலிருந்து அதை ஓரளவு துப்புரவாக்கும் இந்த உணர்வை அவன் மதித்தான். நீருக்கும் காற்றுக்கும் இடையே வாழ்க்கை பற்றிய சிந் தனைகள் தங்கள் கூர்மையையும் வாழ்க்கை தனது மதிப்பையும் எப்போதும் இழந்து விடும். இங்கே தன்னை மேலானவனாகக் காண்பது அவனுக்குப் பிடித்தது. இரவுகளில் கடலினது உறக்க மூச்சின் மெல்லோசை அதற்கு மேலே சீராகப் பரவும். எல்லையற்ற இந்த ஒலி மனி தனது உள்ளத்தில் அமைதியைப் பெருக்கி, அதன் தீய கிளர்ச்சிகளை அடக்கி, மாட்சிமிக்க கனவுகளை அதில் தோற்றுவிக்கும்...

''சரி, மீன் பிடிப்புச் சாதனங்கள் எங்கே?'' என்று படகைக் கவலையுடன் நோட்டமிட்டவாறு திடீரெனக் கேட்டான் கவ்ரீலா.

செல்காஷ் திடுக்கிட்டான்.

''சாதனங்களா? படகின் பின் பகுதியில். என்னிடம் இருக்கின்றன.''

ஆனால் இந்தச் சிறுவனிடம் பொய் சொன் னதால் அவனுடைய மனம் புண்பட்டது. இந்தப் பையன் தன் கேள்வியால் அழித்துவிட்ட எண் ணங்களையும் உணர்வுகளையும் குறித்து அவ னுக்கு வருத்தம் உண்டாயிற்று. அவன் கோபம் கொண்டான். நெஞ்சிலும் தொண்டையிலும் அவனுக்குப் பழக்கமான எரிச்சல் அவனை

அழற்றியது. கவ்ரீலாவின் மனத்தில் தைக்கும் படிக் கடுமையாகச் சொன்னான்:

"இதோ பார், உட்கார்ந்திரு, வெறுமே! உனக்குச் சம்பந்தமில்லாத விஷயங்களில் தலையிடாதே. துடுப்பு வலிப்பதற்காக உன்னை அமர்த்தி இருக்கிறது, ஆகவே துடுப்பு தள்ளு. வீணாகச் சளசளத்தாயோ, உனக்குக் கெடுதல். புரிந்ததா?.."

படகு ஒரு நிமிடம் திடுக்கிட்டு நின்று விட்டது. துடுப்புகள் நீரில் நுரை எழுப்பியவாறு கிடந்தன. கவ்ரீலா பெஞ்சியில் இருப்பு கொள்ளாமல் தவித்தான்.

"போடு துடுப்பு!"

கடுமையான வசவு காற்றில் அதிர்ச்சி ஏற்படுத்தியது. கவ்ரீலா துடுப்புகளைத் துடியாகப் போட்டான். படகு பயந்து விட்டது போலப் பதற்றத்துடன் எம்பிக் குதித்தவாறு ஓசையுடன் நீரைக் கிழித்துக் கொண்டு விரைவாகச் சென்றது.

"ஒரு சீராக!.."

செல்காஷ் துடுப்புகளைக் கைகளிலிருந்து விடாமல் பின் பகுதியிலிருந்து எழுந்து கவ்ரீலாவின் வெளிறிய முகத்தில் கடுத்த பார்வையைச் செலுத்தினான். முன்னே சாய்ந்து குனிந்த நிலையில் அவன் பாயத் தயாராயிருக்கும் பூனை போன்று தோற்றமளித்தான். பற்கள் நெறுநெறுப்பதும் எலும்புகள் தயக்கத்துடன் நொடிப்பதும் கேட்டன.

"சத்தம் போடுவது யார்?" என்ற கடுமையான அதட்டல் கடலிலிருந்து வந்தது.

“டேய், சாத்தான், துடுப்பு தள்ளேன்!.. மூச்!.. கொன்று விடுவேன், நாய்ப்பயலே!.. ஊம், போடு துடுப்பு!.. ஒன்று, இரண்டு! குரலை மட்டும் கிளப்பினாயோ, பிய்த்துப் போட்டு விடுவேன், பிய்த்து!..” என்று சீறினான் செல்காஷ்.

கவ்ரீலா அச்சத்தாலும் கடும் உழைப்பாலும் களைத்துச் சோர்ந்து நடுங்கியவாறு, “தாயே மரியம்மா...” என்று கிசுகிசுத்தான்.

படகு சீராகத் திரும்பிக் கப்பல் துறையை நோக்கிச் சென்றது. அங்கே விளக்குகள் பல வண்ணக் கும்பலாகக் குழுமியிருந்தன, பாய் மரக் கம்பங்கள் தென்பட்டன.

“ஏய்! கூச்சல் போடுவது யார்?” என்ற அதட்டல் மீண்டும் கேட்டது.

இம்முறை குரல் முதல் தடவையைக் காட்டிலும் தொலைவில் ஒலித்தது. செல்காஷ் அமைதி அடைந்தான்.

“நீயேதான் கூப்பாடு போடுகிறாய்!” என்று கூச்சல்கள் வந்த திக்கை நோக்கிக் கூறிவிட்டு, இன்னும் முணுமுணுத்துக் கொண்டிருந்த கவ்ரீலாவிடம் சொன்னான்:

“இந்தா தம்பி, உன் அதிர்ஷ்டம்! இந்தப் பேய் மக்கள் நம்மை விரட்டிக்கொண்டு வந்திருந்தால் நீ தொலைந்திருப்பாய். புரிந்ததா? நான் அக்கணமே உன்னை மீன்களுக்கு இரையாக்கி இருப்பேன்!..”

செல்காஷ் இப்போது அமைதியாகவும் நல்லியல்புடனும் கூடப் பேசவே, அச்சத்தால் இன்னமும் நடுங்கிக் கொண்டிருந்த கவ்ரீலா கெஞ்சினான்:

"கேளு, என்னைப் போக விடு! கிறிஸ்துவின் பெயரால் கேட்டுக்கொள்கிறேன், விட்டுவிடு! எங் கேயாவது இறக்கி விடு! ஐயையோ!.. நான் ஒரே அடியாக ஒழிந்தேன்!.. ஊம், கடவுளை நினைத் துக்கொள், விட்டுவிடு! நான் உனக்கு எதற்கு? என்னால் இது முடியாது!.. இந்த மாதிரி விவ காரங்களில் நான் பங்கு கொண்டதில்லை... இதுதான் முதல் தடவை... ஆண்டவனே! நான் நசித்துப் போவேனே! எப்படி அண்ணே நீ என்னை மாட்டி விட்டாய்? ஊம்? உனக்குப் பாவம்!.. ஆன்மாவை அல்லவா பாழாக்குகி றாய்!.. நல்ல விவகாரந்தான் போ!.."

"என்ன விவகாரம்?" என்று கடுமையாகக் கேட்டான் செல்காஷ். "ஊம்? சொல்லு, என்ன விவகாரம்?"

இளைஞனின் திகில் அவனுக்குக் களிப் பூட்டியது. கவ்ரீலாவின் அச்சத்தையும் தான், செல்காஷ், எவ்வளவு பயங்கரமானவன் என் பதையும் அவன் இன்பமாக ரசித்தான்.

"மோசமான விவகாரம், அண்ணே... ஆண்டவனுக்காக என்னை விட்டுவிடு!.. நான் உனக்கு எதற்கு?.. ஊம், அருமை அண்ணே..."

"சும்மா இரு! நீ தேவையாய் இல்லாவிட் டால் உன்னை அமர்த்தி இருக்க மாட்டேன், புரிந்ததா? ஆகவே பேசாதிரு!"

"கடவுளே!" என்று பெருமூச்செறிந்தான் கவ்ரீலா.

"இந்தா, முறைக்கிறாயா என்னிடம்!" என்று அவனை இடைமறித்தான் செல்காஷ்.

ஆனால் கவ்ரீலாவால் மேற்கொண்டு அடக்க

முடியவில்லை. அவன் தணிவாகத் தேம்பியவாறு அழுதான், மூக்கைச் சிந்தினான், இருப்பு கொள்ளாமல் தவித்தான், ஆனாலும் வலிவாக, புகலின்றித் துடுப்பு தள்ளினான். படகு அம்பு போலப் பாய்ந்தது. மறுபடியும் வழியில் நின்றன கப்பல்களின் இருண்ட உடல்கள். படகு அவற்றின் இடையே இருந்த குறுகிய நீர் வழிகளில் பம்பரமாய்ச் சுழன்றவாறு அவற்றில் மறைந்து விட்டது.

''இந்தா, டேய்! உயிர் பிழைக்க விரும்பினால் யார் என்ன கேட்டாலும் வாயே திறக்காதே. புரிந்ததா?''

''புரிந்தது!..'' என்று இந்தக் கண்டிப்பான கட்டளைக்கு விடையளித்துப் பெருமூச்சு விட்டான் கவ்ரீலா. பின்பு ''அட என் பாழும் விதியே!..'' என்று கைப்புடன் கூறினான்.

''தொனதொனக்காதே!'' என்று கட்டளையிடும் தோரணையில் கிசுகிசுத்தான் செல்காஷ்.

இந்தக் கிசுகிசுப்பைக் கேட்ட கவ்ரீலா எதையும் புரிந்து கொள்ளும் திறனை இழந்து விபத்து நேரப் போகிறது என்ற கடும் முன்னுணர்வால் ஆட்கொள்ளப்பட்டுக் குற்றுயிராகி விட்டான். துடுப்புகளை நீரில் ஆழ்த்துவதும் பின்னே தள்ளுவதும் வெளியே எடுப்பதும் மறுபடி போடுவதுமாக எந்திர கதியில் இயங்கியவாறு தன் மரவுரிச் சோடுகளை வைத்த கண் வாங்காமல் பார்த்துக் கொண்டிருந்தான்.

அலைகளின் உறக்கத்தில் ஆழ்ந்த ஓசை கடு கடுப்புடன் ஒலித்தது, அச்சம் ஊட்டியது. இதோ

கப்பல் துறை... அதன் கருங்கல் சுவருக்கு மறு புறம் ஆட்களின் குரல்களும் நீரின் சளப்பொலி யும் பாட்டும் மெல்லிய சீழ்க்கைகளும் கேட்டன.

''நிறுத்து!'' என்று இசுகிசுத்தான் செல் காஷ். ''துடுப்புகளை வைத்து விட்டுக் கை களைச் சுவற்றில் ஊன்றிக்கொள்! சந்தடி இல் லாமல், சாத்தான்!..''

வழுக்குக் கல்லைப் பற்றியவாறு படகைச் சுவரோரமாகக் கொண்டு வந்தான் கவ்ரீலா. படகு கல்மேல் படர்ந்த பாசி மீது வழுகியபடி உராய்வு ஓசை இன்றி நகர்ந்தது.

''நில்லு!.. துடுப்புகளைக் கொடு! என்னிடம் கொடு! உன் பாஸ்போர்ட்டு எங்கே? பயணப்பை யில் இருக்கிறதா? இப்படிக் கொடு பயணப்பை யை! ஊம், சீக்கிரம்! இந்த ஏற்பாடு, அருமைத் தம்பி, நீ ஓடி விடாமல் இருப்பதற்காக... இப் போது ஓட மாட்டாய். துடுப்புகள் இல்லாமல் நீ எப்படியாவது கம்பி நீட்டி இருக்க முடியும். பாஸ்போர்ட்டு இல்லாமல் நழுவப் பயப்படுவாய். காத்திரு! அப்புறம், சொல்லிவிட்டேன், நீ மட் டும் குரலைக் கிளப்பினாயோ, கடல் அடியிலே சமாதி வைத்து விடுவேன், ஜாக்கிரதை!..''

பின்பு செல்காஷ் கைகளால் எதையோ பற் றிக்கொண்டு காற்றில் எழும்பிச் சுவர் மேல் மறைந்து விட்டான்.

கவ்ரீலா திடுக்கிட்டான்... இது அவ்வளவு விரைவாக நிகழ்ந்து விட்டது. ஒடிசலான உடம்பு உள்ள இந்த மீசைக்காரத் திருடன்முன் தான் உணர்ந்த அவலச் சுமையும் திகிலும் தன்னிட மிருந்து அகன்று நகர்வதை அவன் உணர்ந்



9—937

தான்... இப்போது தப்பி ஓடினால் நல்லது!.. அவன் தாராளமாகப் பெருமூச்சு விட்டுச் சுற்றி லும் பார்வை செலுத்தினான். இடப்புறம் பாய் மரம் இல்லாத கப்பலின் கரிய வரையுரு தென் பட்டது. மிகப் பெரிய சவப்பெட்டி போன்ற அது ஆளின்றி வெறுமையாய் இருந்தது... அதன் விலாவில் அலைகளின் ஒவ்வோர் அடியும் துய ரப் பெருமூச்சு போன்ற ஆழ்ந்த அதிர்வுள்ள எதிரொலியை எழுப்பியது. வலப்புறம் அலை தாங்கியின் ஈரக் கற்சுவர் உணர்வற்ற கனத்த பாம்பு போலத் தண்ணீருக்கு மேலே நெடுகச் சென்றிருந்தது. பின்புறமும் கப்பல்களின் கரிய உடல்கள் தென்பட்டன, முன்னே, சுவற்றுக்கும் இந்தச் சவப்பெட்டிக்கும் நடுவில் இருந்த திறப் பில் கடலைப் பார்க்க முடிந்தது. அது மௌன மாகவும் வெறுமையாகவும் இருந்தது. அதற்கு உயரே கரு முகில்கள் மிதந்தன. இருளிலிருந்து பயங்கரத்தைப் பரப்பிய பிரமாண்டமான, கனத்த முகில்கள் தங்கள் கனத்தால் மனி தனை நசுக்கத் தயாராய் மெதுவாக ஊர்ந்தன. எல்லாமே குளிரும் கருமையும் தீமையும் நிறைந்திருந்தன. கவ்ரீலாவுக்கு அச்சம் உண்டா யிற்று. செல்காஷ் ஏற்படுத்திய திகிலைக் காட் டிலும் மோசமாய் இருந்தது இந்த அச்சம். இது கவ்ரீலாவின் நெஞ்சை இறுகப் பிடித்து நசுக்கிப் பேடிமையுள்ள கட்டியாக்கிப் படகின் பெஞ்சுடன் பிணித்து விட்டது...

சுற்றிலும் எல்லாம் மௌனமாய் இருந் தன. கடலின் பெருமூச்சுகள் தவிர வேறு ஒலி களே இல்லை. முகில்கள் முன் போலவே மெது

வாகவும் சலிப்புடனும் வானத்தில் ஊர்ந்தன. ஆனால் அவை மேன்மேலும் அதிகமாகக் கடலிலிருந்து எழுந்தன. வானத்தை நோக்கி அதுவும் கடல் தான் என்று எண்ண முடிந்தது. ஆனால் இது உறக்கத்தில் ஆழ்ந்து அமைதியாகவும் மழமழப்பாகவும் இருந்த வேறொரு கடலுக்கு மேலே கவிழ்த்த கொந்தளிப்புள்ள கடல் என்று தோன்றியது. சுருட்டை நரை முடிகளுடன் கீழே தரை மீது பாய்ந்த அலைகள் போலவும் எங்கிருந்து காற்றினால் இந்த அலைகள் பறிக்கப்பட்டனவோ அந்த அகாதங்கள் போலவும், வெறி, சீற்றம் என்னும் பசிய நுரையால் இன்னும் மூடப்படாத, அப்போது தான் எழுந்த மேடு போலவும் காட்சி அளித்தன மேகங்கள்.

ஏக்கம் நிறைந்த இந்த நிசப்தமும் அழகும் தன்னை நசுக்குவது போல உணர்ந்தான் கவ்ரீலா. எசமானனை விரைவில் காணத் தான் விரும்புவதாக அவனுக்குத் தோன்றியது. எசமானன் அங்கேயே தங்கி விட்டாலோ?.. நேரம் மெதுவாக ஊர்ந்தது. வானில் முகில்கள் ஊர்ந்ததைக் காட்டிலும் மெதுவாக... நேரம் செல்லச் செல்ல நிசப்தம் மேலும் கொடியதாயிற்று... கடைசியில் அலை தாங்கிச் சுவரின் மறு புறம் சளப்போசையும் சரசரப்பும் கேட்டன. கிசுகிசுப்பு போன்ற ஒன்றும் காதில் பட்டது. கவ்ரீலாவுக்குத் தன் உயிர் இதோ போய்விடும் என்று தோன்றியது...

“டேய்! தூங்குகிறாயா? பிடி!.. ஜாக்கிரதையாக!..” என்றது செல்காஷின் கம்மிய குரல்.

கன சதுர வடிவான கனத்த பொருள் ஒன்று சுவற்றிலிருந்து இறக்கப்பட்டது. கவ்ரீலா அதை வாங்கிப் படகில் வைத்தான். அதே மாதிரி இன்னும் ஒன்று இறக்கப்பட்டது. பின்பு செல்காஷின் நெடிய உருவம் சுவற்றின் குறுக்காக நீண்டது. துடுப்புகள் எங்கிருந்தோ வந்தன. கவ்ரீலாவின் பயணப்பை அவனுடைய கால்களின் அருகே விழுந்தது. செல்காஷ் மூச்சு இரைக்கப் படகின் பின் பகுதியில் உட்கார்ந்தான்.

கவ்ரீலா அவனைப் பார்த்து மகிழ்ச்சியுடனும் கூச்சத்துடனும் முறுவலித்தான்.

''களைத்துப் போனாயோ?'' என்று கேட்டான்.

''களைத்துத்தான் போனேன், கன்றுக்குட்டீ! எங்கே, துடியாகத் துடுப்பு தள்ளு, பார்ப்போம்! முடிந்த வரை வேகமாகப் படகைச் செலுத்து!.. நன்றாக வேலை செய்திருக்கிறாய், தம்பி! பாதிக் காரியம் முடிந்து விட்டது. இப்போது பேய்களின் கண்களில் படாமல் வெளியேறிவிட வேண்டியதுதான் பாக்கி. அப்புறம் பணத்தை வாங்கிக்கொண்டு காதலி மாஷாவிடம் போய்ச்சேர். காதலி இருக்கிறாள் அல்லவா உனக்கு? ஏய், பச்சைப் பிள்ளை?''

''இல்-லை!'' கவ்ரீலா சக்தி முழுவதையும் ஈடுபடுத்தி வலித்தான். அவனுடைய மார்பு உலைத் துருத்தி போலவும் கைகள் எஃகு விசைவில்கள் போலவும் இயங்கின. படகுக்கு அடியில் தண்ணீர் இரைந்தது, படகின் பின் இளநீலப் பட்டை அகலம் ஆயிற்று. கவ்ரீலாவின் உடலெங்

கும் வியர்வை பெருகிற்று, ஆனாலும் அவன் சக்தி அனைத்தையும் செலுத்தித் தொடர்ந்து துடுப்பு தள்ளினான். அந்த இரவில் இரண்டு தடவை அவ்வளவு பெருத்த திகிலை அநுப வித்த பின் மூன்றாவது தடவையும் அதை அநு பவிக்க இப்போது அவன் அஞ்சினான். இந்தப் பாழும் வேலையைச் சட்டென முடித்து விட்டுத் தரையில் இறங்கி, இந்த ஆள் உண்மையாகவே தன்னைக் கொலை செய்யவோ சிறைக்கு இட்டுச் செல்லவோ முற்படுவதற்குள் இவனிடமிருந்து தப்பி ஓடி விட வேண்டும் என்பது ஒன்றுதான் அவன் விரும்பியது எல்லாம். செல்காஷிடம் எந்த விஷயம் குறித்தும் பேசுவதில்லை, அவன் சொல்லை மறுப்பதில்லை, அவன் இட்ட ஆணைகளை எல்லாம் நிறைவேற்றுவது, அவ னிடமிருந்து நல்லபடிக் கட்டவிழ்த்துக்கொள்ள முடிந்தால் நாளையே அற்புத கர்த்தர் நிக் கலாய்க்குப் பிரார்த்தனை செய்விப்பது என்று கவ்ரீலா முடிவு செய்து கொண்டான். ஆர்வம் பொங்கும் பிரார்த்தனை அவன் நெஞ்சி லிருந்து வெடித்துக் கிளம்பத் தயாராய் இருந் தது. ஆயினும் அவன் அடக்கிக்கொண்டான், நீராவி எந்திரம் போலக் குப்குப்பென்று மூச்சு விட்டான், ஆனால் செல்காஷைக் கீழ் நோக் காகப் பார்த்தவாறு பேசாதிருந்தான்.

உலர்ந்து நீண்டு முன் சாய்ந்திருந்த செல் காஷோ, எங்கோ பறந்து செல்லத் தயாராய் இருந்த பறவையை நிகர்த்திருந்தான். வல் லூறு விழிகளால் படகுக்கு முன்னே இருட்டில் நோக்கினான். வேட்டைப் பருந்தினது போன்ற

வளைந்த மூக்கை விடைத்தவாறு ஒரு கையால் சுக்கான் பிடியை இறுகப் பிடித்துக்கொண்டு மறு கையால் மீசையை முறுக்கினான். அவனுடைய மெல்லிய உதடுகளை நெளியச் செய்த புன்னகையால் அவனது மீசை துடித்துக்கொண்டிருந்தது. தனது வெற்றி மீதும் தன்மீதும் தன்னால் ஒரேயடியாகத் திகிலூட்டப்பட்டுத் தன் அடிமையாக மாறி இருந்த இந்த இளைஞன் மேலும் அவன் திருப்தி அடைந்திருந்தான். கவ்ரீலா எவ்வளவு பாடுபட்டு உழைத்துக் கொண்டிருந்தான் என்பதை அவன் கண்டான். அவனுக்கு இரக்கமாய் இருந்தது. இளைஞனை உற்சாகப்படுத்த விருப்பம் உண்டாயிற்று.

''டேய்!'' என்று குறு நகையுடன் தணிந்த குரலில் பேசத் தொடங்கினான். ''என்ன, ரொம்ப ரொம்பப் பயந்து போய் விட்டாயா?''

''ப-பரவாயில்லை!..'' என்று பெருமூச்செறிந்து கமறினான் கவ்ரீலா.

''ஆனால் இப்போது துடுப்புகளை ரொம்பவும் வீசிப் போட வேண்டியதில்லை நீ. இனி போதும். இன்னும் ஒரே ஓர் இடத்தைக் கடந்து விட்டால் நல்லது... நீ இளைப்பாறு கொஞ்சம்...''

கவ்ரீலா கீழ்ப்படிவுடன் வேலையை நிறுத்தி விட்டுச் சட்டைக் கையால் முகத்து வேர்வையைத் துடைத்துக்கொண்டு மீண்டும் துடுப்புகளை நீரில் விட்டான்.

''ஊம், ஓசைப்படாமல் துடுப்பு தள்ளு. தண்ணீர் சளசளக்கக் கூடாது. வாயில்களை மட்டுந்தான் கடக்க வேண்டும். ஓசைப்படாமல், சத்தம்

இல்லாமல்... இல்லாவிட்டால், தம்பி, இங்கே ஆட்கள் ஆபத்தானவர்கள்... துப்பாக்கியால் சுடக் கூடும் அவர்கள். மண்டையில் அவர்கள் கொடுக்கிற அடியில் உனக்கு ஐயோ என்று சொல்லக்கூட நேரம் இருக்காது.''

இப்போது படகு அநேகமாக ஓசை இல்லாமல் தண்ணீரில் வழுக்கிச் சென்றது. துடுப்புகளிலிருந்து மட்டும் இளநீல நீர்த் துளிகள் சொட்டின. கடலில் ஆழ்ந்தபோது அவை ஆழ்ந்த இடத்தில் சற்று நேரத்துக்கு இளநீலப் புள்ளியும் தென்பட்டது. இரவு மேன்மேலும் இருள் அடர்ந்து சந்தடி அற்றதாயிற்று. வானம் இப்போது கொந்தளிக்கும் கடல் போலத் தோற்றம் அளிக்கவில்லை. மேகங்கள் அதில் எங்கும் பரவி ஒரு சீரான கனத்த திரையால் அதை மூடிவிட்டன. இந்தத் திரை நீருக்கு மேலே தாழத் தொங்கி அசையாதிருந்தது. கடலோ முன்னிலும் அதிக அமைதியும் கருமையும் கொண்டு திகழ்ந்தது. வெது வெதுப்பான உவர் மணம் முன்னிலும் கடுமையாக அதிலிருந்து வீசியது. முன்பு தோற்றம் அளித்தது போல அவ்வளவு அகன்றதாக அது காணப்படவில்லை.

''அட, இப்போது மழை பெய்தால் நன்றாய் இருக்கும்!'' என்று கிசுகிசுத்தான் செல்காஷ். ''அப்போது நாம் திரை மறைவில் போலக் கடந்து போய்விடலாம்.''

படகின் இடப் புறமும் வலப் புறமும் கரிய நீரிலிருந்து எழுந்தன எவையோ கட்டடங்கள். உண்மையில் இவை சரக்குப் படகுகள். அசை

வற்றவை, ஏக்கம் ததும்புபவை, கரியவையுங் கூட. ஒன்றில் விளக்கு அசைந்தது. லாந்தருடன் எவனோ நடந்தான். கடல் இவற்றைப் பக்கத்தில் வருடி விண்ணப்பிப்பது போன்று கம்மலாக ஒலித்தது. அவை அதிரும் வரண்ட எதிரொலியால் அதற்குப் பதில் அளித்தன. ஏதோ ஒரு விஷயத்தில் அதற்கு விட்டுக்கொடுக்க விரும்பாமல் அவை சச்சரவிடுவது போல் இருந்தது.

"எல்லைக் காவலர்கள்!.." என்று வாய்க்குள் கிசுகிசுத்தான் செல்காஷ்.

சந்தடி செய்யாமல் துடுப்பு வலிக்கும்படி அவன் சொன்ன கணம் முதல் விபத்தை எதிர்பார்க்கும் கடுமையான இறுக்கம் கவ்ரீலாவை மீண்டும் ஆட்கொண்டது. உடல் முழுவதையும் முன்னே, இருளில், சாய்த்தான். தான் வளர்வது போல அவனுக்குத் தோன்றியது. எலும்புகளும் தசைநார்களும் ஊமை வலிவுடன் அவனுக்குள் விரைப்பாக நீண்டன. ஒரே எண்ணத்தால் நிறைந்திருந்த தலை வலித்தது. முதுகுத் தோல் துடித்தது. சிறிய, கூர்மையான, குளிர்ந்த ஊசிகள் கால்களில் துளைத்துப் புகுந்தன. இருட்டில் உறுத்துப்பார்த்துக் கொண்டிருந்ததால் கண்கள் நொந்தன. அந்த இருட்டிலிருந்து ஒன்று இதோ எழுந்து "நில்லுங்கள், திருடர்களா!.." என்று அதட்டப் போகிறது என அவன் எதிர்பார்த்துக் கொண்டிருந்தான்.

இப்போது செல்காஷ் "எல்லைக் காவலர்கள்!" என்று கிசுகிசுத்ததும் கவ்ரீலா திடுக்கிட்

டான். கூரிய, பொசுக்கும் எண்ணம் அவனுக்குள் ஊடுருவிச் சென்றது, விறைப்பாக நீட்டப் பட்டிருந்த நரம்புகளைத் தாக்கியது. கூச்ச லிடவும் ஆட்களைத் தன்னிடம் உதவிக்கு வரும் படி அழைக்கவும் அவன் விரும்பினான்... வாயை ஏற்கெனவே திறந்து விட்டான், பெஞ்சியில் பாதி நின்று மார்பைப் பின்னே சாய்த்து அதில் நிறையக் காற்றை இழுத்து நிரப்பிக் கொண்டு வாயைத் திறந்தான், ஆனால் திடீரென்று, சாட்டையால் அடித்தது போல பயத்தினால் தாக்குண்டு கண்களை மூடிக் கொண்டு பெஞ்சியிலிருந்து விழுந்தான்.

படகுக்கு முன்னே, தொலைவில் தொடுவானத்தில் கடலின் கரிய நீரிலிருந்து எழுந்தது பிரமாண்டமான தழல் நீல வாள். அது எழுந்து இரவின் இருட்டைக் கூறாக்கி, கூர் முனையால் வானத்தில் மேகங்களைத் துழாவி, அகன்ற நீலப் பட்டையாகக் கடலின் மார்பில் கிடந்தது. பிறகு அதுவரை கண்ணுக்குப் புலப் படாதிருந்த கப்பல்கள் அதன் ஒளிப் பட்டையில் இருளிலிருந்து வெளிப்பட்டன. அவை கரியவை, ஓசை அற்றவை, இரவின் அடர் மூடுபனி போர்த்தவை. புயலின் பெரு விறலால் கடலின் அடித் தளத்துக்கு ஈர்க்கப்பட்டு நெடுநேரம் அங்கே இருந்துவிட்டு, கடலில் பிறந்த நெருப்பு வாளின் ஆணைப்படி இப்போது மேலே வந்திருப்பவை போலத் தோற்றம் அளித்தன அவை. வானையும் நீருக்கு மேலே உள்ள எல்லாவற்றையும் காணும் பொருட்டு அவை மேலே வந்திருப்பதாகத் தோன்றியது... அவற்றின் கயிற்று

வடங்கள் பாய்மரங்களைத் தழுவியிருந்தன. இந்தக் கரிய அரக்கர்களை வலைகளில் சிக்க வைத்து அவற்றோடு கூடவே அடித் தரையி லிருந்து மேலே வந்துள்ள ஒட்டு நீர்ப் பூண்டு கள் போல அவை தோற்றம் அளித்தன. பயங்கரமான அந்த இளநீல வாள் கடலின் ஆழத்திலிருந்து மீண்டும் மேல் நோக்கி எழுந் தது. ஒளி வீசி எழுந்து மீண்டும் இரவைக் கூறாக்கி வேறு திசையில் மறுபடி கிடந்தது. இப்போது அது கிடந்த இடத்திலும் அது வரும் வரை பார்வைக்குப் புலனாகாதிருந்த கப்பல் களின் உடல்கள் இன்னொரு முறை காட்சி தந் தன..

செல்காஷின் படகு நின்று விளங்காதது போல நீரில் ஊசலாடியது. கவ்ரீலா கைகளால் முகத்தைப் பொத்தியவாறு படகின் அடியில் கிடந்தான். செல்காஷ் அவனைக் காலால் இடித்து வெறியுடன், ஆனால் தணிவாகக் கிசு கிசுத்தான்:

''மடையா, இது சுங்கத் துறையின் வேவுக் கப்பல்... இது மின்சார டார்ச் விளக்கு!.. எழுந் திரடா உலக்கைக் கொழுந்து! இதோ நம் மேல் வெளிச்சத்தை வீசுவார்களே!.. பாழாக்கி விடு வாயடா, சாத்தான், உன்னையும் என்னையும்! ஊம்!..''

முடிவில், செல்காஷ் குதிகாலால் கொடுத்த அடிகளில் ஒன்று கவ்ரீலாவின் முதுகில் மற்ற வற்றைவிடப் பலமாகத் தாக்கவே அவன் துள்ளி எழுந்து, கண்களைத் திறக்க இன்னும் அஞ்

சியவனாக, துடுப்புகளைத் தொட்டுத் தடவிப் பிடித்துக்கொண்டு படகைச் செலுத்தினான்.

''ஓசைப் படுத்தாதே! கொன்று விடுவேன், தெரியுமா? ஊம், சத்தமில்லாமல்!.. சரியான அடி மடையன், உன்னைச் சாத்தான் வாரிக் கொண்டு போக!.. எதைக் கண்டு மிரண்டு விட்டாய்? ஊம்? உம்மணாமூஞ்சி!.. வெறும் மின் விளக்கு, அவ்வளவேதான். துடுப்புகளை ஓசைப் படுத்தாதே!.. கேடு கெட்ட பேய்ப் பயலே!.. கள்ளச் சரக்கைக் கண்காணிக்கிறார்கள். நம்மைத் தொட மாட்டார்கள். வெகு தூரம் அப்பால் போய் விட்டார்கள். பயப்படாதே, தொட மாட்டார்கள். இப்போது நாம்...'' செல்காஷ் வெற்றிப் பெருமிதத்துடன் சுற்றிலும் பார்வை செலுத்தினான். ''சந்தேகமில்லாமல் வெளியேறி விட்டோம்!.. அப்-ப்பா! ஊம், உனக்குச் சந்தோஷந்தானா, கவைக்கு உதவாத உலக்கைத் தடி!..''

கவ்ரீலா பேசாமல் துடுப்பு வலித்தான். அவனுக்கு மூச்சு இரைத்தது. நெருப்பு வாள் இன்னும் எழுவதும் தணிவதுமாக இருந்த திசையை ஓரக் கண்ணால் பார்த்தான். இது வெறும் மின் விளக்கு என்று செல்காஷ் சொன்னதை அவனால் நம்பவே முடியவில்லை. இருளைக் கூறிட்டுக் கடலை வெள்ளி மினுமினுப்புடன் பளிச்சிடச் செய்த தழலற்ற இளநீல ஒளியில் விளக்க முடியாத ஒரு மர்மம் புதைந்திருந்தது. அதன் பாதிப்பால் கவ்ரீலா எக்கத்திற்கும் திகிலுக்கும் மீண்டும் ஆளானான். அவனது உணர்வு மரத்துப் போயிற்று. எந்திரம் போலத் துடுப்பு வலித்

தான். மேலே இருந்து அடி விழுவதை எதிர் பார்ப்பவன் போல மேன்மேலும் கூனிக் குறுகி னான். அவன் உள்ளத்தில் இப்போது எதுவும், எந்த விருப்பமும், இருக்கவில்லை. அவன் வெற்றாக, மெல்லுணர்ச்சிகள் அற்றவனாக இருந்தான். அந்த இரவில் நேர்ந்த உளக் கொந்தளிப்புகள் அவனிடமிருந்து மனிதத் தன்மை அனைத்தையும் முடிவில் அரித்துப் போக்கி விட்டன.

செல்காஷ் வெற்றிக் களிப்பில் திளைத் தான். அதிர்ச்சிகளுக்குப் பழகிய அவனுடைய நரம்புகள் அதற்குள் அமைதி அடைந்து விட் டன. இன்பக் கிளர்ச்சியால் அவனுடைய மீசை துடித்தது, கண்கள் ஒளி சுடர்ந்தன. அவனுக்கு உற்சாகம் பொங்கியது. பற்களின் ஊடாகச் சீழ்க் கை அடித்தான். கடலின் ஈரக் காற்றை ஆழ்ந்து மூச்சிழுத்தான். சுற்று முற்றும் பார்வை செலுத்தினான். கவ்ரீலா மீது விழிகள் பதிந்த தும் நல்லியல்புடன் புன்னகை செய்தான்.

காற்று வீசத் தொடங்கிக் கடலை உசுப்பி விட்டது. அதன் நீர்ப் பரப்பில் சிற்றலைகள் மிக அடிக்கடி எழுந்தன. மேகங்கள் மெல்லியவை யும் ஒளி ஊடுருவக் கூடியவையும் போலத் தோற்றம் அளித்தன. ஆனால் வானம் முழுவ தையும் அவை போர்த்திருந்தன. இன்னும் லேசாகவே அடித்துக் கொண்டிருந்த காற்று கடலுக்கு மேல் தங்கு தடை இன்றி வீசிக் கொண்டிருந்தது என்றாலும் மேகங்கள் அசை யாதிருந்தன. கவர்ச்சி அற்ற, சலிப்பூட்டும்

ஏதோ சிந்தனையில் ஆழ்ந்திருப்பவை போல அவை காணப்பட்டன.

''இந்தா தம்பி, நீ சுதாரித்துக்கொள், நேர மாகி விட்டது! அட நீதான் எப்படி ஆகி விட்டாய்—உன் தோலிலிருந்து உயிரை எல்லாம் நசுக்கி வெளியேற்றி விட்டது போலவும் எலும்பு மூட்டை மட்டுமே மிஞ்சி இருப்பது போலவும்! எல்லாம் முடிந்தது இப்போது. ஏய்!..''

பேசியவன் செல்காஷ் என்றாலும் மனிதக் குரலைக் கேட்க கவ்ரீலாவுக்கு இன்பமாய் இருந்தது.

''கேட்டுக் கொண்டிருக்கிறேன்,'' என்று தணிந்த குரலில் சொன்னான்.

''அப்படி வா வழிக்கு, தொளதொளத் தான்... இந்தா, நீ சுக்கானைப் பிடி, நான் துடுப்பு தள்ளுகிறேன். நீ களைத்துப் போனாய்!''

கவ்ரீலா எந்திர கதியில் இடத்தை மாற்றிக் கொண்டான். அவனோடு இடம் மாற்றிக் கொள் கையில் அவனுடைய முகத்தைப் பார்த்து, அவன் கால்கள் நடுங்கியதையும் அவன் தள்ளாடியதையும் கவனித்த போது செல்காஷுக்கு அந்த இளைஞன் மேல் முன்னிலும் அதிக இரக்கம் உண்டாயிற்று. பையனுடைய தோளைத் தட்டிக்கொடுத்தான்.

''ஊம், ஊம், பயப்படாதே! நன்றாக வேலை செய்திருக்கிறாய். நான் உனக்குத் தாராளமாகப் பரிசு தருகிறேன். கால் நூறு ரூபிள் நோட்டு வாங்க இஷ்டம் தானே! ஊம்?''

“எனக்கு ஒன்றும் வேண்டாம். கரை சேர்ந்தால் போதும்...”

செல்காஷ் கையை உதறி, துப்பி விட்டு நீண்ட கைகளால் துடுப்புகளை வெகுதூரம் பின்னால் போட்டவாறு படகைச் செலுத்துவதில் முனைந்தான்.

கடல் விழித்துக் கொண்டு விட்டது. சிறு அலைகளைத் தோற்றுவிப்பதும் நுரைக் குஞ்சத்தால் அவற்றை அழகுபடுத்துவதும் ஒன்றோடு ஒன்றை மோத விடுவதும் மெல்லிய தூவானமாகச் சிதற அடிப்பதுமாக அது அவற்றுடன் விளையாடியது. நுரை கரைகையில் சீறிப் பெருமூச்சு விட்டது—சுற்றிலும் இருந்தவை யாவும் இசையொலியாலும் சளப்போசையாலும் நிறைந்தன. இருள் உயிர் பெற்று விட்டது போல் இருந்தது.

“ஆமாம், எனக்கு ஒன்று சொல்லு,” என்று பேசத் தொடங்கினான் செல்காஷ். “நீ கிராமத்துக்குப் போவாய், கலியாணம் செய்து கொள்வாய், நிலத்தைத் தோண்டவும் தானியம் விதைக்கவும் துவங்குவாய், பெண்டாட்டி பிள்ளைகளைப் பெறுவாள், உணவு பற்றாது; ஊம், நீ வாழ்நாள் பூராவும் உடல் தேய உழைத்து... நல்லது, அப்புறம்? இதில் பிரமாத சுகம் என்ன இருக்கிறது?”

“சுகமாவது ஒன்றாவது!” என்று கூச்சத்துடன் நடுங்கியவாறு பதில் அளித்தான் கவ்ரீலா.

காற்று சில இடங்களில் மேகங்களை ஊடறுத்தது. பிளவுகளிலிருந்து வானத்தின் இள

நீலத் துண்டுகள் கடலை நோக்கின. ஓரிரு விண் மீன்கள் அவற்றில் இருந்தன. அலையடித்த கடலால் பிரதிபலிக்கப்பட்ட இந்த விண்மீன்கள் அலைகளில் துள்ளியவாறு மறைவதும் மறுபடி பளிச்சிடுவதுமாக இருந்தன.

''வலப்புறம் செலுத்து!'' என்றான் செல் காஷ். ''இதோ வந்து விடுவோம். ம்-ம்—ஆமாம்!.. வேலையை முடித்தாயிற்று. பிர மாதமான வேலை! பார்த்தாயா?.. ஒரே ராத் திரி, அரை ஆயிரம் சம்பாதித்து விட்டேன்!''

''அரை ஆயிரமா?!'' என்று நம்பிக்கை இன்றி இழுத்தான் கவ்ரீலா. ஆனால் மறு கண மே பயந்து போய், படகிலிருந்த சிப்பங்களைக் காலால் இடித்து, ''ஆமாம், இது என்ன சா மான்?'' என்று சட்டெனக் கேட்டான்.

''ரொம்ப விலையுள்ள சாமான். சரியான விலைக்குக் கொடுப்பதானால் ஆயிரத்துக்கு மேல் போகும். ஆனால் நான் அதிக விலை கேட்க மாட்டேன்... எப்படி நம் சாமர்த்தியம்?''

''அப்-ப்-படியா-ஆ?'' என்று கேள்விக் குர லில் இழுத்தான் கவ்ரீலா. ''எனக்கு மட்டும் இந்த மாதிரிப் பணம் கிடைத்தால்!'' என்று பெருமூச் செறிந்தான். தன் கிராமத்தையும் ஏழைப் பண் ணையையும் தாயையும் நினைத்துக்கொண் டான். இப்போது தொலைவில் இருப்பது போலத் தோன்றியதும் உண்மையில் சொந்தம் உள் ளதுமான எல்லாம் அவன் நினைவுக்கு வந் தன. இவற்றின் பொருட்டே அவன் கூலி வே லை செய்யக் கிளம்பினான், இவற்றுக்காகவே இந்த இரவில் இப்படித் தொல்லைப்பட்டான்.

தன் சிறு கிராமத்தைப் பற்றிய நினைவுகள் அவன் மனத்தில் அலை அலையாக எழுந்தன. செங்குத்தான மலையில், ஓடையை நோக்கிச் சரிந்து சென்றிருந்தது கிராமம். ஓடையோ, பல வகை மரங்கள் அடர்ந்த சோலையில் மறைந் திருந்தது... ''அட, எவ்வளவு நன்றாய் இருக் கும்!..'' என்று துயரப் பெருமூச்செறிந்தான்.

''ம்-ஆமாம்!.. நீ உடனே இரயிலேறி ஊர் போய்ச் சேர்ந்திருப்பாய் என்று நினைக் கிறேன்... ஊரில் பெண்கள் உன் மேல், ஆகா, எப்படி மையல் கொண்டிருப்பார்கள்!.. எவளை வேண்டுமானாலும் வீட்டுக்காரியாகப் பொ றுக்கிக்கொள்ளலாம்! சொந்தத்துக்கு ஒரு வீடு கட்டிக்கொள்ளலாம், ஆனால் வீட்டுக்குப் பணம் பற்றாது என்று தோன்றுகிறது...''

''இது சரிதான்... வீட்டுக்குப் பணம் போ தாது. எங்கள் ஊரில் நன்மரம் கிராக்கி ஆயிற் றே.''

''அதனால் என்ன? பழைய வீட்டைப் பழுது பார்க்கலாமே. குதிரை விஷயம் என்ன? இருக் கிறதா?''

''குதிரையா? பெயருக்கு ஒன்று இருக்கிறது, ஆனால் படு கிழம், சனி!''

''அப்படியானால் குதிரை வேண்டும். அரு மையான குதிரை! பசுமாடு... ஆடுகள்... வாத்து கள், கோழிகள்... ஊம்?''

''ஆசையைக் கிளப்பாதே!.. அட, என் ஆண் டவனே! இதெல்லாம் இருந்தால் சுகமாக வாழ் வேனே!''

''ஆ-ஆமாம், தம்பி, வாழ்க்கை மோசமாய்

இராது தான்... இந்த விவகாரம் எனக்கும் புரியும். ஒரு காலத்தில் எனக்கும் சொந்த வீடு வாசல் இருந்தது... தகப்பன் கிராமத்துப் பெரும் பணக்காரர்களில் ஒருத்தனாய் இருந்தான்...''

செல்காஷ் நிதானமாகத் துடுப்பு வலித்தான். குறும்பும் விளையாட்டுமாகப் பக்கங்களில் அடித்த அலைகள்மேல் படகு அசைந்தாடியது. கரிய கடலில் அது அரிதாகவே நகர்ந்தது. கடலோ வர வர அதிகக் குறும்பாக விளையாடியது. நீரில் அசைந்தாடிக் கொண்டும் யோசனையுடன் நாற்புறமும் பார்வை செலுத்தியவாறும் இரண்டு பேரும் கனவில் ஆழ்ந்திருந்தார்கள். கவ்ரீலாவைக் கொஞ்சம் உற்சாகப்படுத்தவும் சமாதானப்படுத்தவும் விரும்பியே செல்காஷ் கிராமத்தைப் பற்றிய எண்ணத்தின்பால் அவனைத் திருப்ப ஆரம்பித்தான். தொடக்கத்தில் அவன் மீசைக்குள் கேலியாக நகைத்தவாறு பேசினான். அப்புறம் கூட்டாளிக்குப் பதில் சொல்கையிலும், தான் வெகு காலத்துக்கு முன்பே ஏமாற்றம் அடைந்து மறந்து விட்டவையும் இப்போதுதான் நினைவுபடுத்திக் கொண்டவையுமான விவசாயி வாழ்க்கையின் இன்பங்களை அவனுக்கு விவரிக்கையிலும் செல்காஷ் படிப்படியாக அவற்றில் ஈர்க்கப்பட்டான். கிராமத்தையும் அதன் விவகாரங்களையும் பற்றி இளைஞனிடம் விசாரிப்பதற்குப் பதிலாக, தான் அறியாமலே அவனுக்குத் தானே எடுத்துச் சொல்லத் தலைப்பட்டான்:

''விவசாயி வாழ்க்கையில் முக்கியமானது, தம்பி, விடுதலை! உனக்கு நீயே எசமானன்.



10—937

உன்னிடம் சொந்த வீடு இருக்கும். அது கால் காசு பெறாததாய் இருக்கலாம், ஆனாலும் உனக்குச் சொந்தமானது. உனக்குச் சொந்த நிலம் உண்டு. மொத்தம் அது ஒரு கைப்பிடி அளவாய் இருக்கலாம், ஆனாலும் அது உன்னுடையது! சொந்த நிலத்தில் நீ அரசன்!.. உனக்குச் சொந்த மதிப்பு உண்டு... உனக்கு மரியாதை காட்டும்படி நீ எவனிடம் வேண்டுமானாலும் கோரலாம்... இல்லையா?'' என்று உற்சாகம் பொங்கக் கூறி முடித்தான் செல்காஷ்.

கவ்ரீலா அவனை ஆவலுடன் நோக்கியவன், தானும் உற்சாகம் அடைந்தான். தான் பேசுவது யாருடன் என்பதை அவன் இந்த உரையாடலின் போது மறந்துவிட்டான். எதிரில் இருப்பவன் தன்னையே போன்ற விவசாயி, பல தலைமுறைகளின் வியர்வையால் நிலத்தோடு நிரந்தரமாக ஒட்டிக் கொண்டிருப்பவன், பிள்ளைப் பருவ நினைவுகளால் அதனோடு தொடர்பு வைத்திருப்பவன், அதனிடமிருந்தும் அது பற்றிய கவலைகளிலிருந்தும் தானே விரும்பி விடுபட்டு வெளியேறியவன், இந்த வெளியேற்றத்துக்கு உரிய தண்டனையை அநுபவித்தவன் என்று எண்ணிக்கொண்டான்.

''நீ சொல்லுவது சரிதான், அண்ணே! அட, எவ்வளவு சரி, தெரியுமா? உன்னையே தான் பார்த்துக் கொள்ளேன்! நிலம் இல்லாமல் இப்போது நீ யார்? நிலம் தாயார் மாதிரி, அண்ணே, நீண்ட காலம் அதை மறக்க முடியாது,'' என்றான்.

செல்காஷ் மனத்தை மாற்றிக் கொண்

டான்... அவனுடைய தன்மானம்—எதற்கும் அஞ்சாத முரட்டுத் துணிச்சல்காரனுக்கு உரிய தன்மானம்—யாராலாவது, சிறப்பாக மதிப் பற்றவன் என்று தான் எண்ணும் ஒருவனால், லேசாகக் கூடப் புண்படுத்தப்படும் போது வழக் கமாக உண்டாகும் காந்தும் எரிச்சல் மார்பில் ஏற்படுவதை அவன் உணர்ந்தான்.

''ஆரம்பித்து விட்டாயா அரைவையை?'' என்று கொடூரமாகக் கூறினான். ''இதை எல் லாம் நான் உண்மையாகவே சொல்வதாக் எண்ணிவிட்டாயாக்கும். அது மட்டும் நடவாது!''

''வேடிக்கையான ஆள்தான்!..'' கவ்ரீலா மறுபடி கூச்சம் கொண்டான். ''நான் என்ன, உன்னைப் பற்றியா சொன்னேன்? உன் மாதிரி ஆட்கள் ஒருவேளை நிறையப் பேர் இருப்பார் கள் என்கிறேன்! ஐயோ, உலகத்தில் தான் துர்ப் பாக்கியசாலிகள் எத்தனை பெயர்!.. அல்லாடு பவர்கள்...''

''நீர் நாய்ப் பயலே! துடுப்பு தள்ளு!'' என்று சுருக்கமாகக் கட்டளையிட்டான் செல் காஷ். ஊற்றெடுத்துப் பொங்கித் தொண்டையில் பீறிட்ட கடுமையான வசவுச் சொற்களை என்ன காரணத்தாலோ அவன் தனக்குள் அடக்கி வைத்துக்கொண்டான்.

அவர்கள் மறுபடி இடங்களை மாற்றிக் கொண்டார்கள். சிப்பங்களின் வழியாகப் படகின் பின்பகுதிக்குத் தாண்டுகையில் கவ்ரீலாவுக்கு ஓர் உதை கொடுத்து அவனை நீரில் விழத் தட்ட வேண்டும் என்ற ஆசை செல்காஷுக்கு உண்டாயிற்று.

சுருக்கமான உரையாடல் நின்றது. ஆனால் இப்போது கவ்ரீலாவின் மௌனம் கூடச் செல் காஷின் பக்கம் கிராம மணத்தைப் பரப்பியது... அவன் படகைச் செலுத்த மறந்து கடந்த காலத் தை நினைவு கூர்ந்தான். படகு அலைகளால் திருப்பப்பட்டுக் கடலில் எங்கோ சென்றது. இந் தப் படகு குறிக்கோளை இழந்து விட்டது என் பதை அலைகள் புரிந்துகொண்டன போலும். அவை அதை மேன்மேலும் உயரே எறிந்து துடுப்பு களுக்கு அடியில் இதமான இளநீல ஒளியில் பளிச்சிட்டவாறு படகுடன் லேசாக விளையா டின. செல்காஷுக்கு முன்போ, கடந்த காலக் காட்சிகள் விரைவாகத் தோன்றி மறைந்தன. அது தொலைதூரக் கடந்த காலம். பதினோ ராண்டு நாடோடி வாழ்க்கையின் பெரும் சுவர் நிகழ் காலத்திலிருந்து அதைப் பிரித்திருந்தது. சிறுவனான தன்னையும் தன் கிராமத்தையும் தாயையும் அவன் கண்டான். தாய் சிவந்த கன் னங்கள் கொண்ட கொழுத்த மாது. அவளது சாம்பல் நிறக் கண்களில் நல்லியல்பு மிளிர்ந் தது. கடுகடுத்த முகமும் செம்பட்டைத் தாடி யும் உள்ள தன் தகப்பனையும் செல்காஷ் கண் டான். மணக் கோலத்தில் தன்னையும் தன் மனைவி அன்பீசாவையும் கண்டான். அவள் நீண்ட பின்னல் உள்ளவள், பருத்தவள், மென் மையானவள், குதூகலப் பேர்வழி. அழகு ததும்பும் காவற் படையினன் வடிவில் தன்னை மறுபடி பார்த்தான் செல்காஷ். நரைத்து உழைப்பினால் கூனிய தகப்பனையும் சுருக்கங் கள் விழுந்து தரையோடு தரையாகத் தொய்ந்து

தளர்ந்து போன தாயையும் பின்னொரு முறை கண்ணுற்றான். தான் படைப் பணியிலிருந்து திரும்பிய போது கிராமம் தன்னை வரவேற்ற காட்சி அவன் முன் விரிந்தது. மீசை வைத்த திடகாத்திரமான படையினனும் லாகவம் உள்ள அழகனுமான தன் மகன் கிரிகோரி யைக் குறித்துத் தகப்பன் கிராமத்தார் முன் எப்படிப் பெருமைப்பட்டான் என்பதைக் கண் டான்... நினைவு ஆக்கம் கெட்டவர்களுக்குச் சவுக்கடி போன்றது. கடந்த காலத்துக் கல் லுக்குக் கூட அது உயிரூட்டி விடுகிறது, ஒரு காலத்தில் பருகிய நஞ்சில் கூடத் தேன் துளி களைக் கலந்து விடுகிறது...

சொந்த ஊர்க் காற்றின் தேற்றும் இனிய பெருக்கு தன் மேல் வீசுவது போலவும் தாயின் கொஞ்சல் மொழிகளையும் உண்மை விவசாயி யான தகப்பனின் ஆழ்ந்த பேச்சையும் அது தன்னுடன் கொண்டுவருவது போலவும் செல் காஷ் உணர்ந்தான். மறந்து போன பல ஒலிக ளும் அப்போது தான் உறை பனியிலிருந்து விடு பட்டு, அப்போது தான் உழப்பட்டு, குளிர்காலப் பயிரின் மரகதப் பட்டால் அப்போது தான் போர்த்தப்பட்ட அன்னை நிலத்தின் பல நறு மணங்களும் இந்தக் காற்றில் மிதந்து வந்த தை அவன் உணர்ந்தான்... தன் நாளங்களில் பெருகிய குருதி எந்த வாழ்க்கை முறையில் உற்பத்தி ஆயிற்றோ அதிலிருந்து பறித்து என் றென்றைக்கும் வெளியே எறியப்பட்டுத் தான் தனியன் ஆகிவிட்டதாக அவனுக்குத் தோன்றி யது.

‘‘ஏய், நாம் எங்கே போகிறோம்?’’ என்று கவ்ரீலா திடீரென வினவினான்.

செல்காஷ் திடுக்கிட்டு வேட்டை விலங்கின் கலவரப் பார்வையுடன் சுற்று முற்றும் கண் ணோட்டினான்.

‘‘அட சே, விலகிப் போய்விட்டோம்!.. இன் னும் பலமாகத் துடுப்பு போடு...’’

‘‘யோசனையில் ஆழ்ந்து விட்டாயோ?’’ என்று புன்னகையுடன் கேட்டான் கவ்ரீலா.

‘‘களைத்துப் போனேன்...’’

‘‘அப்படியானால் இப்போது நாம் இதோடு மாட்டிக்கொள்ள மாட்டோமாக்கும்?’’ என்று சிப்பங்களில் காலால் இடித்தான் கவ்ரீலா.

‘‘மாட்டோம், கவலையை விடு. இப்போது இதைக் கொடுத்துப் பணம் வாங்குவேன்... ம்- ஆமாம்!’’

‘‘ஐந்நூறா?’’

‘‘அதற்குக் குறையாது.’’

‘‘கொழுத்த தொகை இது! ஆக்கங் கெட்ட எனக்கு மட்டும் இது கிடைத்தால் நன்றாகப் பயன்படுத்தி இருப்பேனே!..’’

‘‘விவசாயித்திலோ?’’

‘‘அதில்தான்! இப்போது மட்டும்...’’

இவ்வாறு கூறி கவ்ரீலா கனவு இறக்கை கள் மீது பறக்கலானான். செல்காஷோ பேசா திருந்தான். அவனுடைய மீசை தொங்கிற்று. அலைகளால் அடியுண்ட வலது விலா நனைந் திருந்தது. கண்கள் உள் ஆழ்ந்து ஒளி இழந் திருந்தன. அவனுடைய உருவத்தில் இருந்த வேட்டைப் பறவைத் தன்மை அனைத்தும் தாழ்

மை நிறைந்த சிந்தனையால் ஒடுங்கி மென்மை ஆகி விட்டது. அவனுடைய அழுக்கடைந்த சட்டையின் மடிப்புக்களிலிருந்தும் கூட இந்தச் சிந்தனை வெளிப்பட்டது.

அவன் படகை நேரே திருப்பி நீரிலிருந்து துருத்திய கரிய ஒன்றின் பக்கம் அதைச் செலுத்தினான்.

மேகங்கள் வானத்தை மீண்டும் மூடின. மழை வெப்பமான சிறு துளிகளாகத் தூறியது. அலை முடிகள் மேல் விழுகையில் மழைத் துளிகள் களிப்புடன் கிணுகிணுத்தன.

''நிறுத்து! ஜாக்கிரதை!'' என்று ஆணையிட்டான் செல்காஷ்.

படகின் மூக்கு மரக்கலத்தின் உடலில் இடித்தது.

''தூங்குகிறார்களா என்ன, சனியன்கள்?'' என்று மரக் கலத்திலிருந்து தொங்கிய கயிறுகளில் கொக்கியை மாட்டியவாறு முணுமுணுத்தான் செல்காஷ். ''ஏணியை இறக்கு!.. மழை வேறு பெய்தது. முன்னால் வர முடியவில்லை! டேய், கடற்பஞ்சுகளா!.. அடேய்!..''

''யார் அது, செல்காஷா?'' என்று மேலேயிருந்து மென்மையாக முறுமுறுத்தது கேட்டது.

''ஊம், ஏணியை இறக்கு!''

''கலிமேரா, செல்காஷ்!'' *

''ஏணியை இறக்கடா, பாழாய்ப் போகிறவனே!'' என்று உறுமினான் செல்காஷ்.

---

* ''மாலை வணக்கம், செல்காஷ்!'' (கிரேக்க மொழி). — **ப-ர்.**

''இன்றைக்கு எரிச்சலோடு வந்திருக்கிறான்... ஹலோ!''

''ஏறு, கவ்ரீலா!'' என்று கூட்டாளியிடம் சொன்னான் செல்காஷ்.

ஒரு நிமிடத்தில் அவர்கள் மேல் தட்டை அடைந்தார்கள். அங்கே தாடி வைத்த மூன்று கரிய உருவங்கள் விந்தையான மழலை ஒலிப் புள்ள மொழியில் ஒருவரோடு ஒருவர் அரட்டை அடித்தவாறு செல்காஷின் படகைப் பார்த்துக் கொண்டிருந்தார்கள். நீண்ட மழைக் கோட்டு அணிந்த நான்காமவன் செல்காஷ் அருகே வந்து பேசாமல் அவன் கையைப் பற்றிக் குலுக்கினான். பின்பு கவ்ரீலாவைச் சந்தேகத்துடன் பார்த்தான்.

''காலைக்குள் பணத்தைத் தயாராக எடுத்து வை,'' என்று அவனிடம் சுருக்கமாகச் சொன்னான் செல்காஷ். ''இப்போது நான் தூங்கப் போகிறேன். கவ்ரீலா, போவோம் வா! பசிக்கிறதோ?''

''தூங்கினால் நல்லது...'' என்று சொன்னான் கவ்ரீலா. ஐந்து நிமிடத்திற்கெல்லாம் அவன் குறட்டை விடத் தொடங்கி விட்டான். செல்காஷோ, அவன் அருகே அமர்ந்து யாருடைய சோடுகளையோ போட்டு அளவு பார்த்தான், யோசனையுடன் ஒரு புறம் துப்பினான், ஏக்கத்துடன் பற்களின் ஊடாகச் சீழ்க்கை அடித்தான். பின்பு கைகளைத் தலைக்குயரம் வைத்துக்கொண்டு மீசையை அசைத்தவாறு கவ்ரீலாவின் அருகே நீட்டிப் படுத்தான்.

அலையடித்துக் கொண்டிருந்த நீரில் மரக்

கலம் மெதுவாக அசைந்தாடியது. எங்கேயோ மரச் சட்டம் முறையிடுவது போலக் கிரீச்சிட்டது. மழை மேல் தட்டில் மென்மையாகத் தூறியது. அலைகள் மரக்கலத்தின் பக்கங்களில் அடித் தன... எல்லாமே ஏக்கம் நிறைந்திருந்தன. தன் மகன் இன்புறுவான் என்ற நம்பிக்கை இல்லாத தாயின் தாலாட்டு போல எல்லாம் ஒலித்தன...

செல்காஷ் பற்களைக் காட்டியவாறு தலையை நிமிர்த்திச் சுற்றிலும் பார்த்தான். பின்பு ஏதோ கிசுகிசுத்து விட்டு மறுபடி படுத்தான்... கால் களைப் பரப்பிப் பெரிய கத்திரிக்கோல் போன்று தோற்றம் அளித்தான்.

## 3

அவன் முதலில் கண் விழித்தான். கலவரத் துடன் சுற்று முற்றும் பார்த்தான். உடனே நிம்மதி அடைந்து இன்னும் உறங்கிக் கொண் டிருந்த கவ்ரீலாவை நோக்கினான். அவன் இனி மையாகக் குறட்டை விட்டுக் கொண்டிருந்தான். அவனது நலம் வாய்ந்த பழுப்பேறிய குழந்தை முகம் முழுவதும் உறக்கத்தில் எதனாலோ ஏற் பட்ட புன்னகையால் மலர்ந்திருந்தது. செல் காஷ் பெரு மூச்செறிந்து குறுகிய நூலேணியில் ஏறி மேலே சென்றான். சரக்கறையின் திறப்பில் வானத்தின் காரீய நிறத் துண்டு தெரிந்தது. வெளிச்சமாக, ஆனால் இலையுதிர் காலத்துக்கு ஏற்பச் சலிப்பாகவும் கவர்ச்சி இன்றியும் இருந் தது.

செல்காஷ் ஒரு இரண்டு மணி நேரத்தில் திரும்பினான். அவன் முகம் சிவந்திருந்தது, மீசை மிடுக்காக மேல் நோக்கி முறுக்கி இருந்தது. உறுதியான நீள் சோடுகளும் குட்டை மேல் உடுப்பும் தோல் சராய்களும் அணிந்து வேட்டைக்காரன் போல் காணப்பட்டான். அவனுடைய உடுப்பு முழுதும் நைந்திருந்தது, ஆனால் உறுதியாகவும் அவனுக்கு மிகப் பொருத்தமாகவும் இருந்தது. அது அவனுடைய மேனியை அகன்றதாகக் காட்டி அதில் துருத்தி இருந்த எலும்புகளை மறைத்து அவனுக்குப் போர் வீரத் தோற்றம் அளித்தது.

''டேய், கன்றுக்குட்டீ, எழுந்திரு!..'' என்று கவ்ரீலாவைக் காலால் இடித்தான்.

அவன் துள்ளி எழுந்து, உறக்க மயக்கத்தில் செல்காஷை அடையாளம் தெரிந்து கொள்ளாமல் கலங்கிய விழிகளால் அவனை மிரட்சியுடன் உறுத்து நோக்கினான். செல்காஷ் கடகட வென்று நகைத்தான்.

''அட, இது நீயா!..'' என்று முடிவில் கவ்ரீலா முகம் மலர முறுவலித்தான். ''சீமான் ஆகி விட்டாயே!''

''நாம் சீக்கிரம் கிளம்பலாம். சரியான பயங்கொள்ளி அப்பா நீ! நேற்று ராத்திரி எத்தனை தடவை சாகப் பார்த்தாய்?''

''நீயே யோசித்துப் பார். இந்த மாதிரி விவகாரத்தில் நான் முதல் தடவை கலந்து கொண்டிருந்தேன்! வாழ்நாள் முழுவதற்கும் ஆன்மாவைப் பாழ்படுத்தி இருக்கலாமே!''

“நல்லது, இன்னொரு தரம் வருவாயா இந்த வேலைக்கு? ஊம்?”

“இன்னொரு தரமா?.. அட இது—உனக்கு எப்படிச் சொல்லுவது? அதனால் லாபம் என்ன?.. அது தான் முக்கியம்!”

“நல்லது, இரண்டு ‘பச்சை நோட்டு’ கிடைத்தால்?”

“அதாவது இரு நூறு ரூபிளா? பரவா யில்லை... அப்போது வரலாம்...”

“இரு! ஆன்மாவை எப்படிப் பாழ்படுத்து வாய்?..”

“அட இதிலே, ஒருவேளை... பாழ்படுத் தாமலும் இருக்கலாமே!” என்று குறுநகை செய்தான் கவ்ரீலா. “பாழ்படுத்தாமலே ஆயுள் பூராவும் ஆளாக வளைய வரலாமே.”

செல்காஷ் குதூகலமாகக் கெக்கலி கொட்டி னான்.

“சரி, கிடக்கட்டும்! கேலிப் பேச்சு பேசியது போதும். கரைக்குப் போவோம் வா...”

அவர்கள் மறுபடி படகில் இருந்தார்கள். செல்காஷ் சுக்கான் பிடித்தான், கவ்ரீலா துடுப்பு வலித்தான். அவர்களுக்கு மேலே இருந்தது சாம்பல் நிற வானம். அதில் மேகங்கள் ஒரு சீராகப் பரவி இருந்தன. கலங்கல் பச்சைக் கடல் படகுடன் விளையாடியது, இன்னும் சிறிய வையாய் இருந்த அலைகள் மேல் அதை ஓசை யுடன் தூக்கிப் போட்டது. அலைகள் பளிச்சிடும் உப்பு நீர்த் துளிகளைப் படகுக்குள் மகிழ்ச்சி யுடன் தெறித்தன. படகின் மூக்கிற்கு நேராகத் தொலைவில் தென்பட்டது மணல் கரையின்

மஞ்சள் பட்டை. படகின் பின்னே நெடுந்தூரம் சென்றிருந்தது கடல். அடர் வெண் நுரையால் அணி செய்யப்பட்ட அலைகளின் கூட்டங்களால் அதன் பரப்பு மேடு பள்ளங்கள் நிறைந்து கா ணப்பட்டது. அங்கேயே தொலைவில் பல கப்பல் கள் தென்பட்டன. தூரத்தில் இடப் புறம் பாய் மரங்களின் அடர்ந்த தொகுப்பும் நகரக் கட்ட டங்களின் வெண் குவியலும் தெரிந்தன. அங்கி ருந்து கடலில் பெருகியது தெளிவற்ற ஆரவா ரம். அதிர்ந்தொலித்த இந்த ஒலி அலையோ சையுடன் சேர்ந்து நல்ல, வலிய இசையாக அமைந்தது... சாம்பல் நிற மூடுபனியின் மெல் லிய படலம் எல்லாவற்றின் மீதும் போர்த்திருந் தது. பொருள்கள் ஒன்றிலிருந்து மற்றது தொ லைவில் இருப்பது போல இது காட்டியது...

''ஆகா, சாயங்காலத்துக்குள் பிரமாத அட்ட காசம் பண்ணப் போகிறது!'' என்று தலை யசைப்பால் கடலைச் சுட்டினான் செல்காஷ்.

''புயலா?'' என்று துடுப்புகளால் அலை களை வலிவாக உழுதவாறு கேட்டான் கவ்ரீலா. காற்றினால் கடல் நெடுகிலும் பரப்பப்பட்ட தூவா னத்தால் அவன் தலையோடு கால் நனைந் திருந்தான்.

''ஹ்ம்-ஹ்ம்!..'' என்று ஆமாம் போட்டான் செல்காஷ்.

கவ்ரீலா அவனை ஆவலுடன் நோக் கினான்...

செல்காஷ் பேச்சைத் தொடங்கத் தயாரா யில்லை என்பதைக் கண்டு, ''ஆமாம், உனக்கு

எவ்வளவு கொடுத்தார்கள்?'' என்று கடைசி யில் கேட்டான்.

செல்காஷ் பையிலிருந்து எடுத்த ஒன்றை கவ்ரீலா பக்கம் நீட்டி, ''இது தான்!'' என் றான்.

கவ்ரீலா அந்தப் பல நிறக் காகிதங்களைப் பார்த்தான். அவனுடைய கண்களுக்கு எல் லாமே பளிச்சிடும் வானவில் நிறங்களை மேற் கொண்டன.

''அடே!.. நீ என்னிடம் பொய் சொன்னாய் என்றாக்கும் நினைத்தேன்!.. இது எவ் வளவு?''

''ஐந்நூற்று நாற்பது!''

''அபாரம்!..'' என்று செல்காஷ் மறுபடி பையில் வைத்துக்கொண்ட ஐந்நூற்று நாற்பது ரூபிள்களைப் பேராசை ததும்பும் விழிகளால் பார்த்தவாறு கிசுகிசுத்தான் கவ்ரீலா. ''அடேயப் பா!.. இந்தப் பணம் மட்டும்!..'' என்று வேட் கை தாளாமல் பெரு மூச்செறிந்தான்.

''நீயும் நானும் களி கொண்டாடுவோம், தம்பி!'' என்று பரவசத்துடன் ஆர்ப்பளித்தான் செல்காஷ். ''ஆ, தெவிட்டத் தெவிட்ட அநுபவிப் போம்... நீ வேறு விதமாக நினைக்காதே! நான் உனக்குத் தனியாகக் கொடுத்து விடு கிறேன், தம்பி... நாற்பது கொடுக்கிறேன், ஊம்? திருப்திதானே? இப்போதே தருகிறேன், வேண்டுமா?''

''உனக்கு வருத்தமில்லை என்றால்— அதற்கென்ன? நான் ஏற்றுக்கொள்கிறேன்!''

நெஞ்சில் குதுகுதுப்பு ஊட்டிய கூரிய எதிர் பார்ப்பினால் கவ்ரீலாவின் மேனி துடித்தது.

"அட, குட்டிப் பிசாசே! ஏற்றுக்கொள் கிறேனாம்! ஏற்றுக்கொள், தம்பி, தயை செய்து! நான் உன்னை வெகுவாகக் கேட்டுக்கொள் கிறேன், ஏற்றுக்கொள்! இவ்வளவு நிறையப் பணத்தை எங்கே வைப்பது என்று எனக்குத் தெரியவில்லை! என்னை இக்கட்டிலிருந்து தப் புவி, ஏற்றுக்கொள், இந்தா!.."

செல்காஷ் சில நோட்டுக்களை கவ்ரீலாவிடம் நீட்டினான். அவன் நடுங்கும் கையால் அவற்றை வாங்கிக்கொண்டு, துடுப்புகளை விட்டு விட்டுப் பணத்தைச் சட்டை மார்புக்குள் வைத்துக் கொள்ள முற்பட்டான். அவனது கண்கள் பேரா சையுடன் சுரித்திருந்தன. காந்தும் பானத்தைப் பருகுபவன் போல அவன் ஓசையுடன் காற்றை உள்ளிழுத்தான். செல்காஷ் கேலிப் புன்னகை யுடன் அவன் மீது கண்ணோட்டினான். கவ்ரீலா வோ, மறுபடி துடுப்புகளைத் தாழ்த்தியவாறு பதற்றத்துடனும் அவசரமாகவும் படகைச் செலுத் தினான். அவனுடைய தோள்களும் காதுகளும் நடுங்கின.

"ஆனாலும் பேராசைக்காரனப்பா நீ!.. மோசம்... ஆனால், இது சகஜந்தான்... விவசாயி அல்லவா..." என்று சிந்தனையுடன் சொன்னான் செல்காஷ்.

திடீரென்று ஆவேசம் பொங்கும் உள்ளக் கிளர்ச்சி பீரிட, "பணத்தை வைத்துக்கொண்டு என்ன வேண்டுமானாலும் செய்யலாமே!.." என்று கூவினான் கவ்ரீலா. பணம் உள்ள

போதும் இல்லாத போதும் கிராம வாழ்க்கை எப்படி இருக்கும் என்று தன் எண்ணங்களை விரட்டிக்கொண்டு போகிற போக்கில் சொற்களை பிடிப்பவன் போலத் துணுக்கு துணுக்காக, அவசர அவசரமாகப் பேசத் தொடங்கினான். கௌரவம், மனநிறைவு, களிப்பு!..

செல்காஷ் ஆழ்ந்த முகத் தோற்றத்துடனும் ஏதோ எண்ணத்தினால் சுரித்த கண்களுடனும் அவனுடைய பேச்சைக் கவனித்துக் கேட்டான். அவ்வப்போது மனநிறைவுடன் முறுவலித்தான்.

"வந்து விட்டோம்!" என்று கவ்ரீலாவின் பேச்சை இடை முறித்தான்.

அலை படகின் அடியைப் பற்றி லாகவமாக மணலில் செருகிற்று.

"நல்லது, தம்பி, இப்போது எல்லாம் முடிந்தது. படகை அலை அடித்துக்கொண்டு போகாதிருப்பதற்காகத் தொலைவில் நகர்த்த வேண்டும். ஆட்கள் வந்து அதை ஓட்டிப் போவார்கள். நீயும் நானும் பிரிவு சொல்லிக்கொள்வோம்!.. இங்கிருந்து நகரம் ஒரு எட்டு வெர்ஸ்டா* தூரம். நீ என்ன, மறுபடி நகரத்துக்குத் திரும்புகிறாயா? ஊம்?"

செல்காஷின் முகத்தில் நல்லியல்பு ததும்பும் தந்திரப் புன்னகை மிளிர்ந்தது. தனக்கு மிக இனியதும் கவ்ரீலாவுக்கு எதிர்பாராததுமான ஒரு திட்டம் போட்டிருப்பவன் போன்று அவன்

---

* **வெர்ஸ்டா — 3,500** அடியுள்ள ருஷ்ய நீட்டலளவை. — **ப-ர்.**

தோற்றம் அளித்தான். பையில் கையை விட்டு அங்கிருந்த நோட்டுக்களைச் சரசரக்கச் செய்தான்.

''இல்லை... நான்... போக மாட்டேன்... நான்...'' கவ்ரீலாவுக்கு மூச்சு திணறியது, எதனாலோ புரையேறியது.

செல்காஷ் அவனைப் பார்த்தான்.

''நீ என்ன இப்படி வேதனைப்படுகிறாய்?'' என்று கேட்டான்.

''அட ஒன்றுமில்லை...'' ஆனால் கவ்ரீலாவின் முகம் ஒரு கணம் சிவப்பதும் மறு கணம் சாம்பல் நிறமாவதுமாக இருந்தது. செல்காஷ் மேல் பாய விரும்பியோ, தனக்கு நிறைவேற்றக் கடினமான வேறு விருப்பத்தால் அலைக்கப்பட்டோ அவன் தயங்கித் தயங்கி நின்றான்.

இந்த இளைஞனிடம் காணப்பட்ட இத்தகைய உள்ளக் கிளர்ச்சியால் செல்காஷுக்கு என்னவோ போல் இருந்தது. எந்த விதத்தில் அது வெளிப்படும் என்று எதிர்பார்த்துக் காத்திருந்தான்.

கவ்ரீலா வீரிடலுக்கு ஒப்பான விந்தைச் சிரிப்பு சிரிக்கலானான். அவன் தலை குனிந்திருந்ததால் அவனுடைய முகபாவத்தைச் செல்காஷ் காணவில்லை. கவ்ரீலாவின் காதுகள் மட்டுமே மங்கலாகத் தெரிந்தன. அவை சிவப்பதும் வெளிறுவதுமாக இருந்தன.

''அட உன்னைப் பேய் பிடித்தாட்ட!'' என்று கையை உதறினான் செல்காஷ். ''என்மேல் காதல் கொண்டு விட்டாயா என்ன? கொஞ்சு

கிறான், சின்னப் பெண் மாதிரி... அல்லது என்னைப் பிரிய வருத்தமாய் இருக்கிறதோ? டேய், வாண்டு! சொல்லு, என்ன வேண்டும்? இல்லாவிட்டால் நான் போய் விடுவேன்!..''

''போய்விடுவாயா?!'' என்று உரக்கக் கத்தினான் கவ்ரீலா.

வெறுமையான மணல் கரை அவனுடைய கத்தலால் திடுக்கிட்டது. கடல் அலைகளால் கழுவப்பட்ட மஞ்சள் மணல் அலைகள் எழுந்து தணிபவை போலத் தோற்றம் அளித்தன. செல்காஷும் திடுக்கிட்டான். திடீரென கவ்ரீலா இடத்திலிருந்து பாய்ந்து செல்காஷின் கால்களில் விழுந்தான். அவற்றை இரு கைகளாலும் கட்டிக்கொண்டு தன் பக்கம் இழுத்தான். செல்காஷ் தள்ளாடிப் பொத்தென்று மணலில் உட்கார்ந்தான். பற்களை நெறுநெறுத்து, முட்டி பிடித்த நீண்ட கையைக் காற்றில் வேகமாக வீசினான். ஆனால் அவனால் தாக்க முடியாது போயிற்று. கவ்ரீலா நாணத்துடன் கெஞ்சிக் கிசுகிசுத்தது அவனைத் தடுத்துவிட்டது:

''அப்பனே, இந்தப் பணத்தை எனக்குக் கொடு! இயேசுவின் பெயரால் கேட்கிறேன்! கொடுத்துவிடு! உனக்கு இது எம்மாத்திரம்?.. ஒரு ராத்திரியில்—ஒரே இரவில்—சம்பாதித்து விடுவாய்... எனக்கோ, பல ஆண்டுகள் வேண்டும்... கொடு—உனக்காகப் பிரார்த்தனை செய்வேன்! சதா காலத்துக்கும்—மூன்று மாதா கோயில்களில்—உன் ஆன்மாவின் கடைத்தேற்றத்துக்காக!.. நீ இதைக் காற்றில் பறக்க விட்டு விடுவாய்... நானோ, நிலத்தில் போடுவேன்!

ஐயோ, இதை எனக்குக் கொடு! உனக்கு இந்தப் பணத்தால் ஆவதென்ன?.. இது உனக்கு ஒரு பிரமாதமா? ஒரு ராத்திரியில் நீ பணக்காரன் ஆகி விடுவாய்! நன்மை பண்ணு! நீயோ அழிந்து போனவன்... கடைத்தேற உனக்கு வழி இல்லை... நான் என்றால்—ஐயோ! பணத்தை எனக்குக் கொடு!''

அச்சமும் வியப்பும் சீற்றமும் பொங்க மணலில் கைகளை ஊன்றியவாறு பின்னே சாய்ந்து உட்கார்ந்திருந்த செல்காஷ் தன் முழங்கால்களில் தலையைப் புதைத்தவாறு மூச்சு திணற வேண்டுதல்கள் செய்து கொண்டிருந்த இளைஞனைப் பயங்கரமாக உறுத்துப் பார்த்தபடிப் பேசாதிருந்தான். முடிவில் அவனை நெட்டித் தள்ளிவிட்டுத் துள்ளி எழுந்து நின்று, பையில் கையை நுழைத்து நோட்டுக்களை எடுத்து கவ்ரீலா மேல் எறிந்தான்.

''இந்தா! தின்னு...'' என்று கத்தினான். உள்ளக் கிளர்ச்சியாலும் இந்தப் பேராசைக்கார அடிமை மீது ஏற்பட்ட கடும் இரக்கத்தாலும் வெறுப்பாலும் அவன் உடல் பட படத்தது. பணத்தை எறிந்த பின் தான் வீரன் என்ற உணர்வு அவனுக்கு உண்டாயிற்று.

''நானே உனக்கு அதிகம் கொடுக்க விரும்பினேன். நேற்று இரக்கத்தால் உள்ளம் நெகிழ்ந்து போனேன், கிராமத்தை நினைத்துக் கொண்டேன். இளைஞனுக்கு உதவி செய்வோம் என்று எண்ணினேன். நீ என்ன செய்கிறாய், கேட்கிறாயா இல்லையா என்று பார்ப்பதற்காகக் காத்திருந்தேன். நீ என்னடா என்

றால்... அட, கந்தல் சுருணை! பிச்சைக்காரப் பயலே!.. பணத்துக்காகத் தன்னை இப்படி வதைத்துக்கொள்ளலாமா? மூடா! பேராசைக் காரப் பேய்கள்!.. தன்னை மறந்து விடுகிறார் கள்!.. ஐந்து காசுக்காகத் தன்னையே விற்று விடுகிறீர்கள்!..''

''என் அப்பனே!.. கிறிஸ்து உன்னைக் காப் பாராக! இப்போது நான் யார் தெரியுமா?.. இப்போது நான்... பணக்காரன்!..'' என்று உவ கைப் பெருக்கில் கீச்சிட்டான் கவ்ரீலா. பணத் தைச் சட்டை மார்பில் வைத்துக்கொள்கையில் அவன் உடம்பு நடுங்கியது. ''அருமை அண்ணே!.. ஆயுள் முழுவதும் மறக்க மாட்டேன்!.. ஒரு போதும்!.. மனைவியிடமும் மக்களிடமும் சொல்லுவேன் பிரார்த்தனை பண்ணும்படி!''

செல்காஷ் அவனுடைய மகிழ்ச்சிக் கூச்ச லைக் கேட்டான், பேராசைப் பெருக்கால் கோணிப் பளிச்சிட்ட முகத்தைப் பார்த்தான். திருடனும் குடித்துக் களிப்பவனும் சொந்தக்காரர்கள் எல் லோருடனும் உறவை அறுத்துக்கொண்டு விட்ட வனும் ஆகிய தான் இத்தகைய பேராசைக் காரனாகவும் இழிந்தவனாகவும் தன் மதிப்பை மறந்தவனாகவும் ஒருபோதும் இருக்க மாட்டான் என்று உணர்ந்தான். ஒருபோதும் இம்மாதிரி ஆக மாட்டான்!.. இந்த எண்ணமும் உணர்ச்சி யும் தனது விடுதலை பற்றிய உணர்வை அவனுள் நிறைத்தன. இவற்றின் காரணமாகவே ஆளற்ற கடற்கரையில் கவ்ரீலாவின் அருகே அவன் தயங்கி நின்றான்.

''நீ எனக்கு இன்பம் தந்து விட்டாய்!''

என்று கூவினான் கவ்ரீலா. செல்காஷின் கைகளைப் பற்றி அவற்றில் தன் முகத்தைப் புதைத்துக்கொண்டான்.

செல்காஷ் பேசாமல் ஓநாய் போலப் பற்களைக் காட்டினான். கவ்ரீலாவின் சொற்பெருக்கு ஓயவில்லை:

''நான் என்ன நினைத்தேன் தெரியுமா? நாம் இங்கே வந்து கொண்டிருந்தோம்... நான் நினைத்தேன்... இவனை—உன்னை—துடுப்பால்... ஒரு போடு போடுகிறேன்!.. பணத்தை எடுத்துக்கொள்கிறேன், இவனை அதாவது உன்னை... கடலில் தள்ளி விடுகிறேன்... ஊம்? இவன் இல்லை என்பதை யார் கவனிக்கப் போகிறார்கள்? கண்டால் கூட, எப்படி, யார் என்று ஒருவரும் விசாரிக்க மாட்டார்கள். இவனுக்காகக் கூச்சலைக் கிளப்பும்படி இவன் அப்பேர்ப்பட்ட ஆள் அல்ல!.. உலகத்தில் ஒருவருக்கும் தேவை இல்லாதவன்! இவனிடம் யாருக்கு அக்கறை?''

''இப்படிக் கொடு பணத்தை!..'' என்று கவ்ரீலாவின் குரல் வளையைப் பற்றியவாறு கர்ஜித்தான் செல்காஷ்.

கவ்ரீலா ஓரிரு தடவை திமிறினான். செல்காஷின் மறுகரம் பாம்புபோல அவனை வளைத்துப் பிடித்தது... டர்ரென்று சட்டை கிழிந்த சத்தம் கேட்டது. கவ்ரீலா தரையில் கிடந்தான். அவனுடைய கண்கள் வெறியுடன் முறைத்தன, கை விரல்கள் காற்றைப் பிறாண்டின, கால்கள் உதைத்துக் கொண்டன. வேட்டை விலங்கு போன்று நேரான, சதைப்பிடிப்பு அற்ற மேனியனான செல்காஷ் வன்மத்துடன் பற்களைக்

காட்டியவாறு கடகடவென்று நெருப்புச் சிரிப்பு சிரித்தான். அவனுடைய எலும்பு துருத்திய கூரிய முகத்தில் மீசை பதற்றத்துடன் துடித்தது. வாழ்நாள் முழுவதிலும் ஒருபோதும் யாரும் அவனை இவ்வளவு வலிக்கும்படி அடித்ததில்லை, அவனும் ஒருபோதும் இவ்வளவு சினம் கொண்டதில்லை.

''என்ன, இன்பம் அடைந்து விட்டாயா?'' என்று சிரிப்பினூடே கவ்ரீலாவிடம் கேட்டு விட்டு அவனுக்கு முதுகைக் காட்டியவாறு திரும்பி நகரத்தின் திக்கில் நடந்தான். ஆனால் அவன் ஐந்து அடி நடப்பதற்குள் கவ்ரீலா பூனை போல் வளைந்து துள்ளி எழுந்து கையை வீசி ஆட்டி, ''ஒரு போடு!..'' என்று வன்மத்துடன் கத்தியவாறு ஒரு கூழாங்கல்லை அவன் மேல் எறிந்தான்.

செல்காஷ் தலையைக் கைகளால் பிடித்தவாறு கமறினான், தள்ளாடி முன்னே நகர்ந்தான், கவ்ரீலா பக்கம் திரும்பி மணலில் முகம் குப்புற விழுந்து விட்டான். கவ்ரீலா அவனை நோக்கியவாறு சிலையாக நின்றான். செல்காஷ் காலை அசைத்தான், தலையை நிமிர்த்த முயன்றான், மீட்டிய தந்தி போல நடுங்கி விறைப்பாக நீண்டு படுத்து விட்டான். அப்போது கவ்ரீலா மூடுபனி அடர்ந்த ஸ்தெப்பி வெளிக்கு மேலே கரிய சடை மேகங்கள் மிதந்த இருண்ட தொலைவின் பக்கம் பாய்ந்தோடினான். அலைகள் மணல் மேல் பெருகி அவற்றோடு கலப்பதும் மறுபடி பெருகுவதுமாக ஓசை செய்தன.

நுரை சீறியது, நீர்த் திவலைகள் காற்றில் பறந்தன.

மழை பெய்யலுற்றது. சிறு தூறலாகத் தொடங்கியது, வானத்திலிருந்து மெல்லிய தாரைகளாகக் கொட்டிய பெருத்த அடை மழையாக விரைவில் மாறியது. மழைத்தாரைகள் நீர் நூல்களால் பெரிய வலை பின்னின. இந்த வலை தொலைதூர ஸ்தெப்பி வெளியையும் தொலைதூரக் கடலையும் உடனே மூடிவிட்டது. கவ்ரீலா அதன் பின் மறைந்து போனான். மழையையும் கடலருகே மணலில் கிடந்த நெடிய மனிதனையும் தவிர வேறு எதுவும் நெடுநேரம் பார்வைக்குப் புலப்படவில்லை. பின்பு மழையிலிருந்து மறுபடி வெளிப்பட்டான் ஓடி வந்த கவ்ரீலா. அவன் பறவையாய்ப் பறந்து வந்தான். செல்காஷின் அருகே ஓடி வந்து அவன் முன்னே விழுந்து அவனைத் தரையில் நகர்த்த முயன்றான். வெதுவெதுப்பான சிவப்புக் கோழையில் அவன் கை தோய்ந்தது... அவன் திடுக்கிட்டு, வெறித்து வெளிறிய முகத்துடன் தள்ளாடி விலகினான்.

"அண்ணே, எழுந்திரேன்!" என்று மழையின் இரைச்சலில் செல்காஷின் காதில் கிசுகிசுத்தான்.

செல்காஷ் உணர்வடைந்து கவ்ரீலாவை அப்பால் தள்ளி, "போடா அப்பாலே!.." என்று கரகரத்த குரலில் கூறினான்.

"அண்ணே! மன்னி!.. சாத்தான்தான் என்னை இப்படி..." என்று செல்காஷின் கையை முத்தமிட்டு உடல் பதறக் கிசுகிசுத்தான் கவ்ரீலா.

''போ... நட அப்பாலே!'' என்று கரகரத் தான் அவன்.

''என் ஆன்மாவில் பட்ட பாவக் கறையைப் போக்கு!.. அருமை அண்ணே! மன்னித்து விடு!..''

''மன்... அட போடா!.. போடா சாத்தான் கிட்டே!'' எனத் திடீரென்று கத்தி மணலில் உட்கார்ந்தான் செல்காஷ். அவனுடைய முகம் வெளிறி, வன்மக் குறி காட்டியது. கண்கள் கலங்கி, மூடிக்கொண்டன. அவனுக்குப் பலமாக உறக்கம் வருவது போலிருந்தது. ''இன்னும் என்ன வேண்டும் உனக்கு? உன் காரியத்தை நீ செய்தாயிற்று... போ! ஒழி!'' துயரத்தால் மாய்ந்து போன கவ்ரீலாவைக் காலால் உதைக்க முயன்றான், ஆனால் முடியவில்லை. கவ்ரீலா அவன் தோள்களை அணைத்துத் தாங்கி இரா விட்டால் மறுபடி நிலைகுலைந்து விழுந்திருப் பான். இப்போது செல்காஷின் முகம் கவ் ரீலாவின் முகத்துக்கு நேர் மட்டத்தில் இருந் தது. இருவருடைய முகங்களும் வெளிறிப் பயங் கரமாக இருந்தன.

செல்காஷ் தன் வேலையாளின் விரியத் திறந்த கண்களில் ''த்தூ'' என்று துப்பினான்.

கவ்ரீலா சட்டைக் கைகளால் பணிவாகத் துடைத்துக் கொண்டு கிசுகிசுத்தான்:

''என்ன வேண்டுமானாலும் செய்... ஒரு வார்த்தை பதில் பேச மாட்டேன். கிறிஸ்துவுக் காக மன்னித்து விடு!''

''அற்பப் பூச்சி!.. மோசடி பண்ணவும் உன் னால் முடியாது!..'' என்று இகழ்ச்சியுடன்

கத்தி உடுப்புக்கு அடியில் இருந்த தனது சட்டையைக் கிழித்து மௌனமாக, எப்போதாவது மட்டும் பற்களை நெறுநெறுத்தவாறு, தலைக்குக் கட்டு போட்டுக் கொண்டான். ''பணத்தை எடுத்துக்கொண்டாயா?'' என்று பற்களின் ஊடாகச் சீறினான்.

''நான் எடுத்துக்கொள்ளவில்லை அதை, அண்ணே! வேண்டாம் எனக்கு! தொல்லை அதனால்!..''

செல்காஷ் தன் உடுப்புப் பையில் கையை விட்டு நோட்டுக் கற்றையை எடுத்து, ஒரு நூறு ரூபிள் நோட்டை மறுபடி பையில் வைத்துக் கொண்டு மீதத்தை எல்லாம் கவ்ரீலாவிடம் நீட்டினான்.

''எடுத்துக்கொண்டு போய்த் தொலை!''

''எடுத்துக்கொள்ள மாட்டேன், அண்ணே!.. என்னால் முடியாது! மன்னித்து விடு!''

செல்காஷ் கண்களைப் பயங்கரமாக உருட்டி விழித்து, ''எடுத்துக்கொள் என்கிறேன்!..'' என்று முழங்கினான்.

''மன்னித்து விடு!.. அப்போது எடுத்துக் கொள்கிறேன்...'' என்று கூச்சத்துடன் கூறி மழை கொட்டி நனைத்திருந்த ஈர மணலில் செல்காஷின் கால்களில் விழுந்தான் கவ்ரீலா.

''புளுகுகிறாய், எடுத்துக்கொள்வாய், பூச்சிப் பயலே!'' என்று உறுதியாகக் கூறி, அவன் மயிரைப் பற்றித் தலையைச் சிரமத்துடன் நிமிர்த்தி அவன் முகத்தில் பணத்தை நுழைத்தான் செல்காஷ்.

''எடுத்துக்கொள்! எடுத்துக்கொள்! நீ சக்

காத்துக்கு வேலை செய்யவில்லை! எடுத்துக் கொள், பயப்படாதே! மனிதனை அநேகமாகக் கொல்லப் பார்த்ததற்கு வெட்கப்படாதே! என் மாதிரி ஆட்களுக்காக யாரும் உன்னைத் தண்டிக்கப் போவதில்லை. சேதி தெரிந்ததும் கொன்றவனுக்கு நன்றி கூடச் சொல்லுவார்கள். இந்தா, எடுத்துக்கொள்!''

செல்காஷ் சிரித்ததைக் கண்டு கவ்ரீலாவுக்கு அப்பாடா என்று இருந்தது. பணத்தைக் கையில் இறுகப் பிடித்துக்கொண்டான்.

''அண்ணே! என்னை மன்னிப்பாயா? மாட்டாயா? ஊம்?'' என்று கண்ணீர் மல்கக் கேட்டான்.

செல்காஷ் எழுந்து நின்று தள்ளாடிக் கொண்டு அவனுடைய தோரணையில் அவனுக்குப் பதிலளித்தான்: ''அருமைத் தம்பி!.. எதற்காக? மன்னிப்பதற்கு ஒன்றும் இல்லை! இன்றைக்கு நீ என்னை அநேகமாகக் கொன்று விட்டாய், நாளைக்கு நான் உன்னை...''

கவ்ரீலா தலையை ஆட்டி, ''அட, அண்ணே, அண்ணே!..'' என்று வருத்தத்துடன் பெருமூச்செறிந்தான்.

செல்காஷ் அவன் எதிரே நின்று விந்தையாக முறுவலித்தான். அவன் தலையில் சுற்றியிருந்த துணி கொஞ்சங் கொஞ்சமாகச் சிவப்பாகி, துருக்கியத் தொப்பி போலத் தோற்றம் அளிக்கலாயிற்று.

மழை சோனா மாதிரியாகக் கொட்டிற்று. கடல் தெளிவின்றி முழங்கிற்று, அலைகள்

வெறியும் சீற்றமும் பொங்கக் கரை மேல் மோதி அடித்தன.

இரு மனிதர்களும் சற்று நேரம் பேசா திருந்தார்கள்.

''நல்லது, விடை கொடு!'' என்று கேலி யாகக் கூறி விட்டு வழி நடந்தான் செல்காஷ்.

அவன் தள்ளாடினான். அவனுடைய கால் கள் நடுங்கின. தலை பறிபோய்விடும் என்று அஞ்சுபவன் போல அதை விந்தையாகப் பிடித் துக் கொண்டிருந்தான்.

''மன்னித்து விடு, அண்ணே!..'' என்று இன்னும் ஒரு முறை கெஞ்சினான் கவ்ரீலா.

''பரவாயில்லை!'' என்று வறண்ட குரலில் சொல்லிவிட்டு நடையைக் கட்டினான் செல் காஷ்.

இடது கையால் தலையை இன்னும் தாங்கிக் கொண்டும் வலது கையால் பழுப்பு மீசையை மெதுவாக பிதுங்கிக்கொண்டும் தள்ளாடிய வாறு நடந்தான் அவன்.

மழை மேகங்களிலிருந்து முடிவற்ற மெல் லிய தாரைகளாக நிமிடத்துக்கு நிமிடம் அதிக அ ர்த்தியாகப் பொழிந்து பார்வை ஊடுருவ முடியாத எஃகு நிற மூட்டத்தால் ஸ்தெப்பி வெளியைப் போர்த்தியது. செல்காஷ் அந்த மழையில் மறையும் வரை கவ்ரீலா அவன் போவதைப் பார்த்துக் கொண்டிருந்தான்.

பிறகு கவ்ரீலா நனைந்த தொப்பியைக் கழற்றி, சிலுவைக் குறி இட்டுக்கொண்டு உள் ளங்கையில் இறுகப் பிடித்திருந்த பண நோட்டுக் களைப் பார்த்து விட்டாற்றியாக ஆழ்ந்த பெரு

மூச்சு விட்டு, நோட்டுக்களைச் சட்டை மார்பில் வைத்துக்கொண்டு, செல்காஷ் சென்றதற்கு எதிர்த் திசையில் அகலமாக, உறுதியாக அடி வைத்து நடந்தான்.

கடல் ஊளையிட்டது, கனத்த பெரிய அலைகளைக் கரையோர மணலில் வீசி எறிந்து அவற்றைத் திவலைகளாகவும் நுரையாகவும் சிதறடித்தது. நீரையும் நிலத்தையும் மழை ஆவேசத்துடன் கூறு போட்டது... காற்று உரத்து முழங்கிற்று... சுற்றிலும் எல்லாம் ஊளையாலும் முழக்கத்தாலும் ஆரவாரத்தாலும் நிறைந்தன... மழையில் கடலும் கண்ணுக்குத் தெரியவில்லை, வானமும் புலப்படவில்லை.

செல்காஷ் கிடந்த இடத்தில் இருந்த சிவப்புக் கறையை மழையும் அலை நீர்த் திவலைகளும் விரைவில் கழுவிப் போக்கிவிட்டன. கரையோர மணலில் இருந்த செல்காஷின் தடங்களையும் இளைஞனின் தடங்களையும் அலைகழுவிப் போக்கிவிட்டன... இரண்டு ஆட்களுக்கிடையே நடிக்கப் பெற்ற சிறு நாடகத்தை நினைவுபடுத்தக் கூடியது எதுவும் வெற்றுக் கடற்கரையில் எஞ்சி இருக்கவில்லை.

**1894**

# என் வழித் துணைவன்

## 1

ஒதெஸ்ஸாக் கப்பல் துறையில் நான் அவனைச் சந்தித்தேன். அவனுடைய கட்டமைந்த பருத்த மேனியும் அழகிய தாடியால் விளிம்பு கட்டப் பட்ட கிழக்கத்தி வகை முகமும் தொடர்ந்தாற் போல ஒரு மூன்று நாள்களாக என் கவனத் தை ஈர்த்தவாறு இருந்தன. அவன் அடிக்கடி என் முன் தோன்றி மறைந்து கொண்டிருந் தான். அவன் அலை தாங்கிக் கற்சுவர் மேல் மணிக் கணக்காக நின்று, கைத்தடிக் குமிழை வாயில் நுழைத்துக்கொண்டு வாதுமைக் கொட் டை வடிவான கருங் கண்களால் கப்பல் துறை யின் கலங்கல் நீரை ஏக்கத்துடன் பார்த்துக் கொண்டிருந்ததை நான் கண்டேன். கவலை யற்ற உல்லாசப் பேர்வழியின் நடையில் நாள் தோறும் பல முறை அவன் என் அருகாகச் சென்றான். யார் அவன்?.. நான் அவனைக் கண்காணிக்கலானேன். அவனோ, எனக்குக் கோரணி காட்டுபவன் போல வர வர மேலும் அடிக்கடி என் கண்களில் படத் தொடங்கினான். அவனது நாகரிகமான கட்டம் போட்ட வெள் ளை சூட்டையும் கறுப்புத் தொப்பியும் சோம் பிய நடையையும் மந்தமான, அலுத்த பார்வை

யையும் தொலைவிலேயே அடையாளம் கண்டு கொள்ள முடிவில் நான் பழகி விட்டேன். இங் கே, கப்பல் துறையில், கப்பல்கள், நீராவி எஞ்சின்களின் ஊதல்களுக்கும் சங்கிலிகளின் கண கணப்புக்கும் தொழிலாளர்களின் கூச்சல் களுக்கும் மனிதனை எல்லாப் புறங்களிலும் சூழ்ந்து பற்றும் வெறியும் நரம்பு இறுக்க மும் கொண்ட துறைமுகப் பரபரப்புக்கும் நடு வே அவன் இருப்பதற்கு நிச்சயமாக ஒரு கார ணமும் இல்லை. இங்கே எல்லா ஆட்களும் வேலைகளில் முனைந்திருந்தார்கள், களைத் திருந்தார்கள், ஓயாமல் ஓடிச் சாடினார்கள், புழுதி படிந்து வியர்த்திருந்தார்கள், இரைந் தார்கள், திட்டினார்கள். உழைப்பின் இந்தப் பரபரப்புக்கு நடுவே, உயிர்ப்பு அற்றுச் சலிப்பு தட்டிய முகம் கொண்ட, எதிலும் அக்கறை இல்லாத, எல்லாருக்கும் வேற்றான இந்த விந்தை உருவம் மெது நடை நடந்தது.

முடிவில் நான்காம் நாள், மதியச் சாப் பாட்டு வேளையில், நான் அவனைச் சந்தித் தேன். என்ன ஆனாலும் சரி, அவன் யார் என்று தெரிந்து கொண்டு விடுவது என முடிவு செய்தேன். அவனுக்கு அருகாமையில் உட் கார்ந்து தர்பூசணிப் பழத்தையும் ரொட்டியை யும் வைத்துக்கொண்டு சாப்பிட்டவாறு அவனை நோட்டமிட்டேன். இவனிடம் இங்கிதமாகப் பேச்சு கொடுப்பது எப்படி என்று சிந்தனை செய் தேன்.

அவன் தேயிலைப் பேழைகளின் அடுக்கில் சாய்ந்தவாறு நின்று, இலக்கின்றிச் சுற்று முற்

றும் பார்த்த படி, புல்லாங்குழல் வாசிப்பவன் போன்று கைத்தடியில் விரல்களால் அடித்துக் கொண்டிருந்தான்.

நாடோடி உடை அணிந்து, முதுகில் சுமையாளுக்குரிய தோள் வாரும் மேலெல்லாம் நிலக் கரித் தூள் கறையுமாக இருந்த எனக்கு அந்த ஆடம்பரப் பேர்வழியிடம் பேச்சு கொடுப்பது கடினமாக இருந்தது. ஆனால் அவன் என் மீதிருந்து விழிகளை அகற்றவே இல்லை என்பதையும் அவற்றில் இன்பமற்ற, பேராசை நிறைந்த விலங்கு உணர்வு கனல்வதையும் நான் வியப்புடன் கண்டேன். எனது நோக்குக்கு இலக்கானவன் பசித்திருக்கிறான் என்று முடிவு செய்து, சட்டென்று சுற்றிலும் கண்ணோட்டி விட்டு அவனிடம் தணிந்த குரலில் கேட்டேன்:

''சாப்பிட விரும்புகிறீர்களா?''

அவன் திடுக்கிட்டு, அநேகமாக நூறு நெருக்கமான வலிய பற்களைப் பேராசை தோன்ற இளித்து, என் போன்றே சந்தேகத்துடன் இங்கும் அங்கும் பார்வை செலுத்தினான்.

எங்களை யாரும் கவனிக்கவில்லை. அப்போது நான் பாதித் தர்பூசனிப் பழத்தையும் ஒரு துண்டு கோதுமை ரொட்டியையும் அவன் கைகளில் திணித்தேன். அவன் அவற்றை எடுத்துக்கொண்டு சரக்குக் குவியலின் பின்னே அமர்ந்து மறைந்து விட்டான். அவனுடைய தொப்பி அணிந்த தலை சில வேளைகளில் அங்கிருந்து வெளியே துருத்தியது. தொப்பி பிடர்மீது நகர்த்தப்பட்டிருந்தது. இதனால் அவனது பழுப்பேறிய, வியர்த்த நெற்றி தெரிந்

தது. மலர்ந்த முறுவலால் அவன் முகம் பளிச் சிட்டது. நொடிப் போது கூடச் சவைப்பதை நிறுத்தாமல் எதனாலோ எனக்குக் கண் சாடை செய்தான். எனக்காகக் காத்திருக்கும்படி அவ னுக்குச் சைகையால் உணர்த்தி விட்டு நான் இறைச்சி வாங்கிக் கொண்டுவந்து அவனுக்குக் கொடுத்துவிட்டு மற்றவர்களின் பார்வைகளிலி ருந்து அந்த ஆடம்பரப் போர்வழியை முழுவ தும் மறைக்கும் விதத்தில் பேழைகளின் அரு கே நின்று கொண்டேன். அது வரை அவன் வேட்டை விலங்கு போலச் சுற்றுமுற்றும் ஓயா மல் பார்த்தவாறு சாப்பிட்டான்—தன் கவ ளத்தை யாரேனும் பிடுங்கிக் கொள்வார்கள் என்று அஞ்சுபவன் போல. இப்போது அவன் அதிக நிம்மதியாகச் சாப்பிடலானான். ஆனா லும் பட்டினி கிடந்த அந்த மனிதன் பேராசை யுடன் விழுங்கியதைக் காண எனக்கு வேத னை உண்டாயிற்று. நான் அவனுக்கு முதுகைக் காட்டித் திரும்பிக் கொண்டேன்.

ஜார்ஜிய ஒலி அழுத்தத்துடன் ருஷ்ய மொழி யில் எனக்கு நன்றி தெரிவித்து என் தோளைப் பற்றிக் குலுக்கினான், பின்பு என் கையைப் பிடித்து நசுக்கி அதையும் இரக்கம் இன்றிக் குலுக்கத் தொடங்கினான்.

ஐந்து நிமிடங்கள் சென்றதும் தான் யார் என்ற கதையை அவன் எனக்குச் சொல்லி விட்டான்.

அவன் ஜார்ஜியன். சிற்றரசன் ஷக்ரோ ப்தா த்ஸே. குதயிசி நகரத்தைச் சேர்ந்த பணக்கார நிலப்பிரபுவான தகப்பனுக்கு ஒரே மகன். காக்

கேஷியப் புகை வண்டி நிலையம் ஒன்றில் எழுத் தனாகப் பணியாற்றிக் கொண்டு ஒரு தோழ னோடு சேர்ந்து வசித்தான். இந்தத் தோழன் சிற்றரசன் ஷக்ரோவின் பணத்தையும் விலை மிக்க பொருள்களையும் எடுத்துக்கொண்டு திடீ ரென்று கம்பி நீட்டி விட்டான். அவனை விரட் டிப் பிடிப்பதற்காகவே சிற்றரசன் கிளம்பி இருந் தான். தோழன் பத்தூமுக்கு டிக்கெட்டு வாங்கிய தாக அவனுக்குத் தற்செயலாகத் தகவல் கிடைத்தது. சிற்றரசன் ஷக்ரோவும் அங்கே போ னான். ஆனால் தோழன் ஒதெஸ்ஸா சென்று விட்டதாக பத்தூமில் தெரிய வந்தது. அப் போது சிற்றரசன் ஷக்ரோ முடி திருத்தகம் வைத்திருந்த வானோ ஸ்வனீத்ஸே என்னும் மற்றொரு தோழனுடைய பாஸ்போர்ட்டை வாங்கிக்கொண்டு ஒதெஸ்ஸாவுக்கு வந்தான். முடி திருத்தும் தோழன் ஷக்ரோவின் சமவய தினன், ஆனால் அங்க அடையாளங்களில் வே றானவன். ஒதெஸ்ஸாவில் ஷக்ரோ திருட்டு பற்றிப் போலீசுக்கு மனுச் செய்து கொண்டான். போலீசார் திருடனைக் கண்டுபிடிப்பதாக வாக் களித்தார்கள். சிற்றரசன் இரண்டு வாரங்கள் காத்திருந்தான், பணத்தை எல்லாம் தின்று தீர்த்து விட்டான், சென்ற இரண்டு நாள்க ளாக ஒன்றுமே சாப்பிடவில்லை.

இடையிடையே வசவு திட்டுகளுடன் அவன் சொன்ன இந்தக் கதையை நான் கேட்டேன், அவனைப் பார்வையிட்டேன், நம்பினேன். அந் தப் பையன் மேல் எனக்கு இரக்கம் உண்டா யிற்று. அவனுக்கு இருபதாவது வயது நடந்து

கொண்டிருந்தது. வெகுளித் தனத்தைப் பார்த்தால் அவனை இன்னும் இளையவனாக மதிக்கலாம். திருட்டுப் போன சாமான்களைத் தான் கண்டுபிடிக்காவிட்டால் தன்னுடைய கண்டிப்பான தகப்பன் அவற்றுக்காகத் தன்னைக் கடாரியால் வெட்டிப் போட்டு விடுவான்,'' என்று ஜார்ஜிய தோரணையில் ருஷ்ய மொழியில் கூறிய ஷக்ரோ, இத்தகைய பொருள்களைத் திருடிய கள்வனான தோழனுடன் தன்னைப் பிணைத்திருந்த உறுதியான நட்பை அடிக்கடியும் ஆழ்ந்த சீற்றத்துடனும் நினைவு கூர்ந்தான். இந்தச் சிறுவனுக்கு உதவி செய்யாவிட்டால் பேராசை பிடித்த நகரம் இவனைத் தன் புதை சேற்றில் ஆழ்த்தி விடும் என்று நான் நினைத்தேன். எத்தகைய அற்பத்தனமான நிகழ்ச்சிகள் நாடோடிகள் வர்க்கத்தின் எண்ணிக்கையை அதிகம் ஆக்குகின்றன என்பதை நான் அறிந்திருந்தேன். மதிப்புக்குரிய, ஆனால் மதிக்கப்படாத இந்த வகுப்பில் சேர்வதற்கு வேண்டிய எல்லா வாய்ப்புக்களும் சிற்றரசன் ஷக்ரோவுக்கு இருந்தன. அவனுக்கு உதவ எனக்கு விருப்பம் உண்டாயிற்று. நகரப் போலீஸ் தலைவனிடம் போய் பத்தூமுக்கு டிக்கெட்டு வாங்கித் தரும்படி வேண்டுமாறு யோசனை கூறினேன். அவன் குழப்பமடைந்து, போக மாட்டேன் என்றான். ஏன்? தான் தங்கிய விடுதியின் சொந்தக்காரனுக்கு அவன் பணம் செலுத்தவில்லையாம், பணம் கேட்ட போது எவனையோ அடித்தானாம். அப்புறம் மறைந்து கொண்டானாம். பணம் கொடுக்காததற்கும்

அடி கொடுத்ததற்கும் போலீசார் தனக்கு நன்றி தெரிவிக்கப் போவதில்லை என்று இப் போது நியாயமாகவே அநுமானித்தான். ஆனால் ஒன்று: தான் கொடுத்தது ஓர் அடியா, இரண்டா, மூன்றா அல்லது நான்கா என்று அவனுக்குச் சரியாக நினைவு இல்லையாம்.

நிலைமை சிக்கல் ஆயிற்று. அவனுக்காக பத்தூம் பயணத்திற்கு வேண்டிய பணத்தைச் சம்பாதிக்கும் வரை வேலை செய்வது என்று நான் முடிவு செய்தேன். ஆனால், அந்தோ! இந்த நோக்கம் மிக விரைவில் ஈடேறாது என்று தெரியவந்தது. ஏனென்றால் பட்டினியில் உழன்ற ஷக்ரோ மூன்றாள் உணவையும் அதற் கும் மேலும் விழுங்கினான்.

அந்தக் காலத்தில் ''பஞ்சைகளது'' பெருக் கின் விளைவாக, கப்பல் துறையில் நாட் கூலி விகிதங்கள் குறைவாய் இருந்தன. கூலியாகக் கிடைத்த எண்பது கோப்பெக்குகளில் அறுபதை நாங்கள் தின்று தீர்த்து வந்தோம். தவிரவும், கிரிமியா போவது என்று சிற்றரசன் வருவதற்கு முன்பே நான் முடிவு செய்திருந்தேன். ஆகை யால் ஒதெஸ்ஸாவில் நீண்ட காலம் தங்கி இருக்க எனக்கு விருப்பம் இல்லை. பின்வரும் நிபந்தனைகளின் பேரில் என்னோடு நடந்து வரும்படிச் சிற்றரசன் ஷக்ரோவுக்கு அப்போது நான் யோசனை சொன்னேன்: திப்ளிஸ் வரை செல்லும் துணைப் பயணி ஒருவனை அவனுக் குத் தேடித் தர என்னால் முடியாவிட்டால் நானே அவனை அங்கே கொண்டு விடுவேன்.

தேடித் தர முடிந்தால் நாங்கள் பிரிந்து போவோம்.

சிற்றரசன் தன் பகட்டான காலணிகளையும் தொப்பியையும் காற்சட்டையையும் பார்வையிட்டான், கோட்டைத் தடவினான், சிந்தித்தான், பல முறை பெருமூச்சு விட்டான், முடிவில் இசைந்தான். இவ்வாறு நாங்கள் இருவரும் ஒதெஸ்ஸாவிலிருந்து திப்ளிசுக்குப் புறப்பட்டோம்.

## 2

என் வழித் துணைவன் சிறு பிள்ளை, வெகுளி, காட்டு மிராண்டி, அறிவு வளர்ச்சியே அடையாதவன், வயிறு நிறைந்தபோது குதூகலமாகவும் பசித்தபோது சோர்வுடனும் இருப்பவன் என்பதை நாங்கள் ஹெர்சோன் நகர் சேர்ந்த போது நான் அறிந்திருந்தேன். வலிமையும் நல்லியல்பும் வாய்ந்த விலங்காக அவனைத் தெரிந்து கொண்டிருந்தேன்.

காக்கேஷியாவைப் பற்றியும் ஜார்ஜிய நிலப்பிரபுக்களின் வாழ்க்கையைப் பற்றியும் அவர்களுடைய வேடிக்கை விளையாட்டுக்களைப் பற்றியும் விவசாயிகள் பால் அவர்கள் கடைப்பிடித்த போக்குகளைப் பற்றியும் வழியில் அவன் எனக்கு விவரித்தான். அவன் சொன்ன கதைகள் சுவையாகவும் தம் வகையில் அழகாகவும் இருந்தன. ஆனால் கதை சொன்னவனைப் பற்றி என் மனத்தில் அவை ஏற்படுத்திய எண்

ணம் அவனுக்குப் பெருமை தருவதாக இல்லை. உதாரணமாக, அவன் இந்த நிகழ்ச்சியை விவரித்தான்:

ஒரு பணக்காரச் சிற்றரசன் வீட்டுக்கு அண்டை அயலார் விருந்துக்கு வந்தார்கள். திராட்சை மது அருந்தினார்கள், சுரேக், ஷஷ்லீக், லவாஷ், புலாவ் முதலியவற்றை உண்டார்கள். பின்பு சிற்றரசன் விருந்தினரைக் குதிரை லாயத்துக்கு அழைத்துப் போனான். குதிரைகளுக்குச் சேணங்கள் பூட்டப்பட்டன. சிறந்த குதிரையைச் சிற்றரசன் எடுத்துக்கொண்டு அதில் ஏறித் திடலில் விரட்டினான். துடியான சாதிப் புரவி! அதன் உடல் வாகையும் விரைவையும் விருந்தாளிகள் புகழ்ந்தார்கள். சிற்றரசன் மறுபடி அதை விரட்டிச் சென்றான். திடீரென்று ஒரு குடியானவன் வெள்ளைக் குதிரை மேல் ஏறித் திடலுக்கு வந்தான். அவனுடைய குதிரை சிற்றரசனின் குதிரையை முந்தி விட்டது. முந்தியதும் குடியானவன்... பெருமிதத்துடன் சிரித்தான். விருந்தாளிகளுக்கு முன் சிற்றரசனுக்கு வெட்கமாய்ப் போயிற்று!.. அவன் கடுமையாகப் புருவங்களை நெரித்து, குடியானவனைச் சைகையால் அழைத்து, அவன் பக்கத்தில் வந்ததும் வாள் வீச்சால் அவன் தலையை வெட்டி எறிந்து விட்டு, குதிரையின் காதில் ரிவால்வரால் சுட்டு அதைக் கொன்றபின் அதிகாரிகளுக்குத் தான் செய்ததை அறிவித்தான். அவனுக்கு சைபீரியக் கடுங்காவல் தண்டனை கிடைத்தது...

சிற்றரசன் மேல் அநுதாபம் தொனிக்க இந்தக் கதையை எனக்குச் சொன்னான் ஷக்ரோ.

அநுதாபப்படுவதற்கு இதில் ஒன்றும் இல்லை என்று அவனுக்கு நிரூபிக்க நான் முயன்றேன். ஆனால், அவனோ எனக்கு அறிவுறுத்தும் பாங்கில் சொன்னான்:

''சிற்றரசர்கள் குறைவு, குடியானவர்கள் அதிகம். ஒரு குடியானவனுக்காகச் சிற்றரசனைத் தண்டித்தது சரி அல்ல. குடியானவன் என்றால் என்ன? இது தான்!'' ஷக்ரோ மண் கட்டியை எனக்குக் காட்டினான். ''சிற்றரசனோ, நட்சத்திரம் மாதிரி!''

நாங்கள் விவாதித்தோம். அவன் எரிச்சல் அடைந்தான். எரிச்சல் அடைந்த போது அவன் ஓநாய் போலப் பற்களைக் காட்டினான். அவன் முகம் கூர்மை ஆயிற்று.

''பேச்சை விடு, மக்சீம்! காக்கேஷிய வாழ்க்கை உனக்குத் தெரியாது!'' என்று அவன் என்னை அதட்டினான்.

அவனுடைய வெகுளித்தனத்துக்கு முன் என் வாதங்கள் திறனற்றுப் போயின. எனக்குத் தெளிவாகப் புரிந்த விஷயம் அவனுக்குக் கேலிக்கு உரியதாக இருந்தது. என் கருத்துக்கள் மேலானவை என்று காட்டிய சான்றுகளால் நான் அவனைத் திக்கு முக்காட வைத்த போது அவன் சிந்தனையில் ஆழ்ந்துவிடவில்லை. மாறாக, பின்வருமாறு கூறினான்:

''காக்கேஷியாவுக்குப் போ. அங்கே வசி. நான் உண்மை சொன்னேன் என்பதைக் காண்பாய். எல்லாரும் இப்படிச் செய்கிறார்கள், எனவே, இப்படிச் செய்ய வேண்டும் என்று ஆகிறது. இது சரி அல்ல என்று நீ ஒருவன்

மட்டும் சொல்கிறாய், ஆயிரக் கணக்கானவர்களோ, இது சரி என்கிறார்கள் என்றால் உன்னை நான் எதற்காக நம்பப் போகிறேன்?''

வாழ்க்கை இப்பொழுது உள்ள விதத்தில் முழுவதும் விதி முறைகளுக்கு இசைந்தது, நியாயமானது என்று நம்பும் இந்த மனிதனுக்குச் சொற்களால் அன்றி நிகழ்ச்சிகளால் மறுப்பு தெரிவிக்க வேண்டும் என்று புரிந்து கொண்டு அப்போது நான் பேசாது இருந்தேன். நான் பேச்சை நிறுத்திவிட்டேன், ஆனால் அவன் பண்படாத அழகு நிறைந்த, கனலும் மூலத் தன்மையும் நிறைந்த காக்கேஷிய வாழ்க்கையைப் பற்றி, உதடுகளைச் சப்புக் கொட்டிக் கொண்டு, பாராட்டு ததும்பப் பேசினான். இந்தக் கதைகள் எனக்குச் சுவாரசியமாக இருந்தன, என் கருத்தைக் கவர்ந்தன. அதே சமயம் அவற்றில் தொனித்த இரக்கமின்மையும் செல்வத்துக்கும் முரட்டு ஆற்றலுக்கும் தலை வணங்கும் தன்மையும் எனக்கு ஆத்திரமூட்டின, என்னை வெறிகொள்ளச் செய்தன. கிறிஸ்துவின் போதனையை அவன் அறிவானா என்று ஒரு முறை நான் அவனிடம் கேட்டேன்.

அவன் தோள்களைக் குலுக்கி, வழக்கமான ஜார்ஜிய ஒலி அழுத்தத்துடன் ''நன்றாக!'' என்றான்.

ஆனால் அவன் அறிந்திருந்தது எல்லாம், கிறிஸ்து இருந்தார், யூதச் சட்டங்களுக்கு எதிராக அவர் கிளர்ச்சி செய்தார், அதற்காக யூதர்கள் அவரைச் சிலுவையில் அறைந்தார்கள், ஆனால் அவர் கடவுளாகையால் சிலுவையில் மரிக்காமல்

விண்ணுக்குச் சென்று மக்களுக்குப் புதிய வாழ்க்கைச் சட்டத்தை வழங்கினார் என்பது தான்...

"எந்தச் சட்டத்தை?" என்று கேட்டேன்.

அவன் கேலியும் விளங்காமையும் தோன்ற என்னை நோக்கி வினவினான்:

"நீ கிறிஸ்தவன் தானே? ஊம்! நானும் கிறிஸ்தவன் தான். உலகத்தில் அநேகமாக எல்லாரும் கிறிஸ்தவர்கள். ஊம், அப்படியானால் என்னைக் கேட்பானேன்? எல்லாரும் எப்படி வாழ்கிறார்கள் என்று பார்க்கிறாய் அல்லவா?.. அதுதான் கிறிஸ்துவின் சட்டம்."

நான் கிளர்ச்சி அடைந்து கிறிஸ்துவின் வாழ்க்கை பற்றி அவனுக்கு விவரிக்கலானேன். முதலில் அவன் கவனத்துடன் கேட்டான். பின்பு கவனம் கொஞ்சம் கொஞ்சமாகக் குறைந்தது. கடைசியில் கொட்டாவியில் முடிந்தது.

அவனுடைய இதயம் எனக்குச் செவி சாய்க்க மறுத்ததைக் கண்டு நான் அவனுடைய மூளையை இலக்காகக் கொண்டேன். பரஸ்பர உதவியின் நன்மைகள், அறிவின் நன்மைகள், சட்ட முறைமையின் நன்மைகள் ஆகியவற்றைப் பற்றி, நன்மைகளை, மீண்டும் மீண்டும் நன்மைகளைப் பற்றி அவனிடம் பேசினேன்... ஆனால் உலகம் பற்றிய அவனுடைய புரிதிறன் என்னும் கற்சுவர் மேல் மோதி எனது வாதங்கள் நொறுங்கித் தூளாகி விட்டன.

"வலியவன் தனக்குத் தானே சட்டம்! கற்பது அவனுக்குத் தேவை இல்லை. அவன் குருடனாய் இருந்தாலும் தன் வழியைக் கண்டு

கொள்வான்!'' என்று எனது வாதங்களைச் சோம்பலுடன் மறுத்தான் சிற்றரசன் ஷக்ரோ.

தன் கோட்பாடுகளில் உறுதியாக இருக்க அவனால் முடிந்தது. இந்தப் பண்பு அவன் மேல் எனக்கு மரியாதை ஏற்படுத்தியது. ஆனால் அவன் காட்டான், குரூரமானவன். ஷக்ரோ மேல் வெறுப்பு எனக்குள் சில வேளைகளில் பொங்கியதை நான் உணர்ந்தேன். எனினும் எங்களுக்கு இடையே தொடர்புப் புள்ளியை, நாங்கள் நெருங்கி வரவும் ஒருவரை ஒருவர் புரிந்து கொள்ளவும் வகை செய்யும் ஆதாரத் தைக் கண்டு கொள்ளலாம் என்ற நம்பிக் கையை நான் இழந்துவிடவில்லை.

நாங்கள் பெரெகோப்பைக் கடந்து யாய் லாவை நெருங்கினோம். நான் கிரிமியாவின் தென் கரை பற்றிக் கனவு கண்டு கொண் டிருந்தேன். சிற்றரசனோ, பற்களின் ஊடாக விந்தையான பாட்டுக்கள் பாடியவாறு உர் ரென்று முகத்தை வைத்துக் கொண்டிருந் தான். எங்கள் பணமெல்லாம் செலவாகிவிட்டது. வேலை செய்து சம்பாதிக்கத் தற்போது வழி எதுவும் இல்லை. நாங்கள் பியதோசியா என் னும் நகரத்தை நோக்கிப் போனோம். அங்கே அப்போது கப்பல் துறை கட்டும் வேலை தொ டங்கி இருந்தது.

தானும் வேலை செய்யப் போவதாகவும் பணம் சம்பாதித்துக்கொண்டு கடல் வழியே இரு வரும் பத்தூம் போவோம் என்றும் சிற்றரசன் என்னிடம் கூறினான். பத்தூமில் அவனுக்குத் தெரிந்தவர்கள் நிறையப் பேராம். வீட்டு வாசல்

நெருக்குபவனாகவோ காவற்காரனாகவோ எனக்கு அவன் உடனே வேலை வாங்கித் தரு உனானாம். அவன் என் தோளைத் தட்டிக் கொடுத்து, நாக்கை இனிமையாகச் சப்புக் கொட்டிய வாறு பரிவு காட்டும் தோரணையில் மேலும் சொன்னான்:

''உனக்கு எப்பேர்ப்பட்ட வாழ்க்கைக்கு ஏற்பாடு செய்கிறேன் பார்! த்ஸெ, த்ஸெ! சாராயம் எவ்வளவு வேண்டுமானாலும் குடிப்பாய், ஆட்டிறைச்சி—வேண்டிய அளவு! ஜார்ஜியப் பெண் பிள்ளையை, கொழுத்த பெண்பிள்ளையை, கலியாணம் கட்டிக்கொள்வாய், த்ஸெ, த்ஸெ, த்ஸெ!.. அவள் உனக்காக லவாஷ் ரொட்டி சுடுவாள், குழந்தைகள் பெறுவாள், நிறையக் குழந்தைகள், த்ஸெ, த்ஸெ!''

இந்த ''த்ஸெ, த்ஸெ!'' முதலில் எனக்கு வியப்பளித்தது, பின்பு எரிச்சலூட்டத் தொடங்கி நிறைந்த வெறியை ஏற்படுத்தியது. ருஷ்யாவில் இந்த ஒலியால் பன்றிகளை அருகே அழைப்பது வழக்கம். காக்கேஷியாவிலோ, பாராட்டு, வருத்தம், திருப்தி, துயரம் ஆகியவற்றை வெளியிடுகிறார்கள்.

ஷக்ரோவின் நாகரிகமான சூட்டு அதற்குள் நைந்து கசங்கிப் போயிற்று. அவனுடைய காலணிகள் பல இடங்களில் பிய்ந்து போயின. கைத்தடியையும் தொப்பியையும் நாங்கள் ஹெர்சோனில் விற்று விட்டோம். தொப்பிக்குப் பதிலாக ரெயில்வே அலுவலனின் பழைய தொப்பியை ஷக்ரோ வாங்கிக் கொண்டான்.

அவன் அதை முதல் தடவை அணிந்த

போது—மிகவும் சாய்வாக மாட்டிக் கொண்டான்.

‘‘எனக்குப் பொருந்துகிறதா? அழகாய் இருக்கிறதா?’’ என்று என்னிடம் கேட்டான்.

## 3

ஆக, நாங்கள் கிரிமியாவில் இருந்தோம். சிம்பெரோப்பலைத் தாண்டி யால்டாவை நோக்கி நடந்தோம்.

கடலினால் சீராட்டப்பட்ட பூமியின் இந்தப் பகுதியின் இயற்கை அழகைப் பேச்சின்றி வியந்து பாராட்டியவாறு நான் நடந்தேன். சிற்றரசன் பெருமூச்செறிந்தான், துன்புற்றான், ஏங்கிய விழிகளால் சுற்றிலும் பார்வை செலுத்தி, தன் வெறும் வயிற்றை எவையோ காட்டுப் பழங்களால் நிறைக்க முயன்றான். அவற்றின் ஊட்டப் பண்புகளை அறிமுகம் செய்து கொண்டது அவனுக்கு எப்போதும் நலமாக முடியவில்லை. வன்ம நகைச் சுவையுடன் அவன் என்னிடம் அடிக்கடி கூறினான்:

‘‘எனக்கு உள்ளே இருப்பது எல்லாம் வெளியே வந்து விட்டால் நான் மேலே நடப்பது எப்படி? ஊம்? சொல்லு—எப்படி?’’

வேலை செய்து ஏதேனும் சம்பாதிக்கும் வாய்ப்புக்கள் எங்களுக்கு எதிர்ப்படவே இல்லை. ரொட்டி வாங்க ஒரு காசுகூட எங்களிடம் இல்லாததால் பழங்களையும் வருங்கால நம்பிக்கைகளையுமே நாங்கள் உணவாகக் கொண்டோம். சோம்பேறித் தனத்துக்காகவும்

"அங்காந்த வாய்த்தனம்" என்று அவன் குறித்த இயல்புக்காகவும் ஷக்ரோ என்னைக் கடிந்து கொள்ளத் தொடங்கினான். அவனைச் சகிப்பது பொதுவாகவே கடினம் ஆயிற்று. ஆனால் எல்லாவற்றையும் விட அதிகமாக, நம்ப முடியாத தன் கடும் பசியைப் பற்றிய கதைகளால் அவன் என்னைக் கொடுமைப்படுத்தினான். பகல் பன்னிரண்டு மணிக்குச் "சிறு ஆட்டுக் குட்டியைக்" காலை உணவாக உண்டு மூன்று புட்டி மது அருந்திய பின், இரண்டு மணிக்கு மூன்று தட்டு "சகாஹ்பீலி" அல்லது "சிகிர்த்மா", ஒரு தட்டு புலாவ், ஷஷ்லீக் என்னும் வாட்டல் கறித் துண்டுகள் ஒரு கோல் ஆகியவையும் "வேண்டிய அளவு தோல்மா" வும் இன்னும் பல வகையான காக்கேஷிய உணவுப் பண்டங்களும் அனாயாசமாகச் சாப்பிட்டு, இவற்றோடு "எவ்வளவு வேண்டி இருந்ததோ அவ்வளவு" மதுவும் அருந்தி மதிய உணவு கொள்ள அவனால் முடிந்ததாம். தனக்குப் பிடித்த உணவு வகைகள் பற்றியும் சுவையுணவுக் கலையில் தான் அறிந்தவற்றைப் பற்றியும் அவன் நாள் முழுதும் எனக்கு விவரிப்பான். அப்போது அவன் நாக்கைச் சப்புக் கொட்டுவான், அவனுடைய கண்களில் உற்சாகம் கனல் வீசும், பற்களைக் காட்டுவான், அவற்றை நெறு நெறுப்பான், சொல்வன்மை மிக்க வாயிலிருந்து பேரளவில் தெறிக்கும் உமிழ் நீரை ஓசையுடன் உறிஞ்சி விழுங்குவான்.

ஒரு முறை, யால்டாவின் அருகில், வெட்டிக் கலைந்த கொப்புகளை அகற்றிப் பழத் தோட்

டத்தைத் துப்புரவாக்கும் வேலையை நான் கூலிக்கு ஏற்று, ஒரு நாள் கூலியை முன்பண மாகப் பெற்றுக் கொண்டு, அந்த ஐம்பது கா சுக்கும் ரொட்டியும் இறைச்சியும் வாங்கி அவற் றை நான் கொண்டுவந்ததும் தோட்டக்காரன் என்னை அழைத்தான். தலைவலி என்ற சாக் கில் வேலை செய்ய மறுத்த ஷக்ரோவிடம் கடை யில் வாங்கிய இந்தப் பண்டங்களைக் கொடுத்து விட்டு நான் போனேன். ஒரு மணி நேரம் பொ றுத்துத் திரும்பியதும் ஷக்ரோ தன் பசியைப் பற்றிச் சொன்ன போது உண்மையின் வரம் பைத் தாண்டவில்லை என்பதை நேரில் கண்டு அறிந்தேன். நான் வாங்கி வந்த பண்டங்களில் ஒரு துணுக்குகூட மிஞ்சவில்லை. இது தோழ மை அற்ற செயலாக இருந்தது, எனினும் நான் பேசாதிருந்தேன். இது எனக்கே கேடாக முடிந் ததை அடுத்து நேர்ந்த நிகழ்ச்சிகள் காட்டின.

எனது மௌனத்தைக் கவனித்த ஷக்ரோ அதைத் தனக்கே உரிய முறையில் பயன்படுத் திக் கொண்டான். வியப்பூட்டும் விதத்தில் முட் டாள்தனமான ஒன்று தொடங்கியது. நான் வே லை செய்தேன். அவனோ, வெவ்வேறு சாக்கு கள் சொல்லி வேலை செய்ய மறுத்து, உண் பதும் உறங்குவதும் என்னை ஓட ஓட விரட்டு வதுமாக இருந்தான். உடல் நலம் வாய்ந்த அந்த இளைஞனைக் காண எனக்கு வேடிக்கை யாகவும் வருத்தமாகவும் இருந்தது.

நான் வேலையை முடித்து விட்டுக் களைப் புடன் அவனிடம் திரும்புவேன். எங்கேனும் நிழல் அடர்ந்த மூலையில் எனக்காகக் காத்

திருக்கும் அவன் பேரார்வத்துடன் என்னை விழிகளால் நோட்டம் பார்ப்பான். இதைவிட அதிக வருத்தமும் மனப் புண்ணும் ஏற்படுத்திய விஷயம் என்ன என்றால் நான் வேலை செய்ததற்காக அவன் என்னை எள்ளி நகையாடியது ஆகும். அவன் இயேசுவின் பெயரால் பிச்சை கேட்கப் பழகி விட்டதால் என்னைக் கேலி செய்தான். பிச்சை கேட்க ஆரம்பித்த புதிதில் என் முன்னே கூச்சப்பட்டான். ஆனால் பிறகு, நாங்கள் தார்த்தாரிய கிராமம் ஒன்றை நெருங்கியதும், பிச்சை எடுப்பதற்கு என் கண் முன்பே ஏற்பாடுகள் செய்து கொண்டான். இதற்காகத் தடியை ஊன்றியவாறு, கால் வலிப்பது போன்ற பாவனையில் அதைத் தரையில் இழுத்து இழுத்து நடந்தான், ஏனென்றால், சிக்கனக்காரத் தார்த்தாரியர்கள் நோய் நொடி அற்ற இளைஞனுக்குப் பிச்சை போட மாட்டார்கள் என்பதை அவன் அறிந்திருந்தான். நான் அவனுடன் விவாதித்தேன். இந்த மாதிரித் தொழில் எவ்வளவு வெட்கக் கேடானது என்பதை அவனுக்குச் சான்றுகள் காட்டி விளக்கினேன்...

"எனக்கு வேலை செய்யத் திறமை கிடையாது!" என்று அவன் எனக்குச் சுருக்கமாக மறுப்புக் கூறினான்.

அவனுக்குப் பிச்சை சொற்பமாகவே கிடைத்தது. அந்த சமயத்தில் எனக்கு உடம்பு சரியாய் இல்லை. பயணம் நாளுக்கு நாள் அதிகக் கடினமாகி வந்தது. ஷக்ரோவுடன் எனது உறவு அதிகச் சிக்கல் அடைந்தது. நான் அவனுக்கு

உணவு தேடித் தர வேண்டும் என்று அவன் இப்போது விடாப் பிடியாகக் கோரத் தொடங் கினான்.

வழக்கமான ஜார்ஜியப் பாங்கில் ருஷ்ய மொ ழியை உச்சரித்தவாறு அவன் சொன்னான்: ''நீ என்னை அழைத்துப் போகிறாய் அல்லவா? அழைத்துப் போ! கால்நடையாக இவ்வளவு தூரம் போக என்னால் முடியுமா என்ன? எனக்குப் பழக்கம் இல்லை. இதனால் நான் செத்து விடலாம்! எதற்காக என்னைத் தொல் லைப்படுத்துகிறாய், வதைக்கிறாய்? நான் மண்டை யைப் போட்டுவிட்டால் அப்புறம் என்ன ஆகும்? அம்மா அழுவாள், அப்பா அழுவார், நண்பர் கள் அழுவார்கள்! எவ்வளவு கண்ணீர், பார்!''

இந்த மாதிரிப் பேச்சுக்களைக் கேட்டு நான் கோபம் கொள்ளவில்லை. அந்தச் சமயத்தில் என் உள்ளத்தில் புகுந்த விந்தையான ஓர் எண்ணம் இதை எல்லாம் பொறுத்துக் கொள்ள என்னைத் தூண்டியது. சில வேளை களில் அவன் உறங்கிக்கொண்டிருப்பான், நான் அவன் அருகே உட்கார்ந்து அவனுடைய நிம் மதியான, அசைவற்ற முகத்தைப் பார்த்தபடி எதையோ குறித்து ஊகம் செய்தவாறு மனதுக் குள் திருப்பித் திருப்பிச் சொல்லிக் கொள் வேன்:

''என் வழித் துணைவன்... என் வழித் துணைவன்...''

நான் தனக்கு உதவவும் தன்னைப் பற்றிக் கவலை எடுத்துக்கொள்ளவும் வேண்டும் என்று மிகுந்த தன்னம்பிக்கையுடனும் துணிவுடனும்

கோரும் பொழுது ஷக்ரோ தன்னுடைய உரிமையைத் தான் பயன்படுத்திக் கொள்கிறான் என்ற எண்ணம் எனது மனத்திலும் சில வேளைகளில் எழுந்தது. இந்தக் கோரிக்கையில் மனோ திடமும் வலிமையும் இருந்தன. அவன் என்னை அடிமை கொண்டான். நான் அவனுக்குப் பணிந்தேன். அவனை ஆராய்ந்தேன், அவனது முகத்தின் ஒவ்வொரு சிறு அசைவையும் உற்றுக் கவனித்தேன். மற்றவனுடைய ஆளுமையை ஆக்கிரமிக்கும் இந்தச் செயல் முறையில் எந்த இடத்தில் அவன் நிற்பான் என்று புரிந்து கொள்ள முயன்றேன். அவனோ மகிழ்ச்சி பொங்கும் மன நிலையில் இருந்தான், பாடினான், உறங்கினான், விரும்பிய போது என்னைக் கேலி செய்து நகையாடினான். சில சந்தர்ப்பங்களில் நாங்கள் ஒருவரை ஒருவர் பிரிந்து இரண்டு, மூன்று நாள்களுக்கு வெவ்வேறு திசைகளில் செல்வோம். இருந்தால் பணமும் ரொட்டியும் அவனுக்குக் கொடுத்து எனக்காக அவன் எங்கே காத்திருக்க வேண்டும் என்பதைச் சொல்வேன். சந்தேக நோக்குடனும் துயர் ததும்பும் புன்னகையுடனும் எனக்கு விடை கொடுக்கும் அவன் நாங்கள் மீண்டும் சந்திக்கையில் களி பொங்க, வெற்றித் தோற்றத்துடன் என்னை எதிர் கொண்டு ஒவ்வொரு தடவையும் சிரித்தவாறு கூறுவான்:

''நீ என்னை விட்டு விட்டுத் தனியாகப் போய் விட்டாய் என்று நினைத்தேன்! ஹா, ஹா, ஹா!..''

அவனுக்குச் சாப்பிடக் கொடுத்து நான்

கண்ட அழகிய இடங்களை விவரிப்பேன். ஒரு முறை, பக்சிசராய் என்ற இடத்தை வருணித்த போது அதைக் களமாகக் கொண்டு காவியம் எழுதியுள்ள ருஷ்ய மகாகவி புஷ்கினைப் பற்றிச் சொல்லி அவருடைய கவிதைகளை மேற் கோள் காட்டினேன். இவை எல்லாம் அவன் மீது எவ்வித உளப்பதிவையும் ஏற்படுத்தவில்லை.

''ஏ, செய்யுள்களாம்! இவை செய்யுள்கள் அல்ல, பாட்டுக்கள்! எனக்கு ஒரு ஜார்ஜியனைத் தெரியும். அவன் பாடுவான் பாட்டு! அதுதான் பாட்டு!.. பாடத் தொடங்குவான்—அப்பப்பா!.. சத்தம் போட்டு... ரொம்பச் சத்தம் போட்டுப் பாடுவான்! யாரோ அவன் குரல்வளையைக் கட்டாரியால் குடைவது போல!.. அவன் ஒரு கடைக்காரனை வெட்டிக் கொன்று விட்டு இப் போது சைபீரியாவுக்குப் போயிருக்கிறான்.''

ஒவ்வொரு தரம் அவனிடம் திரும்பிய பிற கும் நான் அவனது மதிப்பில் முன்னிலும் அதிகமாகவும் கீழேயும் விழுந்து கொண்டு போனேன். அவனால் இதை என்னிடமிருந்து மறைக்க முடியவில்லை.

எங்கள் விவகாரங்கள் மோசமாக நடந்து கொண்டிருந்தன. வாரத்துக்கு ஒன்று அல்லது ஒன்றரை ரூபிள் சம்பாதிக்கும் வாய்ப்பு கிடைப் பதே எனக்கு அரும்பாடாக இருந்தது. இந்தப் பணம் இரண்டு பேருக்கு மிகக் குறைவாக இருந் தது என்று சொல்ல வேண்டியதில்லை. ஷக் ரோ எடுத்த பிச்சை அவனது உணவில் சிக்க னம் ஏற்படுத்தவில்லை. முந்திரிப் பழம், முலாம் பழம், உப்பிட்ட மீன், ரொட்டி, உலர் பழங்கள்

முதலிய எல்லாவற்றையும் வித்தியாசம் பாராட்டாமல் உள்ளே தள்ளும் சிறு கிடங்காக இருந்தது அவனுடைய வயிறு. நேரம் செல்லச் செல்ல அது அளவில் பெரிதாகிக் கொண்டு போனது போலவும் அதிக இரை கேட்பது போலவும் தோன்றியது.

ஏற்கெனவே இலையுதிர் காலம் தொடங்கி விட்டது என்றும் வழிப் பயணம் இன்னும் நீளமானது என்றும் தர்க்க பூர்வமாகக் கூறி, கிரிமியாவிலிருந்து என்னை விரைவில் புறப்படச் செய்ய ஷக்ரோ முயலத் தொடங்கினான். நான் அவன் கருத்துக்கு இணங்கினேன். தவிர, கிரிமியாவின் இந்தப் பகுதியை நான் இதற்குள் பார்த்து விட்டேன். ஆகவே எங்களிடம் இல்லாத "பணத்தைத் திரட்டும்" பொருட்டு நாங்கள் ஃபியதோசியா சென்றோம்.

அலூஷ்தாவிலிருந்து சுமார் இருபது கிலோ மீட்டர்கள் சென்ற பின் இரவைக் கழிப்பதற்காகத் தங்கினோம். கடற்கரை ஓரமாக நடக்க ஷக்ரோவை நான் இணங்க வைத்திருந்தேன். இது யாவற்றிலும் நீண்ட பாதை. ஆனாலும் கடற் காற்றைச் சுவாசிக்க எனக்கு விருப்பம் உண்டாயிற்று. நாங்கள் நெருப்பு மூட்டி அதன் அருகே படுத்தோம். மாலை அற்புதமாக இருந்தது. கரும் பச்சைக் கடல் எங்களுக்குக் கீழே பாறைகள் மீது மோதிக் கொண்டிருந்தது. இள நீல வானம் மேலே கம்பீர மௌனத்தில் ஆழ்ந்திருந்தது. எங்களைச் சுற்றிலும் செடிகளும் மரங்களும் தணிவாக இரைந்து கொண்டிருந்தன. சந்திரன் உதித்தது. சினார் மரத்

தின் சித்திரக் கோலப் பசுந்தழையின் நிழல் கள் தரையில் விழுந்தன. உற்சாகமாகவும் கணீ ரெனவும் ஒரு பறவை பாடிக்கொண்டிருந்தது. அதன் வெள்ளி மணி இசையொலிகள் அலை களின் சீராட்டும் தணிந்த சரசரப்பால் நிறைந்தி ருந்த காற்றில் கரைந்தன. அவை அடங்கியதும் ஏதோ ஒரு பூச்சியின் பதற்றமுள்ள சிலம்பல் கேட்டது. நெருப்பு குதூகலமாக எரிந்தது. அதன் தழல் சிவப்பு, மஞ்சள் மலர்களின் தகதகக்கும் பெரிய செண்டு போலக் காட்சி அளித்தது. அது வும் நிழல் வீசிற்று. இந்த நிழல்கள் நிலவின் சோம்பிய நிழல்களுக்கு முன் தங்கள் உயிர்த் துடிப்பினால் கருத்தை ஈர்ப்பவை போன்று எங்களைச் சுற்றிலும் குதித்தாடின. கடலின் அகன்ற எல்லை வட்டம் வெற்றாய் இருந்தது. அதற்கு மேலே வானம் மேகங்கள் இன்றித் தெளிவாய் இருந்தது. உள்ளத்தை மயக்கும் புதிரான விண் வெளி மீது மனத்தை ஈடுபடுத் தியவாறு பூமியின் விளிம்பில் இருப்பவன் போன்று நான் உணர்ந்தேன்... மாண்பு மிக்க ஒன்றின் அருகே இருக்கும் அச்சமூட்டும் உணர்வு என் உள்ளத்தை நிறைத்தது, நெஞ்சு திகிலால் உறைந்து போயிற்று.

திடீரென்று ஷக்ரோ உரக்கக் கெக்கலித் தான்.

"ஹா, ஹா, ஹா!.. உன் மூஞ்சி எப்படி அசடு வழிகிறது! அப்படியே ஆட்டுக் கடாவின் மூஞ்சி போல! ஆ, ஹா, ஹா, ஹா!.."

திடீரென்று இடியால் தாக்குண்டவன் போல நான் பயந்து போனேன். ஆனால் இது

...யின் திடீர்த் தாக்குதலைக் காட்டிலும் மோ
...க இருந்தது. இது கேலி என்பது உண்மை
... ஆனாலும் இதனால் மனம் எப்படிப் புண்
...து!.. ஷக்ரோ சிரிப்பினால் கண்ணீர் பெருக்
...னான். எனக்கோ, வேறு காரணத்தால்
...கை வந்து விடும் போல் இருந்தது. என்
...தொண்டையைக் கண்ணீர் அடைத்துக்கொண்
...து. என்னால் பேச முடியவில்லை. வெறித்த
...களால் அவனை நோக்கினேன். இதனால்
...வனுடைய சிரிப்பு அதிகம் ஆயிற்று. அவன்
...யிற்றைப் பிடித்துக்கொண்டு தரையில் உருண்
...ான். என்னாலோ, எனக்குச் செய்யப்பட்ட அவ
...திப்பிலிருந்து இன்னும் விடுபட முடியவில்
...லை... என் மனம் கொடுமையாகப் புண்படுத்
...தப்பட்டது. தாங்களே இது போன்ற அவமதிப்
...க்கு ஒருகால் ஆளான காரணத்தால் என்
...னைப் புரிந்து கொள்வார்கள் என நான் நம்
...ம் ஒரு சிலர் இந்தக் கொடுமையைத் தங்கள்
...னத்தில் மீண்டும் சீர்தூக்கிப் பார்ப்பார்கள்.

''நிறுத்து!'' என்று வெறியுடன் கத்தி
னேன். அவன் பயத்தால் திடுக்கிட்டான், ஆனால்
இன்னும் அவனால் அடக்கிக் கொள்ள முடிய
வில்லை. சிரிப்பு அலைகள் அவனை இன்ன
மும் ஆட்டிப் புடைத்தன. அவன் கன்னங்
களை உப்பி, கண்களைப் பரக்க விழித்தவன்,
திடீரென்று குலுங்கிக் குலுங்கிச் சிரித்தான்.
அப்போது நான் எழுந்து அவனிடமிருந்து வில
கிச் சென்றேன். காந்தும் மனத்தாங்கல் நஞ்
சினால் நிறைந்தவனாக, எண்ணங்கள் இன்றி,
அநேகமாகத் தன்னுணர்வு இன்றி நெடு நேரம்

நடந்தேன். நான் இயற்கை அனைத்தையும் தழுவி, அதன் மீது என் காதலை, ஓரளவு கவிஞுனான மனிதனின் ஆர்வம் நிறைந்த காத்லை, மௌனமாகவும் உளமாரவும் வெளியிட்டேன். இயற்கையோ, என்னை எனது காதலுக்காக ஷக்ரோவின் வடிவில் எள்ளி நகையாடியது! இயற்கைக்கும் ஷக்ரோவுக்கும் வாழ்க்கையின் எல்லா ஒழுங்கு முறைகளுக்கும் எதிராகக் குற்றப் பத்திரிகை படிப்பதில் நான் வெகு தூரம் முன்னேறி இருப்பேன், ஆனால் என் பின்னே் விரைந்த காலடி ஓசைகள் கேட்டன.

''கோபப் படாதே!'' என்று என் தோளை மெல்லத் தொட்டுத் தயக்கத்துடன் சொன்னான் ஷக்ரோ. ''நீ பிரார்த்தனை செய்து கொண்டிருந்தாயா? எனக்குத் தெரியாது.''

குறும்பு செய்து விட்ட சிறுவனின் பயந்த குரலில் அவன் பேசினான். குழப்பத்தாலும் அச்சத்தாலும் வேடிக்கையாகக் கோணியிருந்த அவனுடைய இரங்கத் தக்க முகத்தைப் பாராதிருக்க அந்த ஆத்திரத்திலும் கூட என்னால் முடியவில்லை.

''இனிமேல் நான் உன்னைச் சீண்ட மாட்டேன். மெய்யாக! ஒருபோதும்!''

அவன் மறுப்பைக் காட்டும் விதத்தில் தலை அசைத்தான்.

''நான் பார்த்தேன், நீ சாது, உழைக்கிறாய், என்னைக் கட்டாயப் படுத்துவதில்லை. எண்ணிப் பார்த்தேன், எதனால்? எதனால் என்றால், இவன் அசடன், ஆட்டுக் கடா போல...''

அவன் எனக்கு ஆறுதல் சொன்ன அழகு

இது! என்னிடம் அவன் மன்னிப்பு கேட்ட விதம் இது! சந்தேகம் இல்லாமல், இந்த மாதிரித் தேறுதல்களுக்கும் மன்னிப்பு கோரல்களுக்கும் பிறகு, அவனுடைய சென்ற காலக் குற்றங்களை மட்டும் அல்ல, வருங்காலக் குற்றங்களையும் மன்னிப்பதைத் தவிர நான் செய்வதற்கு ஒன்றும் இருக்கவில்லை.

அரை மணி நேரத்தில் அவன் ஆழ்ந்து தூங்கி விட்டான். நான் அவன் அருகில் உட்கார்ந்து அவனை நோக்கினேன். வலியவன் கூட உறக்கத்தில் தற்காப்பு இல்லாதவனாகவும் திக்கற்றவனாகவும் தோற்றம் அளிப்பான். ஷக்ரோ இரங்கத்தக்கவனாக இருந்தான். பருத்த உதடுகளும் உயர்த்திய புருவங்களும் சேர்ந்து அவனுடைய முகத்தைக் குழந்தைத்தனமும் மிரட்சியும் வியப்பும் கொண்டதாகக் காட்டின. அவன் சீராக, அமைதியாக மூச்சு விட்டான், ஆனால் சில வேளைகளில் சஞ்சலம் அடைந்து பிதற்றினான், கெஞ்சும் பாவனையில் ஜார்ஜிய மொழியில் விரைவாகப் பேசினான். எங்களைச் சுற்றிலும் இறுக்கம் நிறைந்த நிசப்தம் கொலு வீற்றிருந்தது. இத்தகைய நிசப்தத்திலிருந்து நாம் எப்போதும் எதையேனும் எதிர்பார்ப்போம். இது வெகு நேரம் நீடிக்க முடிந்தால் தனது முழு அமைதியாலும் இயக்கத்தின் பளிச்சிடும் நிழலான சந்தடி இன்மையாலும் மனிதனைப் பைத்தியம் ஆக்கி விடும். அலைகளின் தணிந்த சலசலப்பு எங்கள் காதுகளுக்கு எட்டவில்லை. நாங்கள் ஒரு கிடங்கில் இருந்தோம். ஒட்டிக்கொள்ளும் ஒருவகைப்

புதர்ச் செடிகள் அதில் அடர்ந்திருந்தன. கல் லாகி விட்ட விலங்கின் மயிரடர்ந்த மிடறு போல இருந்தது அது. நான் ஷக்ரோவைப் பார்த்துப் பின்வருமாறு எண்ணமிட்டேன்:

''இவன் என் வழித் துணைவன்... நான் இவனை இங்கே விட்டு விடலாம், ஆனால் இவனிடமிருந்து அப்பால் செல்ல முடியாது, ஏனென்றால் இவனுக்குப் பெயர்கள்—எண் ணிறந்தவை... இவன் என் வாழ்நாள் முழு வதற்கும் வழித் துணைவன்... கல்லறை வரை யில் இவன் என் உடன் வருவான்...''

ஃபியதோசியா எங்கள் எதிர்பார்ப்பைப் பொய்யாக்கி விட்டது. நாங்கள் அங்கே போன போது எங்களைப் போலவே வேலை தேவைப்பட் டவர்களும் அலைதாங்கிக் கட்டுமானத்தின் பார் வையாளர்களாக இருப்பதிலேயே திருப்தி அடையுமாறு கட்டாயப்படுத்தப்பட்டவர்களுமான சுமார் நானூறு பேர் அங்கே இருந்தார்கள். துருக்கியர்களும் கிரேக்கர்களும் ஜார்ஜியர்களும் ஸ்மலேன்ஸ்க் வாசிகளும் பல்தாவா வாசிகளும் வேலை செய்து கொண்டிருந்தார்கள். ''பஞ்சை களின்'' மகிழ்வற்றுச் சோர்ந்த உருவங்கள் நக ரிலும் அதைச் சுற்றிலும்—எங்கும்—கூட்டங் களாக அலைந்து திரிந்து கொண்டிருந்தன. அஸோவ், தவ்ரியா நாடோடிகள் ஓநாயின் கெச்சை நடையில் ஓடியாடிக் கொண்டிருந்தார் கள்.

நாங்கள் கெர்ச்சுக்குப் போனோம்.

என் வழித் துணைவன் தன் சொல்லைக் காப்பாற்றினான். அவன் என்னைச் சீண்டவில்

லை. ஆனால் அவன் கடும் பட்டினி கிடந்தான். யாராவது சாப்பிடுவதைக் கண்டு வெளிப்படை யாக ஓநாய் போலப் பற்களை நெறு நெறுத் தான். தான் விழுங்க ஆயத்தமாய் இருந்த வெவ் வேறு உணவுப் பண்டங்களின் அளவுகளை விவரித்து என்னைப் பெருந் திகிலில் ஆழ்த்தி னான். சிறிது காலமாக அவனுக்குப் பெண் கள் நினைவு வரத் தொடங்கியிருந்தது. முதலில் ஜாடைமாடையாக, வருத்தப் பெருமூச்சுக்களு டன் பெண்களைப் பற்றிப் பேசினான். பின்பு அடிக்கடி, "கிழக்கத்திப் பேர்வழியின்" பேரா சை ததும்பும் புன்னகையுடன் பேசலானான். கடைசியில், ஒரு பெண்பால் அருகாகச் சென் றால் அவளுடைய வயதும் வெளித்தோற்றமும் எத்தகையனவாக இருந்தாலும் அவளுடைய உடல் வாகின் ஏதேனும் ஓர் அம்சம் பற்றி நடை முறைத் தத்துவ ஆபாசக் கருத்தை என்னோடு பகிர்ந்து கொள்ளாமல் அவன் விடுவதில்லை என்னும் அளவுக்கு விவகாரம் முற்றிவிட்டது! பெண்களைப் பற்றி அவன் நாக்கில் நரம்பின்றி யும் விஷய ஞானத்துடனும் பேசியதைக் கேட் டும் வியப்பூட்டும் வெளிப்படையான நோக்கு டன் அவன் பெண்களைப் பார்த்ததைக் கண் டும் அருவருப்புடன் காறித் துப்புவது தான் என் னால் முடிந்தது... பெண் அவனுக்கு எந்த விதத்திலும் குறைந்தவள் அல்ல என்று அவ னுக்குச் சான்று காட்டி விளக்க ஒருதரம் நான் முயன்றேன். ஆனால் என் கருத்துக்களுக்காக அவன் என்மேல் மனத்தாங்கல் கொண்டதோடு நில்லாமல் நான் தன்னை இழிவுபடுத்துவதாக

எண்ணி வெறி கொள்ள முற்பட்டதைக் கண்டு, அவன் வயிறார உண்ணும் வரை என் முயற்சி களைக் கட்டி வைக்க முடிவு செய்தேன்.

பயணப் பாதையைக் குறுக்கும் நோக்கத்து டன் கெர்ச்சுக்குக் கடற்கரை ஓரமாகப் போ காமல் ஸ்தெப்பி வழியே நடந்தோம். எங்கள் கடைசி ஐந்து காசுக்கு ஒரு தார்த்தாரிய மாதி டம் வாங்கிய மூன்று ராத்தல் எடையுள்ள ஒரு வாற்கோதுமை அடை மட்டுந்தான் எங்கள் பய ணப் பையில் இருந்தது. ஊர் ஊராக உணவுப் பிச்சை எடுக்க ஷக்ரோ செய்த முயற்சிகள் ஒரு பயனும் விளைக்கவில்லை. ''நீங்கள் நிறையப் பேர்!..'' என்ற சுருக்கமான பதில் எங்கும் கிடைத்தது. இது பேருண்மை. அந்த நெருக்கடி ஆண்டில் ஒரு துண்டு ரொட்டி கிடைக்காதா என்று தேடி அலைந்தவர்களின் எண்ணிக்கை அச்சந்தரும் அளவுக்கு அதிகமாய் இருந்தது.

பிச்சை எடுப்பதில் தன்னுடன் போட்டிக்கு வந்த ''பஞ்சைகளை'' என் வழித் துணை வனால் சகிக்க முடியவில்லை. பயணம் கடின மாகவும் ஊட்டம் மோசமாகவும் இருந்தாலும் உயிராற்றல் சேமிப்பு காரணமாக நொய்ந்த, பரிதாபகரமான தோற்றத்தை வருவித்துக் கொள்வது அவனுக்கு இயலவில்லை. அவர்க ளோ, நியாயமாகக் கூறினால், இதில் தங்க ளுக்கு ஏற்பட்டிருந்த தேர்ச்சியைக் குறித்துப் பெருமை கொள்ள முடிந்தது. அவர்களைத் தொலைவில் கண்டதுமே அவன் சொல்வான்:

''மறுபடி வருகிறார்கள்! த்தூ, த்தூ, த்தூ! எதற்காக வருகிறார்கள்? எதற்காகத் திரிகிறார்

கள்? ருஷ்யாவில் இடம் பற்றவில்லையோ? எனக்குப் புரியவில்லை! ருஷ்ய மக்கள பெருத்த அசடர்கள்!''

ரொட்டியைத் தேடிக் கிரிமியா செல்லுமாறு அசட்டு ருஷ்ய மக்களைத் தூண்டும் காரணங்களை நான் அவனுக்கு விளக்கிய போது அவன் நம்பிக்கை இன்றித் தலையை அசைத்து, என் பேச்சை மறுத்தான்:

''எனக்குப் புரியவில்லை! இது எப்படி முடியும்?.. எங்கள் ஜார்ஜியாவில் இந்த மாதிரி அசட்டுத்தனங்கள் கிடையாது!''

நாங்கள் கெர்ச் போய்ச் சேர்ந்த போது இருட்டி விட்டது. ஆகவே நாங்கள் கப்பல் துறையை ஒட்டிக் கரையோரத்தில் அமைந்த இடைவழியின் அடியில் இரவைக் கழிக்க வேண்டியதாயிற்று. மறைந்து கொள்வது எங்களுக்கும் அவசியமாக இருந்தது. நாங்கள் வந்ததற்குச் சற்று முன்பு தேவையற்றவர்களான நாடோடி மக்கள் அனைவரும் கெர்ச்சிலிருந்து வெளியேற்றப்பட்டதை நாங்கள் அறிந்திருந்தோம். போலீசிடம் அகப்பட்டுக் கொள்வோமோ என்று பயந்தோம். ஷக்ரோ வேற்றானுடைய பாஸ்போர்ட்டுடன் பயணம் செய்த படியால் எங்கள் விவகாரம் இதனால் பெரிதும் சிக்கலாகி இருக்கலாம்.

கெர்ச் நீரிணைப்பின் அலைகள் இரவு முழுவதும் எங்கள் மீது தாராளமாகத் தூவானம் தெறித்த வண்ணமாக இருந்தன. அதிகாலையில் நாங்கள் நனைந்து, குளிரால் விறைத்தவர்களாக இடை வழியின் அடியிலிருந்து வெளிவந்

தோம். பகல் முழுதும் கரையோரமாக நடந்து கொண்டிருந்தோம். சந்தையிலிருந்து ஒரு மூட்டை முலாம் பழங்களை வீடு வரை சுமந்த தற்காகப் பாதிரிச்சி ஒருத்தி எனக்குப் பத்து கோப்பெக்கு கொடுத்தாள். நாங்கள் சம்பாதிக்க முடிந்தது எல்லாம் அவ்வளவு தான்.

நீரிணைப்பைக் கடந்து தமான் போய்ச் சேர வேண்டி இருந்தது. நான் எவ்வளவோ கெஞ்சிக் கேட்டும் எங்களைத் துடுப்பு வலிப்பவர்களாக மறு கரைக்கு இட்டுச் செல்லப் படகுக்காரன் எவனும் இணங்கவில்லை. நாங்கள் வருவதற்குச் சற்று முன்பு நாடோடிகள் இங்கே பல ''வீர தீரச்'' செயல்கள் புரிந்திருந்ததால் எல்லாரும் அவர்களுக்கு எதிராகக் கிளர்ந்து எழுந்திருந்தார்கள். எங்களையும் இத்தகைய நாடோடிகள் என்று காரணத்துடனேயே அவர்கள் எண்ணினார்கள்.

மாலை ஆனபோது எனது தோல்விகள் மீதும் உலகு அனைத்தின் மீதும் உண்டான ஆத்திரத்தால் ஓரளவு ஆபத்தான செயலை மேற்கொள்ள நான் முடிவு செய்தேன். இருட்டியதும் அதை நிறைவேற்றினேன்.

## 4

இரவில் நானும் ஷக்ரோவும் சந்தடி செய்யாமல் சுங்கக்காவற் கப்பலை நெருங்கினோம். அதன் அருகே மூன்று படகுகள் கரையோரக் கற்சுவரில் திருகாணிகளால் பொருத்தப்பட்டிருந்த வளையங்களில் சங்கிலிகளால்

இணைக்கப்பட்டு நின்றன. இருட்டாக இருந்தது, காற்று வீசிற்று, படகுகள் ஒன்றன் மேல் ஒன்று மோதின, சங்கிலிகள் கணகணத்தன... வளையத்தை ஆட்டிக் கற்களிலிருந்து பிடுங்குவது எனக்குச் சௌகரியமாக இருந்தது.

எங்களுக்கு மேலே, ஒரு பன்னிரண்டு அடி உயரத்தில் சுங்கப் பாராச் சேவகன் பற்களின் ஊடாகச் சீழ்க்கை அடித்தவாறு நடந்து கொண்டிருந்தான். அவன் எங்கள் அருகாமையில் நின்ற போது நான் வேலையை இடை நிறுத்தினேன். ஆனால் இது தேவையற்ற எச்சரிக்கை, கீழே கழுத்தளவு நீரில் ஒருவன் உட்கார்ந்திருப்பதாக அநுமானிக்க அவனால் முடிந்திராது. தவிரவும் சங்கிலிகள் என் உதவி இல்லாமலே இடையறாது ஒலித்துக் கொண்டிருந்தன. ஷக்ரோ படகின் தளத்தில் ஏற்கெனவே படுத்து என்னிடம் எதையோ கிசுகிசுத்தான். அலைகளின் ஓசை காரணமாக அவன் சொன்னதைப் புரிந்து கொள்ள என்னால் முடியவில்லை. வளையம் என் கையோடு வந்து விட்டது... அலை படகைத் தூக்கிக் கரையிலிருந்து அடித்துச் சென்றது. நான் சங்கிலியைப் பிடித்துக் கொண்டு படகின் அருகே நீந்தினேன், பின்பு அதில் ஏறிக் கொண்டேன். இரண்டு அடிப் பலகைகளைப் பிடுங்கித் துடுப்புகளுக்குப் பதிலாகக் கொண்டிகளில் பொருத்திப் படகைச் செலுத்தினோம்...

அலைகள் அடித்தன. படகின் பின் பகுதியில் உட்கார்ந்திருந்த ஷக்ரோ ஒரு முறை பின் பகுதியோடு சேர்ந்து தாழ்ந்து என் பார்வையிலி

ருந்து மறைந்தான், மறு முறை எனக்கு மேலே உயரே எழும்பிக் கூச்சலிட்டவாறு அநேகமாக என் மேல் விழுந்தான். பாராச் சேவகன் காதில் அவனுடைய குரல் பட வேண்டும் என்று விரும் பாவிட்டால் கூச்சலிடாமல் இருக்கும்படி அவ னுக்கு யோசனை சொன்னேன். அதன் பின் அவன் மௌனமானான். அவன் முகத்தின் இடத்தில் வெண் புள்ளியை நான் கண்டேன். அவன் ஓயாமல் சுக்கான் பிடித்திருந்தான். வேலைகளை மாற்றிக்கொள்ள எங்களுக்கு நே ரம் இல்லை. படகில் ஓர் இடத்திலிருந்து வேறு இடத்திற்கு மாற நாங்கள் அஞ்சினோம். படகை எப்படிச் சரியான திசையில் திருப்ப வேண்டும் என்று நான் கத்தி அவனுக்குப் போதித்தேன். அவன் உடனே என்னைப் புரிந்து கொண்டு மாலுமியாகப் பிறந்தவன் போல எல்லாவற்றை யும் துடியாகச் செய்தான். துடுப்புகளுக்கு மாற் றாக இருந்த பலகைகள் எனக்கு அவ்வளவாக உதவவில்லை. காற்று எங்களுக்கு இசைவாக வீசிற்று. படகு எங்கே போகிறது என்பது பற்றி நான் வெகுவாகக் கவலைப்படவில்லை. படகின் முன் முனை நீரிணைப்புக்கு குறுக்காக இருக் கும்படி பார்த்துக் கொள்ள மட்டுமே நான் முயன்றேன். கொர்ச் விளக்குகள் இன்னும் தெ ரிந்தபடியால் இதைத் தீர்மானிப்பது எளிதாய் இருந்தது. அலைகள் படகின் பக்கங்களைத் தாண்டி எங்களை எட்டிப் பார்த்துச் சீற்றத் துடன் இரைந்தன. நீரிணைப்பில் படகு மேலே போகப் போக அலைகள் வர வர உயரமாயின. தொலைவில் காட்டுத்தனமான பயங்கர முழக்

கம் கேட்டது... படகு மேன்மேலும் விரைவாக முன்னேறியது. படகைச் சரியான திசையில் செலுத்துவது மிகக் கடினமாக இருந்தது. நாங்கள் நொடிக்கு ஒரு தரம் ஆழ்ந்த பள்ளங்களில் விழுவதும் நீர் மேடுகள் மேல் ஏறுவதுமாக இருந்தோம். இரவு வர வர அதிக இருட்டாயிற்று. மேகங்கள் கீழே தாழ்ந்தன. படகின் பின் பகுதிக்கு அப்பால் சுடர்ந்த விளக்குகள் இருளில் ஆழ்ந்தன. அப்போது திகில் பற்றிக் கொண்டது. சீற்றம் பொங்கிய நீர்ப் பரப்பு எல்லை அற்றது போலத் தோன்றியது. இருளிலிருந்து பாய்ந்து வந்த அலைகள் தவிர வேறு எதுவும் பார்வைக்குப் புலப்படவில்லை. அவை ஒரு பலகையை என் கைகளிலிருந்து பிடுங்கிச் சென்றன. மற்றதை நானே படகின் தளத்தில் போட்டு விட்டு இரு கைகளாலும் படகின் பக்கங்களை இறுகப் பற்றிக் கொண்டேன். படகு எம்பிக் குதித்த ஒவ்வொரு தடவையும் ஷக்ரோ விலங்குக் குரலில் ஊளையிட்டான். இந்த இருளில், சீற்றம் பொங்கிய இயற்கைச் சக்திகளாலும் காதைச் செவிடாக்கும் அவற்றின் இரைச்சலாலும் சூழப்பட்டு நான் அற்பமாகவும் திக்கற்றவனாகவும் இருப்பதை உணர்ந்தேன். நெஞ்சில் வருங்கால நம்பிக்கை இன்றி, வன்மம் நிறைந்த புகலின்மையால் ஆட்கொள்ளப்பட்டுச் சுற்றிலும் பார்வை செலுத்தியவன், உப்பு நீர்த் தூவானத்தைத் தெறித்துக்கொண்டிருந்த வெண் பிடரிகள் கொண்ட இந்த அலைகளைத் தான் கண்டேன். எனக்கு மேலே அடர்ந்த, பறட்டை மேகங்களும் அலைகளை

ஒத்திருந்தன... ஒன்றை மட்டும் நான் புரிந்து கொண்டேன். என்னைச் சுற்றி நிகழ்ந்தவை எல்லாம் அளவுகடந்து அதிக வலிமையும் அதிக பயங்கரமும் உள்ளவையாக இருந்திருக்கலாம், ஆனால் அவை அவ்வாறு இருக்க விரும்பாமல் தங்களைக் கட்டுக்குள் வைத்திருக்கின்றன என்பது அது. இதனால் என் மனம் புண்பட்டது. சாவு தவிர்க்க முடியாதது. ஆனால் உணர்ச்சி வேகம் அற்ற, எல்லாவற்றையும் சமப்படுத்துகிற இந்த விதியை எதனாலாவது கவர்ச்சி உள்ளது ஆக்குவது அவசியம்—இது மிக மிகக் கடுமையானது, முரடானது. நெருப்பில் வெந்தோ சதுப்பு நிலப் புதை சேற்றில் ஆழ்ந்தோ நான் சாக வேண்டி இருந்தால் நான் நெருப்பைத் தெரிந்தெடுக்க முயல்வேன். என்ன ஆனாலும் அது அதிகக் கண்ணியமானது...

. . . . . . . . . . . . . . . .

''பாய் விரிப்போம்!'' என்று கத்தினான் ஷக்ரோ.

''எங்கே பாய்?'' என்று வினவினேன்.

''என் மேல் சட்டையால் செய்வோம்...''

''அதை இப்படிப் போடு! சுக்கானை விட்டு விடாதே!..''

ஷக்ரோ பேசாமல் படகின் பின் பகுதியில் தன் வேலையில் முனைந்தான்.

''இந்தா, பிடி!..''

தன் மேல் சட்டையை என்னிடம் எறிந்தான். படகின் தளத்தில் எப்படியோ ஊர்ந்து இன்னொரு அடிப்பலகையைப் பெயர்த்து எடுத்தேன். அழுத்தமான சட்டையின் கைக்குள் அதை

நுழைத்தேன், அதைப் படகின் பெஞ்சி அருகில் நாட்டினேன், கால்களால் அழுத்திக்கொண்டு சட்டையின் மற்றக் கையையும் தலைப்பையும் கையில் எடுத்துக் கொண்டேன். அப்போது எதிர் பாராதது நிகழ்ந்தது... படகு வழக்கத்தை விட அதிக உயரத்தில் துள்ளி அதே விரைவுடன் கீழே பாய்ந்தது. நான் ஒரு கையால் சட்டையை யும் மறு கையால் படகின் பக்கப் பகுதி மேல் இழுத்துக் கட்டப்பட்டிருந்த கயிற்றையும் பிடித் துக்கொண்டு நீரில் மிதந்தேன். அலைகள் இரைச்சலுடன் என் தலைக்கு மேல் தாவின. உவர்ப்பும் கைப்பும் கொண்ட நீரை விழுங்கி னேன். அது என் காதுகளையும் வாயையும் மூக் கையும் நிறைத்தது... கைகளால் கயிற்றை இறு கப் பற்றிக் கொண்டு நீரில் எழுவதும் தணி வதுமாக இருந்தேன். என் தலை படகின் பக்கப் பகுதி மேல் இடித்துக்கொண்டது. சட்டையைப் படகின் அடித் தளத்தில் எறிந்து விட்டு நானும் அதன் மேல் துள்ளி ஏற முயன்றேன். எத்தனை யோ தடவைகளுக்குப் பின் ஒரு முயற்சி பலித் தது. நான் படகின் மேல் ஏறி அமர்ந்தவன், அப் போது தான் நான் விட்ட கயிற்றை இரண்டு கை களால் பற்றிக்கொண்டு ஷக்ரோ நீரில் குட்டிக் கரணம் போடுவதைக் கண்டேன். இந்தக் கயிறு பக்கப் பகுதியில் இருந்த இரும்பு வளையங் களில் கோக்கப்பட்டுப் படகு முழுவதையும் வளைத்துக் கட்டப்பட்டிருந்தது என்று தெரிய வந்தது.

''உயிரோடு இருக்கிறாயா!'' என்று அவனை நோக்கிக் கத்தினேன்.

அவன் நீருக்கு உயரே துள்ளிப் படகின் அடித்தளத்தில் தடாலென்று விழுந்தான். நான் அவனைப் பிடித்துக்கொண்டேன். இருவரும் எதிர் எதிராக இருந்தோம். நான் குதிரைச் சவாரி செய்பவன் போலப் படகின் மேல் அமர்ந்து, அங்க வடியில் போன்று கயிற்றில் கால்களை நுழைத்துக் கொண்டிருந்தேன். ஆனால் இது உறுதியற்றதாக இருந்தது. எந்த அலையும் என்னை இருக்கையிலிருந்து எளி தில் அடித்து வீழ்த்திவிடலாம். ஷக்ரோ என் முழங்கால்களைக் கைகளால் கட்டிக்கொண்டு என் மார்பில் தலையை அழுத்திக்கொண்டிருந் தான். அவன் உடல் நடுங்கியது. அவனுடைய தா டைகள் கடகடவென்று அடித்துக்கொண்டதை நான் உணர்ந்தேன். ஏதேனும் செய்வது அவ சியமாக இருந்தது! படகின் அடித்தளம் எண் ணெய் பூசியது போல வழுக்கியது. மறுபடி தண் ணீரில் இறங்கிப் படகின் ஒரு பக்கத்தில் கயிற் றைப் பற்றிக் கொள்ளும் படியும் நான் அப் படியே மறு பக்கம் பிடித்துக்கொண்டு நீரில் மிதப்பதாகவும் அவனிடம் சொன்னேன். விடை அளிப்பதற்குப் பதிலாக அவன் தலையால் மார்பில் இடித்து என்னைத் தள்ளத் தொடங்கி னான். அலைகள் வெறியாட்டம் ஆடியவாறு ஓயாமல் எங்களைத் தாவின. படகில் நிலைத் திருப்பது எங்களுக்கு அரும்பாடாக இருந்தது. என் ஒரு காலைக் கயிறு பயங்கரமாக அறுத்து விட்டது. சுற்றிலும் பார்வைப் புலத்தில் உயர மான நீர்த் திட்டுகள் தோன்றுவதும் இரைச்ச லுடன் மறைவதுமாக இருந்தன.

ஏற்கெனவே சொன்னதை ஆணையிடும் தோரணையில் திரும்பக் கூறினேன். ஷக்ரோ என் மார்பில் தலையால் இன்னும் வலிவாக இடிக்கலானான். சுணங்குவது கூடாததாக இருந்தது. என் மீதிருந்து அவன் கைகளை ஒன்றன் பின் ஒன்றாக விலக்கி அவனை நீரில் தள்ள முற்பட்டேன். அவன் கைகளால் கயிற் றைப் பற்றிக் கொள்ளும் படிச் செய்ய முயன் றேன். அந்த இரவில் எனக்கு வேறு எதையும் விட அதிகமாக அச்சம் ஊட்டிய ஒன்று அப் போது நிகழ்ந்தது.

''என்னை மூழ்கடிக்கிறாயோ?'' என்று கிசு கிசுத்து என் முகத்தை உறுத்துப்பார்த்தான் ஷக்ரோ.

இது மெய்யாகவே அச்சம் ஊட்டியது! அவ னுடைய கேள்வி பயங்கரமாக இருந்தது. கேட்ட மாதிரியோ, இன்னும் அதிகப் பயங்கரமாக இருந்தது. மிரண்டு பணியும் தன்மையும் இரக் கம் காட்டும்படி வேண்டும் இறைஞ்சலும் அழி வைத் தவிர்க்கும் நம்பிக்கையை இழந்து விட்ட மனிதனின் இறுதிப் பெரு மூச்சும் அதில் ஒலித் தன. செத்தது போல் வெளிறி நனைந்திருந்த முகத்தில் விழிகள் எல்லாவற்றையும் விடப் பயங்கரமாக இருந்தன!..

''கெட்டியாகப் பிடித்துக்கொள்!'' என்று கத்தி விட்டு நான் கயிற்றைப் பிடித்துக் கொண்டு நீரில் இறங்கினேன். என் கால் எதிலோ இடித் துக் கொண்டது. வலி காரணமாக முதற் கணத் தில் எனக்கு ஒன்றையும் புரிந்து கொள்ள முடியவில்லை. ஆனால் பின்பு புரிந்து கொண்

டேன். எனக்குள் சூடான ஒன்று ஊற்றெடுத்துப் பொங்கியது. நான் இன்ப வெறி கொண்டேன். நான் வலியவன் என்ற உணர்வு ஒருபோதும் இல்லாத அளவு எனக்கு ஏற்பட்டது...

''தரை!'' என்று ஆர்ப்பரித்தேன்.

புதிய பிரதேசங்களைக் கண்டு பிடித்த மா பெரும் கடற் பயணிகள் அவை தென்பட்ட போது இந்தச் சொல்லை என்னை விடப் பெருத்த உணர்ச்சியுடன் ஒருவேளை கத்தி இருப்பார்கள். ஆனால் என்னை விட உரக்கக் கத்தி இருப்பார் களா என்பதில் எனக்குச் சந்தேகந்தான். ஷக் ரோ ஊளையிட்டான், நாங்கள் நீரில் குதித்துக் கூத்தாடினோம். ஆனால் விரைவில் எங்கள் உற்சாகம் தணிந்து விட்டது. தண்ணீர் இன்னும் எங்கள் மார்பளவு இருந்தது, உலர்ந்த கரை யின் அதிகத் திண்ணமான அடையாளம் எது வும் எங்கும் தென்படவில்லை. இங்கே அலை கள் பலம் குன்றி இருந்தன. அவை எம்பிக் குதிக்கவில்லை, சோம்பலுடன் எங்களைத் தாண்டி உருண்டு சென்றன. நல்ல வேளையாக நான் படகை விட்டு விடவில்லை. ஷக்ரோவும் நானும் இப்போது அதன் இரு மருங்கிலும் நின்று காப்புக் கயிறுகளைப் பிடித்துக்கொண்டு படகை உடன் இழுத்தவாறு ஜாக்கிரதையாக எங்கோ நடந்தோம்.

ஷக்ரோ ஏதோ முணுமுணுத்து வாய்விட்டுச் சிரித்தான். நான் கவலையுடன் நாற் புறமும் கண்ணோட்டினேன். இருட்டாய் இருந்தது. எங் கள் பின்னேயும் வலப் புறமும் அலையோசை அதிகப் பலமாய் ஒலித்தது. முன்னேயும் இடப்

—றமும் சந்தடி குறைவாய் இருந்தது. நாங்கள் அப்புறம் சென்றோம். மணல் தரை உறுதி யாக இருந்தது. ஆனால் அதில் எங்கும் கிடங்கு கள். சில இடங்களில் அடித் தரை கால்களுக்கு எட்டவில்லை. அங்கே, ஒரு கையால் படகைப் பற்றிக் கொண்டு மறு கையாலும் கால்களாலும் நீரைத் துழாவி நீந்தினோம். சில இடங்களில் தண்ணீர் முழங்கால் அளவு தான் இருந்தது. ஆழமான இடங்களில் ஷக்ரோ ஊளையிட்டான், நான் பயத்தால் நடுங்கினேன். திடீரென்று உய்ய வழி கிடைத்து விட்டது! எங்களுக்கு முன் னே நெருப்புப் பளிச்சிட்டது...

ஷக்ரோ முடிந்த வரை உரக்கக் கூச்சலிடத் தொடங்கினான். ஆனால் படகு அரசாங்கத்தின் சொத்து என்பதை நான் நன்றாக நினைவு வைத்திருந்தேன், அவனுக்கும் நினைவுபடுத் தினேன். அவன் சற்று நேரம் பேசாதிருந் தான், ஆயினும் சில நிமிடங்களுக்குப் பின் அவன் தேம்பி அழுவது கேட்டது. என்னால் அவனைத் தேற்ற முடியவில்லை. தேற்ற வகை இல்லை.

நீர் வர வரக் குறைந்து கொண்டு போ யிற்று... முழங்கால் வரை... கணுக்கால் வரை... நாங்கள் அரசாங்கப் படகைத் தள்ளிக் கொண்டு முன்னே சென்றோம். இப்போது எங்களுக்குத் திராணி இல்லை, ஆகவே நாங்கள் அதை விட்டு விட்டோம். நாங்கள் நடந்த வழியில் கரிய மரக் கிளை ஒன்று நீரில் ஆழ்ந்திருந்தது. நாங்கள் அதைத் தாண்டிக் குதித்தோம். முள் உள்ள ஏதோ புல்லின் மேல் இருவரும் வெறுங்



14

கால்களால் மிதித்து விட்டோம். எங்களுக்கு வலித்தது. தரை எங்களை வரவேற்ற விதம் விருந்தோம்பும் தன்மை அற்றதாக இருந்தது. ஆனால் நாங்கள் இதைப் பொருட்படுத்தாமல் நெருப்பை நோக்கி ஓடினோம். அது எங்களுக்கு ஒரு கிலோமீட்டர் தொலைவில் இருந்தது. அது குதூகலமாகத் தழல் வீசி எங்களை எதிர் கொண்டு முறுவலித்தது போல் இருந்தது.

## 5

... பிரமாண்டமான மூன்று சடை நாய்கள் இருட்டில் எங்கிருந்தோ எங்களை நோக்கிப் பாய்ந்தன. ஓயாமல் தேம்பி அழுது கொண் டிருந்த ஷக்ரோ ஊளையிட்டுத் தரையில் விழுந் தான். நான் நனைந்த மேல் சட்டையை நாய்கள் மேல் எறிந்து விட்டுக் குனிந்து கற்களோ கழி யோ தட்டுப்படுகிறதா என்று கையால் தேடித் துழாவினேன். ஒன்றும் இல்லை. புல் தான் கை களில் குத்தியது. நாய்கள் தாவி வந்தன. நான் வாயில் இரண்டு விரல்களை நுழைத்துக் கொண்டு முழு பலத்தையும் ஈடுபடுத்திச் சீழ்க் கை அடித்தேன். அவை அப்பால் துள்ளிச் சென் றன. காலடிகளின் ஓசையும் ஓடிவந்த மாந்தர் களின் குரல்களும் கேட்டன.

சில நிமிடங்களில் நாங்கள் ஆட்டு ரோமக் கம்பளி மேலுடைகள் அணிந்திருந்த நான்கு மேய்ப்பர்களின் குழுவில் நெருப்பின் அருகே இருந்தோம்.

இருவர் தரையில் அமர்ந்து புகைத்துக்

கொண்டிருந்தார்கள். அடர்ந்த கருந்தாடி வைத்த நெட்டையன் ஒருவன், கஸாக்கு ஆட்டுத் தோல் நெடுந் தொப்பி அணிந்து நுனியில் பெருத்த வேர்க் கூம்புள்ள தடியை ஊன்றிப் பின்னால் நின்றான். சணல் முடி இளைஞனான நான்காமவன் அழுது கொண்டிருந்த ஷக்ரோவுக்கு உடை களைய உதவினான். எங்களுக்கு ஒரு பத்து மீட்டர் தொலைவில் அடர்ந்து சாம்பல் நிறமான அலை படிந்த கனத்த பாளத்தால் பெரிய நிலப் பரப்பு மூடப் பட்டிருந்தது. இளகத் தொடங்கி விட்ட வசந்த கால வெண்பனி போன்று இருந்தது அது. நீண்ட நேரம் உற்றுப் பார்த்த பின்னரே ஒன்றோடொன்று அடையாக ஒட்டிக் கொண்டிருந்த செம்மறிகளின் தனி உருவங்களைக் கண்டு கொள்ள முடிந்தது. இங்கே பல ஆயிரம் செம் மறிகள் இருந்தன. உறக்கத்தாலும் இரவின் இருளாலும் அடர்ந்த வெதுவெதுப்பான பருத்த பாளமாக இறுக்கப்பட்டு ஸ்தெப்பியை மூடி இருந்தன அவை. சில வேளைகளில் அவை மிரட்சியுடனும் முறையிடுபவை போன்றும் மே என்று கத்தின...

மேல் சட்டையை நெருப்புச் சூட்டில் உலர்த் தியவாறு நடந்தவற்றை எல்லாம் நடந்தபடி மேய்ப்பர்களுக்கு விவரித்தேன். படகைக் கைப் பற்றிய விதத்தையும் கூறினேன்.

“எங்கே அது, அந்தப் படகு?” என்று கேட்டான் கடுத்தமான நரை முடிக் கிழவன். என் மீதிருந்து பார்வையை அவன் அகற்றவே இல்லை.

நான் சொன்னேன்.

"மிகால், போய்ப் பார்!"

மிகால்—அவன்தான் கருந்தாடிக்காரன்— தடியைத் தோள் மேல் சாத்திக் கொண்டு கடற்கரைக்குச் சென்றான்.

குளிரால் நடுங்கிய ஷக்ரோ வெதுவெதுப் பாக, ஆனால் இன்னும் ஈரமாக இருந்த மேல் சட்டையைத் தனக்குக் கொடுக்கும்படி என்னிடம் கேட்டான். ஆனால் கிழவன் சொன் னான்:

"பொறு! முதலில் ஓடி இரத்தத்தைச் சூடாக்கிக்கொள். நெருப்பைச் சுற்றி ஓடு, ஊம்!"

ஷக்ரோ முதலில் புரிந்து கொள்ளவில் லை. ஆனால் அப்புறம் திடுமென்று துள்ளித் தாவி, வெற்றுடம்போடு காட்டுத்தனமான நட னம் ஆடத் தொடங்கினான். பந்து போல நெருப்பைத் தாண்டிக் குதித்தான், ஓர் இடத் தில் சுழன்றான், தரையைக் கால்களால் தொப்புத் தொப்பென்று அடித்தான், முழுக் குரலெடுத்து உரக்கக் கத்தினான், கைகளை வீசி ஆட்டினான். அது வேடிக்கையான காட்சி யாக இருந்தது. இரண்டு மேய்ப்பர்கள் ஓகோ கோவென்று உரக்க நகைத்தவாறு தரையில் உருண்டார்கள். கிழவனோ, கலங்காமையைக் காட்டிய ஆழ்ந்த முகத்துடன் நடனத்துக்கு ஏற்பக் கைகளால் தாளம் கொட்ட முயன் றான். ஆனால் தாளம் அவனுக்குப் பிடிபட வில்லை. அவன் தலையை ஆட்டி மீசையை அசைத்தவாறு ஷக்ரோவின் நடனத்தை உற்

றுக் கவனித்து, கனத்த கட்டைத் தொண்டை ால் ''ஹாய்-ஹா! அப்படித்தான், ஆகா! ஹாய்-ஹா! அருமை, அபாரம்!'' என்று இடை விடாமல் ஆர்ப்பரித்தான். நெருப்புத் தழல் ஷக்ரோ மீது ஒளி பாய்ச்சியது. அவன் ாம்பாய் நெளிந்தான், நொண்டி அடித் தான், இரு கால்களாலும் தாள வரிசைகள் அடித் துக் காட்டினான். நெருப்பு வெளிச்சத்தில் ளிச்சிட்ட அவனுடைய மேனி முழுவதிலும் பெரிய பெரிய துளிகளாக வியர்வை துளித் திருந்தது. அவை குருதி போன்று சிவப்பாகத் தோற்றம் அளித்தன.

இப்போது மூன்று மேய்ப்பர்களும் தாளம் போட்டார்கள். நான் குளிரால் நடுங்கியவாறு நெருப்பருகே உடலைச் சூடுபடுத்திக் கொண் டேன். எங்களுக்கு நேர்ந்துள்ள அநுபவம் கற் னைக் கதை ஆசிரியர்களான கூப்பர், ஜூல்ஸ் வெர்ன் ஆகியோரின் ஆர்வலர்களை மகிழ்ச்சி யில் ஆழ்த்தி இருக்கும் என்று எண்ணி னேன்: கப்பல் விபத்து, விருந்தோம்பும் பண் புடைய ஆதிவாசிகள், நெருப்பைச் சுற்றிக் காட் ானின் நடனம்.

ஷக்ரோ மேல் சட்டையை முக்காடிட்டுப் போர்த்துக்கொண்டு ஏற்கெனவே தரையில் உட்கார்ந்து எதையோ தின்ற வண்ணம் கரிய விழிகளால் என்னை அடிக்கொரு தரம் பார்த் துக் கொண்டிருந்தான். என் உள்ளத்தில் மகிழ்வற்ற உணர்ச்சியைத் தூண்டிய ஏதோ கருத்து அந்த விழிகளில் சுடர்ந்தது. நெருப்பின் அருகே தரையில் நாட்டிய கழி மீது தொங்க

விட்டிருந்த அவனுடைய உடை உலர்ந்து கொண்டிருந்தது. மேய்ப்பர்கள் ரொட்டியும் உப்பிட்ட கொழுப்பும் எனக்கும் உண்ணக் கொடுத்தார்கள்.

மிகால் வந்து பேசாமல் கிழவன் பக்கத்தில் உட்கார்ந்தான்.

''ஊம்?'' என்று வினவினான் கிழவன்.

''படகு இருக்கிறது!'' என்று சுருக்கமாகச் சொன்னான் மிகால்.

''அதை அலை அடித்துக் கொண்டுபோய் விடாதே?''

''போய் விடாது!''

பின்பு அவர்கள் எல்லாரும் என்னை ஏற இறங்கப் பார்த்தவாறு பேசாதிருந்தார்கள்.

''என்ன, இவர்களை ஊரில் தலைவரிடம் அழைத்துப் போவதா? இல்லாவிட்டால் ஒருவேளை சுங்கச் சாவடிக்கே கூட்டிப் போவோமா?'' என்று குறிப்பாக யாரையும் பார்க்காமல் கேள்வியைக் கிளப்பினான் மிகால்.

ஒருவரும் அவனுக்கு மறு மொழி கூறவில்லை. ஷக்ரோ நிம்மதியாகச் சாப்பிட்டான்.

''தலைவரிடம் அழைத்துப் போகலாம்... சுங்கச் சாவடிக்கும் கூட்டிப் போகலாம்... இரண்டுமே சரிதான்,'' என்று சிறிது நேரம் பேசாதிருந்த பின் சொன்னான் கிழவன்.

''பொறு, தாத்தா...'' என்று ஆரம்பித்தேன் நான், ஆனால் அவன் என்னைக் கவனிக்கவே இல்லை.

''ஆக, அப்படியாக்கும்! மிகால்! படகு அங்கே இருக்கிறதா?''

‘‘ஆமாம், இருக்கிறது...’’

‘‘பின் என்ன... அதை அலை அடித்துப் போய் விடாதே?’’

‘‘ஊகும்... போய் விடாது.’’

‘‘அப்படியானால் அது அங்கே நிற்கட்டும். நாளை படகுக்காரர்கள் கொச் போகும் போது அதை இழுத்துப் போவார்கள். வெற்றுப் படகை அவர்கள் ஏன் இழுத்துப் போகக் கூடாது? ஊம்? அது தானே... இப்போது நீங்கள் சொல்லுங்கள்... கந்தலாண்டித் தம்பிகளே... அது தான்... என்ன தெரியுமா? நீங்கள் இரண்டு பேரும் பயப்படவில்லையா? இல்லையா? பலே-பலே!.. இன்னும் ஒரு அரை கிலோமீட்டர் விலகி இருந்தால் கடலில் போயிருப்பீர்கள். கடலில் இழுத்துப் போயிருந்தால் என்னதான் செய்திருப்பீர்கள்? ஊம்? முழுகி இருப்பீர்கள் கற்கள் போல, இரண்டு பேரும்!.. முழுகி இருப்பீர்கள், அவ்வளவுதான்.’’

கிழவன் பேச்சை நிறுத்தி விட்டு மீசைக்குள் கேலியாகப் புன்னகைத்தவாறு என்னை நோக்கினான்.

‘‘என்ன பேசாதிருக்கிறாய், தம்பி?’’

அவனுடைய எண்ணங்கள் எனக்குப் புளித்துப் போயின. அவற்றைப் புரிந்து கொள்ளாமையால் அவன் எங்களை நையாண்டி செய்கிறான் என்று நினைத்தேன்.

‘‘அது தான் நீ சொல்வதைக் கேட்டுக் கொண்டிருக்கிறேனே!’’ என்று கடுகடுப்பாகச் சொன்னேன்.



15—937

''நல்லது, அதனால் என்ன?'' என்று உசாவினான் கிழவன்.

''என்ன, ஒன்றும் இல்லை.''

''எதற்காகக் கோரணி காட்டுகிறாய்? உன்னை விட வயதில் பெரியவனுக்குக் கோரணி காட்டுவது முறையாகுமா?''

நான் பேசாதிருந்தேன்.

''இன்னும் கொஞ்சம் சாப்பிட நீ விரும்பவில்லையா?'' என்று தொடர்ந்தான் கிழவன்.

''விரும்பவில்லை.''

''நல்லது, சாப்பிட வேண்டாம். விரும்பவில்லை என்றால் சாப்பிட வேண்டாம். வழிப் பயணத்துக்கு ஒருவேளை எடுத்துப் போகலாம் அல்லவா?''

மகிழ்ச்சியினால் நான் பூரித்தேன், ஆனால் காட்டிக் கொள்ளவில்லை.

''வழிப் பயணத்துக்கு என்றால் எடுத்துப் போகிறேன்...'' என்று நிதானமாகக் கூறினேன்.

''ஏகே!.. அப்படியானால் இவர்களுக்கு ரொட்டியும் கொழுப்பும் வழிப் பயணத்துக்குக் கொடுங்கள்... ஒருவேளை வேறு ஏதேனும் இருக்கிறதோ? இருந்தால் அதையும் கொடுங்கள்.''

''இவர்கள் என்ன, போகிறார்களா?'' என்று கேட்டான் மிகால்.

மற்ற இருவரும் கிழவனை ஏறிட்டுப் பார்த்தார்கள்.

''இல்லாவிட்டால் நம்மிடம் இவர்களுக்கு என்ன வேலை?''

''இவர்களைத் தலைவரிடம் அழைத்துப் போவதாய் இருந்தோமே... இல்லாவிட்டால் சங்கச் சாவடிக்கு...'' என்று ஏமாற்றத்துடன் கூறினான் மிகால்.

ஷக்ரோ நெருப்பின் அருகே ஏதோ செய்து கொண்டிருந்தவன் மேல் சட்டையிலிருந்து தலையை நீட்டினான். அவன் அமைதியாக இருந்தான்.

''தலைவரிடம் இவர்களுக்கு என்ன வேலை? ஒரு வேலையும் இல்லை என்று நினைக்கிறேன். அப்புறம் அவனிடம் போய்க் கொள்வார்கள்... விரும்பினால்.''

''ஆனால் படகை எப்படி?'' என்று விடாமல் தொடர்ந்தான் மிகால்.

''படகா?'' என்று திருப்பிக் கேட்டான் கிழவன். ''படகுக்கு என்னவாம்? அது அங்கே நிற்கிறது அல்லவா?''

''நிற்கிறது...'' என்று பதிலளித்தான் மிகால்.

''அப்படியானால் அதை நிற்க விடு. காலையில் இவாஷ்கா அதைத் துறைக்கு இழுத்துப் போவான்... அங்கே அதைக் கொர்ச்சுக்குக் கொண்டு போவார்கள். படகை வேறு எதுவும் செய்ய வேண்டியதில்லை.''

முதிய மேய்ப்பனை நான் கவனமாகக் கூர்ந்து நோக்கினேன். வெயிலிலும் காற்றிலும் அடிபட்டுப் பழுப்பேறிய அவனுடைய கமுக்கமான முகத்தில் நெருப்பிலிருந்து விழுந்த நிழல்கள் துள்ளிக் கொண்டிருந்தன, ஆனால்

அதில் சிறு அசைவைக் கூடக் காண என்னால் முடியவில்லை.

''நம் மேல் ஏதேனும் குற்றம் சாராதா...'' என்று இணங்கிவரத் தொடங்கினான் மிகால்.

''நீ நாக்கை அடக்கி வைத்திருந்தாயானால் ஒரு குற்றமும் சாராது. மாறாக இவர்களைத் தலைவரிடம் அழைத்துப் போவதால் நமக்கும் தொல்லை, இவர்களுக்கும் சங்கடம். நமக்கு நம் வேலையைச் செய்ய வேண்டி இருக்கிறது, இவர்களுக்கோ, போக வேண்டும். ஏய்! நீங்கள் இன்னும் ரொம்பத் தொலை போக வேண்டுமோ?'' என்று கேட்டான் கிழவன், எங்கு போக வேண்டும் என்று நான் ஏற்கெனவே சொல்லி இருந்த போதிலும்.

''திப்ளிஸ் போக வேண்டும்...''

''நெடும் பயணம்! பார்த்தாயா? தலைவன் இவர்களைச் சுணக்கப்படுத்துவான். அவன் சுணக்கப்படுத்தினால் இவர்கள் எப்போது ஊர் சேர்வார்கள்? ஆகையால் இவர்களைத் தங்கள் வழியில் போக விடு. ஊம்?''

கிழவன் தனது நிதானமான பேச்சை முடித்து விட்டு உதடுகளை இறுக மூடிக் கொண்டு சாம்பல் நிறத் தாடியை விரல்களால் முறுக்கியவாறு எல்லாத் தோழர்களையும் கேள்விக் குறியுடன் பார்த்தான். ''அதற்கென்ன? போகட்டும் இவர்கள்!'' என்று அவர்கள் இசைவு தெரிவித்தார்கள்.

''நல்லது, அப்படியானால் போங்கள் ஆண்டவனிடம், தம்பிகளா!'' என்று கையை

ஆட்டினான் கிழவன். ‘‘படகை நாங்கள் உரிய இடத்துக்கு அனுப்பி விடுகிறோம். சரிதானா?’’

‘‘உனக்கு நன்றி தாத்தா!’’ என்று தொப் பியைக் கழற்றி வணங்கினேன்.

‘‘நன்றி எதற்காகவாம்?’’

‘‘நன்றி, அண்ணே, நன்றி,’’ என்று உணர்ச் சிப் பெருக்குடன் மறுபடி சொன்னேன்.

‘‘அட நன்றி எதற்காக? வேடிக்கைதான்! ஆண்டவனிடம் போங்கள் என்கிறேன், இவன் எனக்கு நன்றி சொல்லுகிறான். நான் உன் னைச் சாத்தானிடம் அனுப்பிவிடுவேன் என்று பயந்தாயா என்ன? ஊம்?’’

‘‘தவறுதான், ஆனால் பயந்தேன்!..’’ என் றேன்.

‘‘ஓ!..’’ என்று கிழவன் புருவங்களை உயர்த் தினான். ‘‘நான் எதற்காக ஒருவனைக் கெட்ட வழியில் செலுத்த வேண்டும்? எந்த வழியில் நான் போகிறேனோ அதிலேயே அவனை அனுப்பு வது தான் மேல். மறுபடி ஒருவேளை நாம் சந்திக்கலாம், ஆகவே ஒருவரை ஒருவர் தெ ரிந்து கொள்வோம். தற்செயலாக ஒருவருக் கொருவர் உதவ வேண்டிவரலாமே... போய் வாருங்கள்!..’’

அவன் தனது மயிரடர்ந்த ஆட்டுத் தோல் தொப்பியைக் கழற்றி, குனிந்து எங்களை வணங்கினான். அவனுடைய கூட்டாளிகளும் வணங்கினார்கள். அனாப்பாவுக்கு வழி கேட்டுத் தெரிந்து கொண்டு நாங்கள் புறப்பட்டோம். ஷக்ரோ எதையோ எண்ணிச் சிரித்தான்...

# 6

''நீ எதற்காகச் சிரித்தாய்?'' என்று கேட்டேன்.

முதிய மேய்ப்பனையும் அவனுடைய வாழ்க்கை ஒழுக்க நெறியையும் எண்ணி நான் பரவசப் பட்டுக் கொண்டிருந்தேன். நேரே எங்கள் மார்பில் வீசிய காலைக் குளிர் காற்றும் எனக்குக் குதுகுதுப்பு ஊட்டிக் கொண்டிருந்தது. வானம் மேகங்கள் அற்றுத் தெளிந்திருந்ததாலும் விரைவில் தெளிந்த வானில் சூரியன் உதிக்கும், அழகிய புது நாள் புலரும் என்ற எண்ணத்தாலும் நான் உவகையில் திளைத்துக் கொண்டிருந்தேன்...

ஷக்ரோ என்னைப் பார்த்துத் தந்திரமாகக் கண் சிமிட்டி முன்னிலும் உரக்கச் சிரித்தான். மகிழ்ச்சியும் உடல்நலமும் பொங்கிய அவனுடைய சிரிப்பைக் கேட்டு நானும் புன்னகை செய்தேன். மேய்ப்பர்களின் நெருப்பருகே நாங்கள் கழித்த இரண்டு மூன்று மணி நேரமும் உண்ட சுவையான ரொட்டியும் கொழுப்பும் களைப் பூட்டிய பயணத்தின் அலுப்பைப் போக்கி விட்டன. எலும்புகளில் லேசான வலி மட்டுந்தான் எஞ்சி இருந்தது. ஆனால் இந்த உணர்ச்சி எங்கள் மகிழ்ச்சிக்குத் தடையாய் இல்லை.

''ஊம், எதற்காகச் சிரிக்கிறாய்? உயிர் பிழைத்ததோடு வயிறார உண்ட களிப்பா?''

ஷக்ரோ இல்லை என்று தலை அசைத்து, முழங்கையால் என் விலாவில் இடித்து, எனக்கு அழகு காட்டியவன், மீண்டும் கடகடவென்று

சிரித்தான். கடைசியில் தனக்கு இயல்பான அயல் ஒலிப்புடன் பேசத் தொடங்கினான்:

"எனக்கு ஏன் சிரிப்பாய் இருக்கிறது என்று புரியவில்லையா? ஊம்? இதோ புரிந்து கொள் வாய்! இந்தச் சுங்கச் சாவடி தலைவனிடம் அவர்கள் நம்மைக் கொண்டு விட்டிருந்தால் நான் என்ன செய்திருப்பேன் தெரியுமா? தெரி யாதா? இவன் என்னை மூழ்கடிக்கப் பார்த் தான் என்று உன்னைப் பற்றிச் சொல்லி இருப் பேன்! அப்புறம் அழத் தொடங்கி இருப்பேன்! அப்போது என் மேல் இரக்கம் கொண்டு என் னைச் சிறையில் தள்ளாமல் விட்டிருப்பார்கள்! புரிந்ததா?"

இது கேலிப் பேச்சு என்று அர்த்தப்படுத்திக் கொள்ள முதலில் விரும்பினேன். ஆனால் அந்தோ! தான் உண்மையாகவே அப்படித் திட்ட மிட்டதாக எனக்கு உறுதிப்படுத்தினான் ஷக் ரோ. அவன் ஆதாரத்துடனும் தெளிவாகவும் இப்படி உறுதிப்படுத்தவே, பேதைமை நிறைந்த இந்தக் கெடு நோக்குக்காக அவன் மேல் ஆத் திரப்படுவதற்குப் பதிலாக நான் ஆழ்ந்த இரக் கம் கொண்டேன். தான் நம்மைக் கொல்லத் திட்டம் இட்டிருப்பதை நம்மிடம் தூய புன்னகை மிளிர, உளமார்ந்த உண்மை தொனிக்கக் கூறும் ஒருவனை வேறு என்ன செய்ய முடி யும்? இந்தச் செயல் சாமர்த்தியம் நிறைந்த இனிய வேடிக்கை என்று நினைப்பவனை என்னதான் செய்வது?

ஷக்ரோவின் திட்டம் எவ்வளவு ஒழுக்கக் கேடானது என்று அவனுக்குச் சான்று காட்டி

விளக்க நான் உற்சாகமாக முனைந்தேன். அவனோ, தான் பெறக் கூடிய லாபத்தை நான் புரிந்து கொள்ளவில்லை என்றும் தான் மற்றவனுடைய பாஸ்போர்ட்டை வைத்துக் கொண்டு வாழ்வதை மறந்து விடுகிறேன் என்றும் இப்படி வாழ்வதற்கு யாரும் பாராட்ட மாட்டார்கள் என்றும் கூறி என் வாதங்களை மிக எளிதாக மறுத்தான்.

கொடுமையான ஓர் எண்ணம் திடீரென்று எனக்கு உதித்தது...

''பொறு, நான் உண்மையில் உன்னை மூழ் கடிக்கப் பார்த்ததாக நீ நம்புகிறாயா என்ன?'' என்று கேட்டேன்.

''இல்லை!.. நீ என்னை நீரில் தள்ளிய போது — நம்பினேன், நீயும் இறங்கியதும் — நம்ப வில்லை!''

''நல்ல வேளைதான்!'' என்று கூவினேன். ''நல்லது, இதற்கே நான் நன்றி செலுத்து கிறேன்!''

''வேண்டாம், எனக்கு நன்றி சொல்லாதே! நான் உனக்கு நன்றி தெரிவிக்கிறேன்! அங்கே நெருப்பின் பக்கத்தில் உனக்கும் குளிர்ந்தது, எனக்கும் குளிர்ந்தது... மேல் சட்டை உன்னுடையது. ஆனால் நீ அதை உனக்கு வைத்துக் கொள்ளவில்லை. அதை உலர்த்தி எனக்குக் கொடுத்தாய். எதையும் உனக்கு வைத்துக் கொள்ளவில்லை. அதற்காக உனக்கு நன்றி! நீ ரொம்ப நல்ல ஆள். எனக்குப் புரிகிறது. திப்ளிஸ் போய்ச் சேர்ந்ததும் எல்லாவற்றுக்கும் ஈடு செய்து விடுகிறேன். தகப்பனாரிடம் உன்னை

அழைத்துப் போகிறேன். அவரிடம் சொல்கிறேன்: இவன்தான் மனிதன்! இவனுக்குச் சாப்பாடு போடு, குடிக்கக் கொடு! என்னைக் கழுதைகளோடு கழுதையாகத் தொழுவுக்கு அனுப்பு! இப்படியே சொல்லுகிறேன்! எங்கள் வீட்டில் வசிப்பாய், தோட்டக்காரனாக இருப்பாய், மது பருகுவாய், எது வேண்டுமோ சாப்பிடுவாய்!.. அஹ, அஹ, அஹ!.. நீ ரொம்ப வசதியாக வாழ்வாய்! ஒரு தொல்லை இல்லாமல்!.. என்னோடு ஒரே பாத்திரத்தில் சாப்பிடு, குடி!..''

திப்ளிசில் தன் வீட்டில் எனக்கு அவன் அமைத்துத் தரப்போகிற வாழ்க்கையின் கவர்ச்சிகளைப் பற்றி அவன் வெகு நேரம் விரிவாக வருணித்துக்கொண்டு போனான். அவனுடைய பேச்சைக் கேட்டவாறு நான் வேறு சிந்தனையில் ஆழ்ந்தேன். புதிய ஒழுக்க நெறியையும் புதிய விருப்பங்களையும் மேற்கொண்டு, தன்னந்தனியாக முன்னே சென்று, தங்களுக்கு வேற்றானவர்களும் தங்களைப் புரிந்து கொள்ளத் திறன் அற்றவர்களுமான வழித் துணைவர்களைப் பாதையில் சந்திக்கும் மனிதர்களின் மாபெரும் துர்பாக்கியத்தைப் பற்றி எண்ணமிட்டேன்... இத்தகைய தனியர்களின் வாழ்க்கை துன்பம் நிறைந்தது! அவர்கள் தரைக்கு மேலே, காற்றில் மிதக்கிறார்கள்... நல்ல தானியங்களின் விதைகள் போல அவர்கள் அதில் பறக்கிறார்கள், ஆனால் சில வேளைகளில் செழு மண்ணில் மட்கியும் போகிறார்கள்...

வெளிச்சம் ஆயிற்று. கடலின் தொலைப்

பகுதி இளஞ் செம்பொன் நிறத்தில் ஒளிர்ந்தது.

"எனக்கு உறக்கம் வருகிறது!" என்றான் ஷக்ரோ.

நாங்கள் இடை நிறுத்தம் செய்தோம். கடற்கரைக்குச் சற்று தூரத்தில் உலர்ந்த மணலில் காற்றினால் தோண்டப்பட்ட பள்ளம் ஒன்றில் அவன் படுத்து, மேல் சட்டையால் முக்காடிட்டுக் கொண்டு விரைவில் உறங்கி விட்டான். நான் அவன் அருகே அமர்ந்து கடலில் பார்வை செலுத்தினேன்.

கடல் விறல் மிக்க இயக்கங்கள் நிறைந்த தன் பரந்த வாழ்வை வாழ்ந்து கொண்டிருந்தது. அலைக் கூட்டங்கள் இரைச்சலுடன் கரை மேல் பாய்ந்து மணலில் அடித்துச் சிதறின. மணல் நீரை உட்கொண்டு மெல்லச் சீறியது. வெண் பிடரிகளை ஆட்டியவாறு முன் வரிசை அலைகள் கரை மேல் மார்பினால் மடாரென்று தாக்கி விட்டு அதனால் தள்ளப்பட்டுப் பின் வாங்கின. ஆனால் அவற்றுக்கு ஆதரவளிக்க வந்த வேறு அலைகள் அவற்றைச் சந்தித்தன. நுரையும் திவலைகளும் பொங்கித் தெறிக்க இறுகத் தழுவிக் கொண்ட பின் அவை மீண்டும் கரைக்கு உருண்டோடி, தங்கள் வாழ்வு எல்லைகளை விரிவுபடுத்திக் கொள்ளும் முயற்சியில் அதை அடித்தன. தொடு வானத்திலிருந்து கரை வரையில், கடலின் பரப்பு முழுவதிலும், மீள்விசையும் வலிமையும் கொண்ட இந்த அலைகள் எழுந்தன. குறிக்கோளின் ஒருமையால் ஒன்றோடு ஒன்று நெருக்

கமாக இணைந்து அடர்ந்த திரளாக அவை மேன்மேலும் முன்னே சென்ற வண்ணமாய் இருந்தன... சூரியன் அலை முடிகள் மீது மேன்மேலும் அதிகப் பிரகாசமாக ஒளி பாய்ச்சியது. தொடு வானத்தில், தொலைதூர அலைகளின் முடிகள் இரத்தச் சிவப்பாகத் தோற்றம் அளித்தன. நீர்த்திரளின் பேராற்றல் பொங்கும் இந்த இயக்கத்தில் ஒரு துளி கூடச் சுவடின்றி மறைந்து விடவில்லை. இந்த நீர்த்திரள் உணர்வு பூர்வமான ஒரு குறிக்கோளினால் உந்தப்பட்டிருப்பது போலவும் ஒரு சீரான இந்தப் பரந்த அடிகள் மூலம் இதோ அந்தக் குறிக் கோளை அடைந்து விடுவது போலவும் தோன்றியது. மௌனம் சாதித்த கரை மீது உற்சாகத்துடன் பாய்ந்த முன் வரிசை அலைகளின் வனப்பு வாய்ந்த வீரம் கவர்ச்சி உள்ளதாக இருந்தது. கடல் முழுதும், சூரியனால் வானவில்லின் எல்லா நிறங்களிலும் வண்ணம் பூசப் பெற்ற, தன் எழிலையும் வலிவையும் பற்றிய உணர்வால் நிறைந்த விறல் மிக்க கடல் அனைத்தும், அமைதியாகவும் ஒன்று சேர்ந்தும் அவற்றின் பின்னே செல்வதைக் காண இன்பமாய் இருந்தது.

முனைக்கு அப்பாலிருந்து அலைகளைப் பிளந்து கொண்டு மிதந்து வந்தது பிரமாண்டமான நீராவிக் கப்பல். கடலின் கொந்தளிக்கும் மடியில் மிடுக்குடன் அசைந்தாடியவாறு வந்த கப்பல் தன்மேல் வெறியுடன் பாய்ந்த அலைகளின் முடிகள் மீது விரைந்தது. அழகும் வலிமையும் ஆர்ந்து, தன் எஃகினால்

வெயிலில் பளிச்சிட்ட கப்பல், இயற்கை உற்பாதங்களை வசப்படுத்திய மனிதர்களின் பெருமை சான்ற படைப்பு பற்றிய எண்ணத்தை வேறு சமயத்தில் எனக்கு ஏற்படுத்தி இருக்கும்... ஆனால் இப்போது என் அருகே படுத்திருந்தான் இயற்கை உற்பாத மனிதன்.

## 7

நாங்கள் தேர்ஸ்க் மாவட்டத்தில் நடந்தோம். ஷக்ரோ விவரிக்க இயலாத அளவு அலங்கோலத் தோற்றமும் கந்தல் உடையுமாகக் காட்சி அளித்தான். போதிய ஊதியம் கிடைத்ததால் இப்போது அவன் பட்டினி கிடக்கவில்லை, ஆயினும் ஒரே சிடுசிடுப்புடன் வளைய வந்தான். அவன் எந்த வித வேலைக்கும் திறமை அற்றவனாக இருந்தான். ஒரு முறை கதிரடிக்கும் எந்திரத்தின் அருகே வைக்கோலை வாரியால் பரப்பும் வேலை செய்ய முயன்று பார்த்தான். ஆனால் அரை நாளுக்குள் வேலையை விட்டு விட்டான். வாரி உராய்ந்ததால் அவனுடைய உள்ளங்கைகளில் கொப்புளங்கள் கிளம்பி இருந்தன. இன்னொரு முறை ஓர் அடிமரத்தை வேரோடு பிடுங்கி எறியும் வேலை தொடங்கினோம். அவன் மண்வெட்டியால் கழுத்துத் தோலை வழட்டிக் கொண்டான்.

நாங்கள் மிகவும் மெதுவாக நடந்தோம்—இரண்டு நாள்கள் வேலை செய்வதும் ஒரு நாள் நடப்பதுமாக. ஷக்ரோ கொஞ்சங்கூடக் கட்டு, திட்டம் இல்லாமல் தின்றான். அவனுடைய

பெருந்தீனி காரணமாக அவனுக்கு ஏதேனும் உடை வாங்குவதற்கு வேண்டிய பணம் சேர்க்க என்னால் முடியவே இல்லை. அவனுடைய ஆடைப் பகுதிகளோ பல வண்ண ஒட்டுக்களால் ஏதோ பெயருக்கு இணைக்கப்பட்ட பல்வித ஒட்டைகளின் கும்பலாக இருந்தன.

அரும்பாடு பட்டு, அவனுக்குத் தெரியாமல் நான் சேமித்து வைத்திருந்த ஐந்து ரூபிள் களை ஒரு நாள் ஏதோ ஒரு ஊரில் என் பயணப் பையிலிருந்து எடுத்துக்கொண்டு போன வன், நான் காய்கறித் தோட்ட வேலை செய்து கொண்டிருந்த வீட்டுக்கு மாலையில் வெறி கொண்டவனாக ஒரு கொழுத்த கஸாக்குப் பெண்பிள்ளையுடன் வந்து சேர்ந்தான். அவள் எனக்குப் பின்வருமாறு முகமன் கூறினாள்:

''வணக்கம், பாழாய்ப் போகிற சமயபேதி!''

இந்த அடைமொழியால் வியப்புற்ற நான், ''என்ன காரணத்தால் நான் சமயபேதி?'' என்று கேட்டதற்கு, அவள் மட்டுமீறிய தன் னம்பிக்கையுடன் பின்வருமாறு விடை அளித் தாள்:

''பெண்பாலைக் காதலிக்க இந்த இளவட்டத் தைத் தடை செய்கிறாயே, சாத்தான், அதனால் தான்! சட்டம் அநுமதிக்கும் போது நீ தடை செய்யலாமா?.. பழி கேடன் நீ!..''

ஷக்ரோ அவள் அருகில் நின்று உறுதிப் படுத்தும் பாவனையில் தலையை ஆட்டினான். அவன் பெருத்த குடி மயக்கத்தில் இருந்தான். சிறு அங்க அசைவின் போதும் நிலையின்றித் தள்ளாடினான். அவனுடைய கீழுதடு தொங்

கிற்று. மங்கிய விழிகள் என் முகத்தைப் பொருளின்றி வெறித்துப் பார்த்தன.

"இந்தா, உன்னைத்தானே! என்ன அப்பா எங்களையே முறைத்துப் பார்க்கிறாய்? இவனுடைய பணத்தைக் கொடுத்துத் தீர்!'' என்று கூச்சலிட்டாள் அந்தத் துணிந்த பெண்பிள்ளை.

"எந்தப் பணத்தை?'' என்று திகைப்புடன் கேட்டேன்.

"கொடு, கொடு! இல்லாவிட்டால் நான் உன்னை அதிகாரிகளிடம் இழுத்துப் போவேன்! ஒதெஸ்ஸாவில் இவனிடமிருந்து வாங்கிக் கொண்டாயே, நூற்றைம்பது ரூபிள், அதைத் திருப்பிக் கொடு!''

நான் என்ன செய்திருக்க முடியும்? வெறித்த வழியினளான இந்தப் பேய்மகள் உண்மையாகவே அதிகாரிகளிடம் போகக் கூடும். நாடோடிகளாகத் திரியும் பல வித ஆட்களிடம் கண்டிப்பைக் கடைப்பிடிக்கும் ஊர்த் தலைமை அதிகாரிகள் அப்போது எங்களைக் கைது செய்திருப்பார்கள். இவ்வாறு கைது செய்யப்படுவதன் விளைவு எனக்கும் ஷக்ரோவுக்கும் என்னவாய் இருக்கும் என்று யார் கண்டது? ஆகவே அந்தப் பெண்பிள்ளையை பக்குவமாக வழிக்குக் கொண்டு வர முயன்றேன். இதற்கு நான் நிரம்பச் சிரமப்பட வேண்டி இருக்கவில்லை. மூன்று புட்டி மதுவின் உதவியால் அவளை ஒரு விதமாகச் சமாதானப்படுத்தினேன். அவள் முலாம் பழங்களுக்கு இடையே தரையில் விழுந்து உறங்கிப் போனாள். நான்

ஷக்ரோவைப் படுக்கப் போட்டேன். மறு நாள் அதிகாலையில் நாங்கள் பெண்பிள்ளையை முலாம் பழங்களுக்கு நடுவே கிடக்க விட்டு விட்டு ஊரிலிருந்து வெளியேறினோம்.

முதல் நாள் மட்டுமீறிக் குடித்ததன் பின் விளைவால் கடும் தலைநோய்க்கு ஆளாகி, அலங்கோலமாய் உப்பிய முகத்துடன் இருந்த ஷக்ரோ நொடிக்கொருதரம் துப்பினான். துன்பப் பெருமூச்சு விட்டான். அவனிடம் பேச்சுக் கொடுக்க முயன்றேன். ஆனால் அவன் எனக்குப் பதில் சொல்லாமல் ஆட்டுக்கடா போலப் பறட்டைத் தலையை ஆட்ட மட்டுமே செய்தான்.

நாங்கள் குறுகிய ஒற்றையடிப் பாதை வழியே நடந்தோம். சிறு சிவப்புப் பாம்புக் குட்டிகள் எங்கள் காலடியில் நெளிந்தவாறு அதில் முன்னும் பின்னும் ஊர்ந்து கொண்டிருந்தன. நாற்புறமும் குடி கொண்டிருந்த நிசப்தம் கனவு காணும் உறக்க நிலையில் ஆழ்த்தியது. கரு முகிற் கூட்டங்கள் எங்களைப் பின்பற்றி வானில் மெதுவாக இயங்கின. ஒன்றோடொன்று கலந்து குமைந்து அவை எங்களுக்குப் பின்னே ஆகாயம் முழுவதையும் மூடி விட்டன. முன்னேயோ, வானம் இன்னமும் தெளிவாக இருந்தது. ஆனால் மேகத் துண்டுகள் அதில் பாய்ந்து, எங்களை முந்திக் கொண்டு முன்னால் எங்கோ படு வேகமாக விரைந்தன. தொலைவில் எங்கேயோ இடி அதிர்ந்து முழங்கியது. அதன் முறுமுறுப்பு ஒலிகள் வர வர அருகே நெருங்

கின. மழைத் துளிகள் விழுந்தன, புல் உலோக ஒலிப்புடன் சரசரத்தது.

எங்களுக்கு ஒதுங்க இடமே இல்லை. இருட்டாயிற்று. புல்லின் சரசரப்பு முன்னிலும் உரக்கவும் அச்சத்துடனும் ஒலித்தது. இடி இடித்தது. நீல ஒளியால் தழுவப்பட்ட மேகங்கள் திடுக்கிட்டு நடுங்கின. பெரு மழை ஓடைகளாகப் பெருகியது. வெற்றான ஸ்தெப்பி வெளியில் இடியதிர்ச்சிகள் ஒன்றன் பின் ஒன்றாக இடை யறாமல் முழங்கத் தொடங்கின. காற்று, மழை அடிகளால் சாய்க்கப்பட்ட புல், தரையோடு தரை யாகக் கிடந்தது. எல்லாம் நடுங்கிக் கொந் தளித்தன. கண்களைக் குருடாக்கிய மின்னல் கள் மேகங்களைக் கிழித்தன... அவற்றின் இள நீல ஒளியில் மலைத் தொடர் நீல விளக்கு கள் மினுமினுக்க, வெள்ளி வெண்மையும் குளிரும் திகழத் தொலைவில் காட்சி அளித் தது. மின்னல்கள் மறைந்ததும் அதுவும் இருட் கிடங்கில் விழுந்து விட்டது போலக் காணாமல் போயிற்று. எல்லாம் முழங்கியது, அதிர்ந்தது, ஒலிகளை எதிரொலித்தது, அவற்றை உண் டாக்கியது. கலக்கமும் சீற்றமும் கொண்ட விண்ணகம் தரையிலிருந்து எழுந்து தன்னை வந்து அடைந்த புழுதியும் பல் வகை ஆபாசங் களும் அகலும் படி நெருப்பால் தன்னைத் துப் புரவாக்கிக் கொள்வது போலவும் தரையுலகு அதன் கோபத்துக்கு முன் அச்சத்தால் நடு நடுங்குவது போலவும் தோன்றியது.

ஷக்ரோ மிரண்ட நாய் போல உறுமினான். எனக்கோ, மகிழ்ச்சி பொங்கியது. ஸ்தெப்பி

மழைப் புயலின் இந்த விறல் மிக்க இருண்ட காட்சியைக் கண்ணுற்று நான் வழக்கமான திலிருந்து உயரே எழுந்தவன் போல உணர்ந் தேன். அற்புதக் குழப்பம் கவர்ந்து இழுத் தது, பயங்கரக் கூட்டிசையால் உள்ளத்தை ஆட் கொண்டு அதை வீரப் பண்ணுக்கு ஏற்பச் சுருதி கூட்டியது...

இந்தக் கூட்டிசையில் பங்கு கொள்ளவும் இந்த ஆற்றலின் முன் எனக்குள் நிறைந்து ததும்பிய பரவச உணர்ச்சியை எப்படியாவது வெளியிடவும் எனக்கு விருப்பம் உண்டாயிற்று. வானத்தைத் தழுவியிருந்த இள நீலத் தழல் என் நெஞ்சிலும் எரிவது போல இருந்தது. எனது மாட்சி மிக்க கொந்தளிப்பையும் எனது உவகைப் பெருக்கையும் எதன் மூலம் வெளி யிடுவது? நான் பாடத் தொடங்கினேன்— உரக்கவும் முழு பலத்துடனும். இடி முழங்கிற்று, மின்னல்கள் வெட்டின, புல் சரசரத்தது, நான் பாடினேன், எல்லா ஒலிகளுடனும் முழு உறவு கொண்டு விட்டதாக உணர்ந்தேன்... நான் களி வெறியில் இருந்தேன். இது மன்னிக்கத் தக்கது, ஏனென்றால் என்னைத் தவிர யாருக்கும் இது கேடு செய்யவில்லை. கடலில் சூறாவளியும் ஸ்தெப்பியில் மழைப் புயலும்!—இயற்கையில் இவற்றைக் காட்டிலும் மாண்பு மிக்க நிகழ்ச்சி களை நான் அறியேன்.

இத்தகைய நடத்தையால் நான் யாரையும் தொந்தரவு செய்யவில்லை, என் செயல் முறையைக் கடும் விமர்சனத்துக்கு உள்ளாக்கும் அவசியத்தை எவருக்கும் ஏற்படுத்தவில்



16—937

லை என்று உறுதியாக நம்பி, நான் ஆரவாரித்தேன். திடீரென்று என் கால் வெடுக்கென்று பற்றி இழுக்கப்படவே, நான் வேறு வழி இன்றி நீர்க் குட்டத்தில் உட்கார்ந்து விட்டேன்...

சீற்றம் பொங்கிய ஆழ்ந்த விழிகளால் என் முகத்தை உறுத்துப் பார்த்தான் ஷக்ரோ.

''உனக்குப் பைத்தியம் பிடித்து விட்டதா? பிடிக்கவில்லையா? இல்லையா? அப்படியானால் வாயை மூடு! கூச்சல் போடாதே! உன் குரல்வளையைக் கிழித்து விடுவேன்! புரிந்ததா?''

நான் திகைப்படைந்து, நான் எந்த வகையில் அவனுக்கு இடைஞ்சல் செய்கிறேன் என்று முதலில் கேட்டேன்...

''பயமுறுத்துகிறாய்! புரிந்ததா? இடி இடிக்கிறது – ஆண்டவன் பேசுகிறான், நீயோ, காட்டுக் கூப்பாடு போடுகிறாய்... என்ன நினைத்துக் கொண்டிருக்கிறாய் நீ?''

விரும்பினால் பாடுவதற்கு அவனைப் போலவே எனக்கு உரிமை உண்டு என்று நான் அவனிடம் கூறினேன்.

''நான் விரும்பவில்லை!'' என்று அவன் கண்டிப்பாகச் சொன்னான்.

''பாடாதே!'' என்று இசைவு தெரிவித்தேன்.

''நீயும் பாடாதே!'' என்று கண்டிப்பாகக் கட்டாயப்படுத்தினான் ஷக்ரோ.

''இல்லை, நான் பாடத்தான் போகிறேன்...''

''கேள். நீ என்ன நினைத்துக் கொண்டிருக்கிறாய்?'' என்று ஆத்திரம் பொங்கப் பேசலானான் ஷக்ரோ. ''நீ யார்? உனக்கு வீடு

இருக்கிறதா? தாயார் இருக்கிறாளா? தகப்பனார் இருக்கிறாரா? உறவுகாரர்கள்? உலகத்தில் நீ யார்? நீ மனிதன் என்று எண்ணுகிறாயோ? நானாக்கும் மனிதன்! என்னிடம் எல்லாம் இருக்கிறது!..''—அவன் தன் மார்பில் இடித்துக் கொண்டான். ''நான் சிற்றரசன்!.. நீயோ... நீ ஒன்றும் அற்றவன்! ஒன்றுமே இல்லாதவன்! குதயிசி, திப்ளிஸ் இரண்டு ஊரும் என்னை அறியும்!.. புரிந்ததா? நீ எனக்கு எதிராக நடக்காதே! நீ எனக்குத் தொண்டு செய்வாயா? அப்போது சுகமாய் இருப்பாய்! நான் உனக்குப் பத்து மடங்கு ஊதியம் தருவேன்! நீ தொண்டு செய்வாயா? உன்னால் வேறு விதமாகச் செய்ய முடியாது. பரிசை எதிர்பாராமல் எல்லாருக்கும் தொண்டு செய்யும்படி ஆண்டவன் கட்டளை இட்டிருப்பதாக நீயே சொன்னாயே! நான் உனக்குப் பரிசு தருவேன்! எதற்காக நீ என்னைத் துன்பப்படுத்துகிறாய்? போதிக்கிறாய், பயமுறுத்துகிறாய்? நான் உன்னைப் போல் ஆக வேண்டும் என்று விரும்புகிறாயா? இது நன்றாய் இல்லை! ஐயையே!.. த்தூ, த்தூ!..''

அவன் பேசினான், சப்புக்கொட்டினான், செறுமினான், பெருமூச்செறிந்தான்... நான் திகைப்பினால் வாயைத் திறந்தவாறு அவன் முகத்தைப் பார்த்துக் கொண்டிருந்தேன். எங்கள் பயணக் காலம் முழுவதிலும் அவனுக்குள் என் விஷயத்தில் சேர்ந்திருந்த ஆத்திரம், மனத்தாங்கல், அதிருப்தி எல்லாவற்றையும் என் முன்னே அவன் கொட்டித் தீர்த்தான் போலும். அதிக உறுதியுடன் நம்பிக்கை ஊட்டு

வதற்காக அவன் என் மார்பில் விரலால் குத்தினான், தோளைப் பற்றிக் குலுக்கினான், சிறப்பாக வலிய இடங்களில் தன் உடல் முழுவதாலும் என்னை இடித்தான். மழை எங்கள் மேல் கொட்டிற்று, எங்களுக்கு மேலே இடை விடாமல் இடி இடித்தது. ஷக்ரோவோ, தன் குரல் என் காதில் பட வேண்டும் என்பதற்காகத் தொண்டையைப் பிய்த்துக் கொண்டு கத்தினான்.

எனது துன்ப நிலைமையின் கேலித்தன்மை எல்லாவற்றிலும் துலக்கமாக எனக்குப் புலப்பட்டது. அதனால் உந்தப்பட்டு நான் என் சக்திக்கு எட்டியவரை உரக்கக் கெக்கலி கொட்டினேன்...

ஷக்ரோ துப்பி விட்டு முகத்தைத் திருப்பிக்கொண்டான்.

## 8

...நாங்கள் திப்ளிசை நெருங்க நெருங்க ஷக்ரோவின் ஒருமுனைப்பாடும் கடுகடுப்பும் அதிகம் ஆகிக்கொண்டு போயின. அவனுடைய மெலிந்த, ஆனால் சலனமற்ற முகத்தில் ஏதோ புதுமை காணப் பட்டது. விளாதிகாக்கேஷியாவுக்குச் சற்று தூரத்தில் நாங்கள் ஒரு செர்க்கேசியக் கிராமத்தை அடைந்து மக்காச்சோளக் கதிர் அறுக்கும் வேலையில் கூலிக்கு அமர்ந்தோம்.

செர்க்கேசியர்கள் ருஷ்ய மொழியில் அநேகமாக ஒன்றும் பேசாமல் இடைவிடாது எங்

களைக் கேலி செய்து சிரிப்பதும் தங்கள் மொழியில் எங்களைத் திட்டுவதுமாக இருந் தார்கள். எங்கள் பால் கிராமத்தாரின் பகைமைப் போக்கு மேன்மேலும் அதிகரித்ததைக் கண்டு எங்களுக்கு அச்சம் உண்டாயிற்று. எனவே அவர்களுக்கு இடையே இரண்டு நாள்கள் வே லை செய்த பின் கிராமத்திலிருந்து வெளியேற நாங்கள் முடிவு செய்தோம். கிராமத்திலிருந்து சுமார் பத்து கிலோமீட்டர்கள் சென்றதும் ஷக் ரோ திடீரென்று தன் சட்டை மார்பிலிருந்து லெஸ்கின் மஸ்லின் துணிப் பொட்டலம் ஒன்றை எடுத்து வெற்றிப் பெருமிதத்துடன் எனக்குக் காட்டினான்.

‘‘இனிமேல் வேலை செய்ய வேண்டாம்! இதை விற்று எல்லாம் வாங்கிக் கொள்வோம்! திப்ளிஸ் வரை போதும்! புரிந்ததா?’’ என்று முழங்கினான்.

நான் ஆத்திரத்தால் வெறி கொண்டவன் போல் ஆகிவிட்டேன். பொட்டலத்தைப் பிடுங்கி ஒரு பக்கம் எறிந்து விட்டுத் திரும்பிப் பார்த் தேன். செர்க்கேசியர்கள் கண்டிப்புள்ளவர்கள். இதற்குச் சிறிது முன்பு நடந்த கதை ஒன்றை கஸாக்குகள் எங்களுக்குச் சொல்லி இருந்தார் கள். ஒரு நாடோடி தான் வேலை செய்த கிராமத்திலிருந்து புறப்பட்ட போது இரும்புக் கரண்டி ஒன்றை எடுத்துக் கொண்டு போ னானாம். செர்க்கேசியர்கள் அவனைத் துரத் திப் பிடித்து, சோதனை போட்டு, அவனிடம் இருந்த கரண்டியை எடுத்து, கட்டாரியால் அவன் வயிற்றைக் கிழித்து, காயத்துக்குள்

கரண்டியை ஆழச் செலுத்தி, அவனை ஸ்தெப் பியில் விட்டு விட்டு நிம்மதியாக ஊர் திரும்பி னார்களாம். குற்றுயிராய்க் கிடந்த அவனைக் கஸாக்குகள் தூக்கினார்களாம். அவன் நடந் ததை அவர்களிடம் சொல்லி விட்டு ஊர் போ கும் வழியில் இறந்து போனானாம். கஸாக்கு கள் படிப்பினை நல்கும் இந்த மாதிரி நிகழ்ச்சி களை எங்களுக்கு விவரித்து, செர்க்கேசியர் களைக் குறித்து எங்களைப் பல முறை கண் டிப்பாக எச்சரித்தார்கள். அவர்களை நம்பா மல் இருக்க என்னிடம் எவ்வித ஆதாரமும் இல்லை.

நான் ஷக்ரோவுக்கு இதை நினைவுபடுத் தினேன். அவன் என் முன்னே நின்று கேட்டுக் கொண்டிருந்தவன் திடீரென்று பற்களைக் காட்டிக் கண்களைச் சுரித்துப் பூனை போல என்மேல் பாய்ந்தான். ஒரு ஐந்து நிமிடம் நாங்கள் ஒருவரை ஒருவர் நொய்யப் புடைத் தோம். முடிவில் ஷக்ரோ கோபத்துடன் என் னை நோக்கிக் கத்தினான்:

"போதும்!.."

களைத்துப் போய், எதிரெதிராக உட்கார்ந்து நாங்கள் வெகு நேரம் பேசாதிருந்தோம்... திருடிய மஸ்லின் பொட்டலத்தை நான் எறிந்திருந்த திசையை ஷக்ரோ பரிதாபமாகப் பார்த்துக் கொண்டிருந்தான். பின்பு பேசத் தொடங்கினான்:

"எதற்காக அடித்துக்கொண்டோம்? ப்பூ, ப்பூ, ப்பூ!.. அடி மடத்தனம். நான் உன் பொருளையா திருடினேன்? உனக்கு என்ன,

இரக்கமாய் இருக்கிறதோ? எனக்கு உன் மேல் இரக்கமாய் இருந்தது, அதனால்தான் திருடினேன்... நீ வேலை செய்கிறாய், என்னால் முடியவில்லை... நான் என்ன செய்வது? உனக்கு ஒத்தாசை பண்ண விரும்பினேன்...''

திருட்டு என்பது என்ன என்று அவனுக்கு விளக்க முயன்றேன்...

''தயவு செய்து மூடு வாயை! உனக்கு மர மண்டை...'' என்று அருவருப்புடன் என்னை இகழ்ந்து விட்டு எனக்கு விளக்ினான்: ''சாக வேண்டி இருந்தால் கூடத் திருட மாட்டாயா? ஊம்! இது ஒரு வாழ்வா? வாயைத் திறக்காதே!''

அவனுக்கு மீண்டும் எரிச்சலூட்ட அஞ்சி நான் பேசாதிருந்தேன். இது அவன் செய்த இரண்டாவது திருட்டு. இன்னும் முன்பு, நாங்கள் கிரிமியாவில் இருந்த போது கிரேக்க மீனவர்களின் பைத் தராசை அவன் திருடினான். அப்போதும் நாங்கள் அடித்துக் கொள்ளப் பார்த்தோம்.

நாங்கள் இருவரும் சற்று அமைதி அடைந்து சமாதானம் செய்து கொண்டு இளைப்பாறியதும், ''என்ன, மேலே நடப்போமா?'' என்றான் அவன்.

மேலே நடந்தோம். அவன் நாளுக்கு நாள் அதிக ஏக்கம் பிடித்தவன் ஆனான், என்னை விந்தையாக, சுளிப்புடன் பார்த்தான். ஒரு முறை, நாங்கள் தர்யால் கணவாயைக் கடந்து குதவூர் என்னும் மலையிலிருந்து இறங்கிய போது, அவன் பேசத் தொடங்கினான்:

‘‘இரண்டொரு நாள்கள் கழிந்ததும் திப்ளிஸ் சேர்ந்து விடுவோம். த்ஸெ, த்ஸெ!’’ என்று நாக்கைச் சப்புக் கொட்டிய அவன் முகமெல்லாம் மலர்ந்தது. ‘‘வீட்டுக்குப் போவேன்—எங்கே போயிருந்தாய்? பயணம் செய்தேன்! வெந்நீர்க் குளியறைக்குப் போவேன்... ஆமாம்! நிறையச் சாப்பிடுவேன்... ஆகா, நிறைய! தாயாரிடம் சொல்லுவேன்—ரொம்பப் பசிக்கிறது! தகப்பனாரிடம் சொல்லுவேன்—என்னை மன்னி! நான் ரொம்பத் துன்பப்பட்டேன், பல வகை வாழ்க்கையை அநுபவித்தேன்! நாடோடிகள் ரொம்ப நல்ல மனிதர்கள்! எப்போதாவது சந்தித்தால் பணம் கொடுப்பேன், கடைக்குக் கூட்டிப் போய், சாராயம் குடி, நானும் நாடோடியாய் இருந்தேன் என்பேன்! தகப்பனாரிடம் உன்னைப் பற்றிச் சொல்லுவேன்... இவன்தான் மனிதன், எனக்கு அண்ணன் போல் இருந்தான்... எனக்குப் போதித்தான், அடித்தான், நாய்ப் பயலான அவன்!.. சாப்பாடு போட்டான். இதற்காக இப்போது நீ இவனுக்குச் சாப்பாடு போடு என்பேன். ஓர் ஆண்டு சாப்பாடு போடு—கேட்டாயா, மக்சீம்? ஓர் ஆண்டு.’’

அவன் இந்த மாதிரிப் பேசிய போது கேட்க எனக்கு இன்பமாய் இருந்தது. இத்தகைய சந்தர்ப்பங்களில் அவன் எளிமையும் குழந்தைத் தன்மையும் மேற்கொண்டான். இத்தகைய பேச்சுக்கள் எனக்குச் சுவையாய் இருந்ததற்கு இன்னொரு காரணமும் இருந்தது: திப்ளிசில் எனக்குத் தெரிந்தவர் ஒருவர் கூட இல்லை, பனிக்காலம் வேறு நெருங்கிக் கொண்டிருந்தது. குதவூ

ரிலேயே பனிப் புயல் எங்களை எதிர்கொண்டது. ஷக்ரோவை நான் ஓரளவு நம்பி இருந்தேன்.

நாங்கள் விரைவாக நடந்தோம். இதோ மித்ஸ்கேத்—இபேரியாவின் பண்டைத் தலைநகர். நாளை திப்ளிஸ் சேர்ந்து விடுவோம்.

இரண்டு மலைகளுக்கு நடுவே நெரிந்திருந்த காக்கேஷியத் தலைநகரை ஒரு ஐந்து கிலோமீட்டர் தொலைவிலிருந்தே நான் கண்டேன். பயணத்தின் முடிவு! எதனாலோ நான் மகிழ்ச்சி அடைந்தேன், ஆனால் ஷக்ரோ அசட்டையாக இருந்தான். மந்தமான விழிகளால் முன்னே பார்ப்பதும் பசியால் ஊறும் உமிழ்நீரை ஒரு புறம் துப்புவதுமாகத் தவித்தான். அடிக்கடி வலியால் முகத்தைக் கோணியவாறு வயிற்றைப் பிடித்துக் கொண்டான். வழியில் வயலிலிருந்து பிடுங்கிய காரட்டுக் கிழங்கைக் கவனமில்லாமல் பச்சையாகத் தின்றதன் பயன் இது.

''ஜார்ஜியப் பிரபு வம்சத்தைச் சேர்ந்த நான், என் சொந்த நகரத்துக்குள் பட்டப்பகலில் இப்படிக் கந்தலும் அழுக்குமாகப் போவேன் என்று எண்ணுகிறாயோ? மாட்டேன்!.. நாம் பொழுது சாயும் வரை காத்திருப்போம். நில்லு!''

நாங்கள் ஒரு வெற்றுக் கட்டடத்தின் சுவரோரமாக உட்கார்ந்து, கடைசிப் புகையிலைத் தூளை ஆளுக்கு ஒரு காகிதத்தில் சுருட்டிக்கொண்டு குளிரால் நடுங்கியவாறு புகைத்தோம். இராணுவ-ஜார்ஜியச் சாலையிலிருந்து குப்-குப்பென்று பலத்த காற்று வீசிற்று. ஷக்ரோ துயரப் பாட்டு ஒன்றைப் பற்களின் ஊடாகப் பாடியவாறு உட்

கார்ந்திருந்தான்... நானோ, வெதுவெதுப்பான அறையையும் நாடோடி வாழ்வுடன் ஒப்பிடுகையில் நிலைத்த வாழ்வுக்கு உள்ள பிற அனுகூலங்களையும் பற்றி எண்ணமிட்டுக் கொண்டிருந்தேன்.

''போவோம்!'' என்று உறுதியைக் காட்டும் முகத்துடன் எழுந்தான் ஷக்ரோ.

இருட்டியது. நகரில் விளக்குகள் ஏற்றப்பட்டன. அந்தக் காட்சி அழகாக இருந்தது: நகரம் எந்தப் பள்ளத்தாக்கில் மறைந்திருந்ததோ அதைப் போர்த்திருந்த இருளில் விளக்குகள் ஒன்றன் பின் ஒன்றாக எங்கிருந்தோ தாவிக் குதித்தன.

''கேளு! இந்த மூடு தொப்பியை நீ எனக்குக் கொடு, நான் முகத்தை மூடிக் கொள்கிறேன்... இல்லாவிட்டால் பழக்கமானவர்கள் என்னை அடையாளம் கண்டு கொள்வார்கள், ஒரு வேளை...''

நான் மூடு தொப்பியைக் கொடுத்தேன். நாங்கள் ஓல்கின்ஸ்காயா வீதி வழியே போய்க் கொண்டிருந்தோம். ஷக்ரோ ஏதோ நிச்சயமான மெட்டைச் சீழ்க்கை அடித்துக் கொண்டிருந்தான்.

''மக்சீம்! குதிரை டிராம் நிலையம் தெரிகிறது அல்லவா—வெரீஸ்கி பாலம்? அங்கே உட்கார்ந்து எனக்காகக் காத்திரு! தயவு செய்து காத்திரு! நான் ஒரு வீட்டுக்குப் போய், தாயார் தகப்பனார் பற்றி ஒரு நண்பனிடம் விசாரித்து விட்டு வருகிறேன்...''

''சீக்கிரம் வந்து விடுவாய் அல்லவா?''

''இதோ! ஒரு நொடியில்!..''

இருண்ட, குறுகலான சந்து ஒன்றில் அவன் சட்டென்று புகுந்து அதில் மறைந்து விட்டான் — என்றென்றைக்கும்.

அநேகமாக நான்கு மாதக் காலம் என் வழித் துணைவனாக இருந்த இந்த மனிதனை அப்புறம் நான் சந்திக்கவே இல்லை. ஆனால் நல்லுணர்ச்சியுடனும் குதூகலச் சிரிப்புடனும் அவனைப் பற்றி அடிக்கடி நினைத்துக்கொள்கிறேன்.

மூதறிஞர்களால் எழுதப் பெற்ற பெருஞ் சுவடிகளில் காணக் கிடைக்காத பல உண்மைகளை அவன் எனக்குக் கற்பித்தான், ஏனென்றால் வாழ்க்கையின் விவேகம் மனிதர்களின் விவேகத்தைக் காட்டிலும் எப்போதும் அதிக ஆழமும் விரிவும் உள்ளது.

**1894**

**வாசக நண்பர்களுக்கு**

*இந்தப் புத்தகத்தைப் பற்றியும் இதன் தயாரிப்பைப் பற்றியும் தங்கள் கருத்தையும் அடுத்து வரும் வெளியீடுகள் சம்பந்தமாகத் தங்கள் ஆலோசனைகளையும்* **ராதுகா பதிப்பகம்** *மகிழ்வுடன் வரவேற்கிறது. கடிதங்களைத் தயை செய்து*

**Raduga Publishers, 17, Zubovsky Boulevard, Moscow 119859, USSR**

*என்ற முகவரிக்கு அனுப்புங்கள்.*

## விற்பனையாளர்கள்
## நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் பிரைவேட் லிமிடெட்

**தலைமை அலுவலகம்**

41பி, சிட்கோ இண்டஸ்ட்ரியல் எஸ்டேட்,
சென்னை — 600098

**ஷோ-ரூம்**

136, மவுண்ட் ரோடு, சென்னை — 600002

**கிளைகள்**

80, மேலக் கோபுர வீதி, மதுரை — 625001
87/89, ஒப்பணக்கார தேரு, கோயம்பத்தூர் — 641001
சிங்காரத் தோப்பு, திருச்சிராப்பள்ளி — 620008
செர்ரி ரோடு, சேலம் — 636001
1எ, திருவனந்தபுரம் சாலை, வண்ணாரப் பேட்டை, திருநெல்வேலி — 627003

**விற்பனை நிலையம்**

66, கீழராஜ வீதி, தஞ்சவூர்

## விரைவில் வெளிவரவிக்கும்
## ராதுகா பதிப்பகத்தின் புதிய வெளியீடு கள்

# நி. கோகல். அரசு ஆய்வாளர்

### நகைச்சுவை நாடகம்

மாபெரும் ருஷ்ய எழுத்தாளர் நிக்கலாய் கோகலின் (1809–1852) பிரபல இந்த நாடகம் முதன்முதலாக 1836ஆம் ஆண்டு மேடை யேற்றப்பட்டது. ருஷ்ய அதிகார வர்க்கத்திற்கு எதிராக எழுதப்பட்ட, அரசாங்க எந்திரத்தின் சிதைவு மற்றும் ஊழலை முழுமையாகப் படம் பிடித்துக் காட்டும் இந்த நகைச்சுவை நாடகம் இன்று கூட தனது மதிப்பை இழக்கவில்லை.

**விரைவில் வெளிவரவிருக்கும்**
**ராதுகா பதிப்பகத்தின் புதிய வெளியீடு கள்**

# மாபெரும் தேசபக்தப் போரைப் பற்றிய கதைகள்

**மூன்று தொகுதிகளில்**

**மாஸ்கோச் சண்டை**
**லெனின்கிராடுக்கான பாதுகாப்பு**
**ஸ்தாலின்கிராடு சண்டை**

*நாஜிசத்தின் மீது அடையப்பட்ட வெற்றியின் 45ஆம் ஆண்டு நிறைவை ஒட்டி* **ராதுகா பதிப்பகம்** *இந்தத் தொகுப்பை அளிக்கிறது. இத் தொகுப்பு பிரபல சோவியத் இராணுவத் தளபதிகள், இராணுவ நிருபர்கள் மற்றும் எழுத்தாளர்களின் நினைவுத் திரட்டுகள் மற்றும் யுத்தகாலக் கதைகளைத் தன்னுள் அடக்கியுள்ளது. மூன்று தொகுதிகளும் மறக்க முடியாத உண்மை புகைப்படங்களைக் கொண்டுள்ளன.*

**ராதுகா பதிப்பகத்தில்**
**வெளியிட்ட**
**மக்ஸீம் கார்க்கியின் நூல்கள்**

*ம. கார்க்கி.* **தாய்.** *நாவல். மாஸ்கோ,* 1987
*ம. கார்க்கி.* **அர்தமோனவ்கள்** *(மூன்று தலை முறைகள்). நாவல். மாஸ்கோ,* 1987
*ம. கார்க்கி.* **மூவர்.** *நாவல். மாஸ்கோ,* 1989
*ம. கார்க்கி.* **எகோர் புளிச்சோவ்.** *நாடகம். மாஸ்கோ,* 1988